

16வது இதழ்
ஒக்டோபர், 2010






வெளியீடு:
*தமிழர் வகைதுறைவள நிலையம் (தேடகம்)
ரொரன்டோ, கனடா.*

**Published by:**
***Tamil Resource Centre (Thedakam) Toronto, Canada***

தொகுப்பு:
*தேடல் ஆசிரியர் குழு*

அச்சு:
*விவேகா அச்சகம்*

வரைகலை:
***JayaCS***

ஓவியங்கள்:
***'The Genocide' by Rima Mardoyan***
*(முன் அட்டை)*

***Genocide No.1 by Daphne Odjig***
*(பின் அட்டை)*

தட்டச்சு உதவி:
*மதி, கௌசல்யா, ராஜி லோகன், ரட்ணம் சாந்தநாதன், பிரதீபா*

தொடர்புகளுக்கு:
**Contact Info:**
***thedakam@gmail.com***
***www.trcto.org***



# இன அழிப்பு அரசியல் .....

இலங்கைத் தமிழ் மக்களின் இருப்பும், தமிழீழ விடுதலைப் புலிகளின் தமிழீழத்திற்கான ஆயுதப் போராட்டமும், இலங்கை இந்திய சீன அரசுகளின் கூட்டு இராணுவ நடவடிக்கை மூலமும் மேற்கத்தைய அரசுகளின் குழிபறிப்பு நடவடிக்கை மூலமும் இலங்கை மண்ணிலிருந்து முற்று முழுதாக அழித்தெறியப்பட்டுள்ளது. புலிகளை அழிப்பது என்ற பெயரில் கிழக்கில் தொடங்கிய இன அழிப்பு யுத்தம் பின்னர் பயங்கரவாதிகளிடமிருந்து மக்களை மீட்கிறோம் என்ற பொய்ப் பரப்புரை மூலம் வன்னிப்பெருநிலம் மீது மிகவும் கொடூரமாக முன்னகர்த்தப்பட்டது. எல்லா வழிகளையும் மூடிவைத்து ICRC, UNCHR, சர்வதேச மனித உரிமை அமைப்புகளையும், பத்திரிகைகள், தொலைக்காட்சி ஊடகங்களையும் வன்னியிலிருந்து முற்று முழுதாக வெளியேற்றி கடல், வான், தரை வழி கனரக ஆயுதங்களுடன் யுத்த விதி முறைகளை மீறி இரசாயன ஆயுதங்களையும் பாவித்து வன்னிவாழ் மக்கள் மீது ஒரு இன அழிப்பு யுத்தத்தையே இலங்கை அரசு நடாத்தி முடித்திருக்கின்றது.

தமிழ் மக்கள் முள்வேலித் தடுப்பு முகாம்களிலும், சரணடைந்த போராளிகள் படுகொலை செய்யப்பட்டும் எஞ்சிய 12000இற்கும் மேற்பட்ட விடுதலைப்புலிகளின் உறுப்பினர்கள் சித்திரவதை முகாம்களில் அடைக்கப்பட்டும், எண்ணிலடங்காதோர் காணாமற் போயுமுள்ள நிலையில், இலங்கை மண்ணை முத்தமிட்ட ஜனாதிபதி மகிந்த ராஜபக்ஷே யுத்தம் முடிவிற்கு வந்ததாக அறிவித்தார். அரச ஊடகங்களும், அமைச்சர்களும் யுத்த வெற்றிக் கொண்டாட்டங்களை சாதாரண சிங்களக் கிராமங்கள் வரை எடுத்துச் சென்று சிங்கள இனத்தின் வெற்றியாகவே கொண்டாடி முடித்தனர். யுத்த வெற்றியின் உப விளைவாக முன்கூட்டியே அறிவிக்கப்பட்ட ஜனாதிபதித் தேர்தலில் யுத்த வெற்றிப் பிரச்சாரங்களை முன்வைத்து வெற்றி பெற்ற மகிந்த ராஜபக்சே தன்னை முடிசூடா மன்னனாகப் பிரகடனம் செய்தார். அபிவிருத்தியின் அரசியல் யுத்தம் முடிவடைந்து விட்டதாகவும் வடக்கு, கிழக்கு அபிவிருத்தி நோக்கி செல்லப் போவதாகவும் தமிழ் மக்களின் அரசியல் பிரச்சினை முள்ளிவாய்க்காலில் புலிகளுடன் முடிந்து போன ஒரு நிகழ்வாகவும் ஜனதிபதியால் பகிரங்கமாகவே அறிவிக்கப்பட்டது. இதையே தான் டக்ளஸ் தேவானந்தா தொடக்கம், “சிறைக்கைதி” KP தலைமையிலான புலிகள் வரை தமிழ் மக்களின் முன்னால், அபிவிருத்தி என்ற பெயரில் எடுத்து வருகின்றனர். அப்படி என்ன தான் அபிவிருத்தி வடக்கிலும், கிழக்கிலும் நடைபெற்று வருகின்றது?? இன அழிப்பின் இன்னுமொரு வடிவம் தான் அபிவிருத்தி என்ற சொல்லாடல். வெள்ளைக்காரன் ஏன் றோட்டையும், தண்டவாளத்தையும் போட்டான் என்பதை ஐந்தாம் வகுப்பு சமூகக்கல்வியில் கற்றவர் நாம். ஆனால் பிராந்திய வல்லாதிக்கச் சக்திகளான சீனர்களும், இந்தியர்களும் ஏன் கார்ப்பெட் றோட்டுகளும், துறைமுகங்களும், அனல் மின்நிலையங்களும், மாதிரிப் பண்ணைகளும், இன்னும் வெளிவராத திட்டங்களையும் செய்கிறார்கள் என்ற அரசியலைக் கட்டுடைக்க மறுக்கிறோம். Airtel கோபுரங்களும், Carpet றோட்டுகளும் தமிழ் மக்களுக்கு கண்ணியமான வாழ்வை ஏற்படுத்தித் தருமா என்ன?

கிழக்கும், வன்னிப் பெரு நிலமும் அதன் கடல் வளமும் இந்திய சீன அரசுகளின் சுரண்டல்களுக்காக முற்று முழுதாக தாரை வார்க்கப்பட்டுள்ளது. கிழக்கில் தமிழரும், முஸ்லிம்களும் திட்டமிடப்பட்டு அபிவிருத்தி என்ற பெயரில் நசுக்கப்பட்டுக் கொண்டே வருகின்றனர். கிழக்கின் நிலங்களும் வளங்களும் அபிவிருத்தியின் பெயரில் கையகப்படுத்தப்பட்டு திட்டமிட்ட சிங்களக் குடியேற்றங்களாக மாறிவிட்டன. இதுதான் அரசால் அறிவிக்கப்பட்ட “கிழக்கின் விடியல்”. இவர்களே இப்போது “வடக்கின் வசந்தத்திற்காகவும்” அபிவிருத்தியை மேற்கொள்கிறார்கள்.

இன அழிப்பு யுத்தம் பெருமளவிலான மக்களை அகதிகளாகவும், அதற்குக் கீழாகவும் வாழ நிர்ப்பந்திக்கின்றது. வன்னியில் வாழ்ந்த மக்கள் மட்டுமா சிறைப் பிடிக்கப்பட்டனர், அவர்களோடு சேர்த்தே, அவர்களின் விளை நிலமும், கடல் வளமும் சிங்கள இனவாத அரசினால் சிறைப்பிடிக்கப்பட்டுள்ளது. ஒரு தேசிய இனத்தின் கண்ணியமான இருப்பிற்கு மொழி, பண்பாடு (தொடர்ச்சி 11ம் பக்கம்)

# ஈழத் தமிழ் இலக்கியம் எதிர்நோக்கும் சவால்கள்

சி. சிவசேகரம்

"ஈழத் தமிழ் இலக்கிய அடையாளத்தின் உருவாக்கம் சங்க காலத்திலிருந்தே ஈழத் தமிழ்க் கவிதை இருந்து வருகிறது என்று பெருமை பேசுகிறோம். எவ்வாறாயினும் நம்முடைய இலக்கிய வளர்ச்சி அங்கிருந்து இடையறாத் தொடர்ச்சியுடன் வளர்ந்து வந்ததல்ல."

• சமகால ஈழத் தமிழிலக்கியத்தின் தொடக்கங்கள் பற்றிக் கருத்து முரண்பாடுகள் இருக்கின்றன. எனினும், ஈழத் தமிழிலக்கியத்தின் முக்கியமான திருப்புமுனை அது தன்னை ஈழத்து இலக்கியமெனத் தெளிவாக அடை யாளங் காட்டியமை என்பேன். இத் திருப்பத்திற்குச் சமூக அடிப்படையிலான காரணங்கள் இருந்தன.

• நமது நாட்டார் இலக்கியங்கள் எவ்விதமான அடையாளப்படுத்தலுக்கான தேவையும் இல்லாமற் தமக்குரிய மொழி வழக்கினூடாகச் சமூக வாழ்வின் பிரதிபலிப்பாகத் தம்மை நிலைநிறுத்திக் கொண்டன. செவ்வியல் இலக்கியங்களே இலக்கியங்கள் என்கிற பண்டித மனப்பாங்கும் மரபு சார்ந்த செய்யுளன்றி எதுவுமே செய்யுளாகா என்கிற பழமைவாதமும் சமுதாயத்தின் மேனிலையில் இருந்தோரிடையே வலுவாக இருந்தன. ஈழம் தமிழறிஞர்களையும் ஆய்வாளர்களையும் உருவாக்கியபோதும், அவர்கள் பொதுவாகவே தமிழ் நாட்டையோ இந்தியாவையோ தாய் நாடென்றும் இலங்கையைச் சேய் நாடென்றும் நோக்குவோராக இருந்தனர். இந்தப் பிணைப்பு இறுக்கமான சமூகத் தொடர்புகளின் அடிப்படையிலானதல்ல. எனினும், 'சைவமும் தமிழும்' என்கிற பழமைவாதக் கொள்கைக்கு அது உடன்பாடாக இருந்தது.

• பொருளாதார அடிப்படையிற் தமிழ்நாட்டினின்றும் இந்தியாவினின்றுங் கணிசமான அளவு சுயாதீனமானதாக நமது இருப்பு அமைந்திருந்தது. இலங்கை எனுந் தீவின் பிற சமூகங்களுடனான உறவின் விளைவாகவும் இந்தியாவினின்று வேறாகவே பல நூற்றாண்டுக் காலமாக நிருவகிக்கப்பட்டதன் விளைவாகவும், நமக்குரிய வாழ்க்கை முறைகளையும் பண்பாட்டுக் கூறுகளையும் தமிழகத்தின் மொழி வழக்கினின்று வேறுபட்ட மொழி வழக்குக்களையும் கொண்டிருந்தோம். எனி னுஞ், செம்மொழியும் செவ்விலக்கியமும் எனும் போதும் சைவமும் தமிழும் என்று மத அடையாளம் வலியுறுத்தப்படும் போதும், தமிழ் நாடும் இந்தியாவும் நமது தனித்துவத்தை மேவி விட முடிந்துள்ளது.

• இந்தத் தாய்-சேய் அடையாளப்படுத்தல் அரசியலிலுஞ் செல்வாக்குச் செலுத்தியது. இந்திய அசியற் செல்வாக்கின் ஆரோக்கியமான ஒரு அம்சமாக இந்திய விடுதலை இயக்கத்தின் தாக்கம் இருந்தது. அதன் விளைவாகவே, இலங்கையின் சுதந்திரம் பற்றிய முதலாவது சிந்தனைகள் யாழ்ப்பாணத்தில் வேர் விட்டன அதன் பின்பான முக்கியமான தாக்கமாகத் திராவிட இயக்கத்தைக் குறிப்பாகப் பகுத்தறிவுச் சிந்தனையைக் கூறலாம். இடதுசாரி இயக்கம் இலங்கையில் வேர்கொண்ட பின்னர் இந்திய இடது சாரிகளுடன் தொடர்புகள் ஏற்பட்டன.

• இலங்கைத் தமிழ்த் தேசியம் என்பது கொலனிய ஆட்சியின் கீழ் உயர் பதவிகட்கான போட்டியின் விளைவாகச் சிங்கள உயர் வகுப்பினருக்கும் தமிழ் உயர் வகுப்பினருக்கும் இடையிலான முரண்பாடாக உருவானது. சிங்களப் பேரினவாதம் தமிழ் மக்களைத் தீண்டும் வரை, தேசிய இன முரண்பாடு என்பது சட்டசபை (அரசுச் சபை), அமைச்சுச் சபை என்பவற்றிற் பதவிக்கான போட்டி என்ற எல்லையை மீறவில்லை. மலையகத் தமிழரின் வாக்குரிமையும் குடியுரிமையும் பறிக்கப்பட்ட பின்பு, சிறு அளவில் ஏற்பட்ட அச்சங்களே, சிங்களம் அரசகரும மொழியாக வேண்டும் என்ற கோரிக்கை வலுப்பெற்ற பின்பு, தமிழ் இன உணர்வாகவும் தமிழ்த் தேசிய வாதமாகவும் உருப்பெற்றன.

• ஈழத் தமிழ் இலக்கியம் சென்ற நூற்றாண்டுத் தொடக்கத்தினளவில் நவீனத்துவத்தை உள்வாங்கத் தொடங்கி விட்டது. நவீனத்துவம் நோக்கித் தமிழ் மொழியின் பெயர்வு, அதற்கு முன்னரே ஆங்கிலேயர் ஆட்சிக் காலத்தில்

மிசனரிமாரின் கல்வி முயற்சிகளின் தொடர்ச்சியாக நிகழ்ந்தது எனலாம். ஆறுமுக நாவலர் அதன் முக்கியமான ஒரு கருவியாக இருந்தார். எனினுந், தமிழ்ப் புலமை மரபு மொழியிலும் அதை விடத் தீவிரமாகப் பேசுபொருளிலும் புதியன புகுதலை விரும்பாததாகவே இருந்தது.

• யாழ்ப்பாணக் குடாநாடே தமிழரது கல்வியின் மையமாக இருந்ததாற் தமிழ் இலக்கிய முயற்சிகள் பெருமளவும் அங்கிருந்தே தொடங்கினாலும், தனிப்பட்ட முக்கியமான முயற்சிகள் வெளி யிலும் மேற்கொள்ளப்பட்டன. ஆங்கில இலக்கியத்தின் மூலம் நமக்குப் பழக்கப்பட்ட நெடுங்கதை வடிவமான 'நாவல்' முதலிலும் சிறுகதை பின்னரும் நம்மைவந்தடைந்ன. இலக்கிய முயற்சிகள், ஒரு புறம் நமக்குப் பரிச்சயமான ஆங்கில இலக்கியங்களைப் பார்த்துச் செய்கிற போக்கைக் கொண்டிருந்தாலும், தமக்கான நோக்கங்களையுங் கொண்டிருந்தன. அவை சமுதாயத்தில் ஆதிக்கஞ் செலுத்திய அற விழுமியங்களை வலியுறுத்தின. எனவே தான் ஈழத் தமிழ்ச் சமுதாயத்தைப் பீடித்திருந்த இரண்டு முக்கியமான நோய்களான சாதியமும் ஆணாதிக்கமும் கேள்விக்குட்படக் காலமெடுத்தது. வர்க்கம் என்கிற சமூகப் பரிமாணம் இடதுசாரி இயக்கத்தின் எழுச்சியை ஒட்டியே இலக்கியத்திற் பதியப் பெற்றது. எனினும், நிலவுடைமைக்கால அற விழுமியங்களின் தொடர்ச்சியாக, மனிதாபிமானமும் பரோபகார உணர்வுகளும், கொடுமைகட்கு எதிரான கருத்துக்களாகக் கருணை, பரிவு என்கிற கண்ணோட்டங்களில் வெளிப்பட்டன.

• தமிழகத்திற் சாதியத்திற்கும் ஆணாதிக்கத்திற்கும் எதிரான காத்திரமான முதலாவது குரல் ஈ.வெ.ராவினது எனலாம். எனினும் சாதிக் கொடுமைக்கு எதிரான சீர்திருத்தச் சிந்தனைகளும் பெண்களின் சமத்துவம் பற்றிய குரல்களும் அவருக்கு முதலே எழுந்துள்ளன. பாரதியும் குறிப்பிடத்தக்க அளவுக்கு அவற்றை அடையாளப்படுத்தினார். அவற்றின் எதிரொலிகள் இலங்கையில் ஏற்பட்ட அரசியல் மாற்றங்களை ஒட்டி ஈழத்து இலக்கியப் பரப்பிலும் எழுந்தன.

• சமூகப் பிரச்சனைகளை முன்வைத்து இலக்கியம் படைப்பது எப்போது பரவலான இலக்கிய நடை முறையானதோ, அப்போது தான் ஈழத் தமிழ் இலக்கியம் தனக்கான தனித்துவமான அடையாளத்தை வெளிப்படுத்தியது. மறுமலர்ச்சி இயக்கம் இவ் வகையில் முக்கியமான ஒன்றாகிறது. எனினும் அதன் சமூக நோக்கும் இலக்குக்களும் மரபுசார்ந்த விழுமியங்களினின்று முற்றாக விடுபட இயலாதிருந்தன.

**"தமிழ்த் தேசியவாதத் தலைவர்களுள் மிக முக்கியமான சிலர் பெருமளவும் ஆங்கிலத்திலேயே பேசுவோராகவும் முறையாகத் தமிழ் அறியாதோராயும் இருந்த போதும், தூய தமிழ், செந்தமிழ் என்கிற கருத்துக்களை வலியுறுத்துகிற போக்கு தமிழ்த் தேசியவாதிகளிடையே வலுவாயிருந்தது."**

## தேசிய இலக்கியம்

ஈழத் தமிழ் இலக்கியம் இந்தத் தீவி ன் தனித்துவமான சமூக அமைப்பிற்கும் வாழ்விற்கும் அதில் வாழும் தமிழ்ப்பேசும் சமூகங்களின் மொழி வழக்கிற்கும் உரிய ஒன்றாக எடுத்த எடுப்பிலேயே தன்னை அடையாளங் காட்டிக் கொள்ளவில்லை. அது பேசிய விடயங்கள் இந்த மண்ணையும் மண்ணின் மக்களையும் பற்றியதாகவும் அமையத் தொடங்கிய போது, ஈழத்தின் தேசிய இலக்கியம் என்ற ஒன்று நிலை பெற்றுவிட்டது. (ஈழம் என்பது இலங்கை என்ற நாட்டைக் குறிப்பது என்பதையும் அது தமிழ்த் தேசி ய இனத்திற்கு வரையறுக்கப்பட்டதல்ல என்பதையும் இவ்விடத்து வலியுறுத்துகிறேன்). எவ்வாறாயினும் அதன் மொழிநடை இலக்கணச்சுத்தமான மரபுத் தமிழுக்குரியதாக இல்லாதபோது தமிழகத்துப் பேச்சு மொழிக்கு நெருக்கமாகச் சென்றுள்ளமையை நாம் கண்டிருக்கிறோம். அதற்கு இரண்டு காரணங்கள் இருந்தன. ஒன்று இந்தியா தாய்நாடு என்கிற சிந்தனையுடன் ஒட்டித் தமிழ் நாட்டில் அங்கீகாரம் பெறுவதை முக்கியப்படுத்தும் போக்கு. மற்றது இந்தியாவிலிருந்து பெரும் எண்ணிக்கையில் நூல்களும் சஞ்சிகைகளும் ஈழத்திற்கு இறக்கு மதியாகிப் பரவலாக வாசிக்கப்பட்டமை. எனவே, நமது படைப்பாளிகளிற் சிலரது ஆக்கங்களிலேனும் தமிழகத்து அக்கிரகாரத்துத் தமிழ் வாடை இருந்த அளவுக்குக் கூட இந்த மண்ணின் பேச்சு வழக்கு இல்லாமலிருந்தது.

• தேசிய இலக்கியம் தன்னைப் பிரகடனப்படுத்திக் கொள்ளாமலே இந்த மண்ணில் நிலைகொண்டு விட்டாலும், அதை அடையாளப்படுத்தி அதை இந்த மண்ணின் மொழிநடையுடனும் வாழ்வுடனும் மேலும் இறுக்கமாகப் பிணைப்பதில் முற்போக்குச் சிந்தனையாளர்கட்குப் பெரும் பங்கு இருந்தது. பேச்சுத் தமிழை நாடகங்கட்கான மொழியாக்குவதற்காகக் குரல்கொடுத்துச் செயற்பட்ட பேராசி ரியர் கணபதிப்பிள்ளை, மொழி பற்றிய முற்போக்காகன பல கருத்துக்களை உடையவராயிருந்தார். இவ்வாறு பலரைக் குறிப்பிடலாம்.

• எவ்வாறாயினும் தேசிய இலக்கியம் என்ற கருத்தாக்கத்தை ஈழத்துத் தமிழ் இலக்கியத்தின் தனித்துவத்தை வலியுறுத்தும் நோக்கில் தமிழ்நாட்டின் தமிழ் இலக்கியத்தினின்று வேறுபட்டதாக ஆனால் எவ்விதமான பகைமைக்கும் இடமற்ற முறையில் வலியுறுத்தியதில் ஈழத் தமிழ் இடதுசாரிகளதும் முற்போக்கு எழுத்தாளர் சங்கத்தினதும் பங்கு பெரியது.

• தேசிய இலக்கியக் கோட்பாட்டின் முக்கியமான ஒரு பகுதியாகப் பேச்சு மொழிக்கான இடம் வலியுறுத்தப்பட்டது. தவிர்க்க இயலாமலே, அது மண் வாசைன, பிரதேச மொழி வழக்கு என்கிற திசைகளில் எழுத்தை நெறிப்படுத்தியது. இங்கு, இடதுசாரிகட்கும் தமிழ்த் தேசி யவாதிகள் எனப்பட்டோர்க்குமிடையே முரண்பாடுகள் தோன்றின.

• தமிழ்த் தேசியவாதத் தலைவர்களுள் மிக முக்கியமான சிலர் பெருமளவும்

ஆங்கிலத்திலேயே பேசுவோராகவும் முறையாகத் தமிழ் அறியாதோராயும் இருந்த போதும், தூய தமிழ், செந்தமிழ் என்கிற கருத்துக்களை வலியுறுத்துகிற போக்கு தமிழ்த் தேசியவாதிகளிடையே வலுவாயிருந்தது. 1956ன் பின்பு, தம்மைத் தமிழின் காவலர்களாக நியமித்துக் கொண்ட பழமைவாதிகளும் தமிழரசுக் கட்சியினரும் நெருக்கங் கண்டனர். அதன் விளைவாக, முற்போக்கு இலக்கிய நெறி முன்னெடுத்த கருத்துக்கள் தொடர்பாக மட்டுமன்றிப், பேச்சுமொழியின் பாவனை, மண் வாசைன, தேசிய இலக்கியம் போன்றவை தொடர்பாகவும் பகைமையான நிலைப்பாட்டைத் தமிழ்த் தேசியவாதிகள் எனப்பட்டோர் மேற்கொண்டனர். அன்றைய முற்போக்கு இலக்கியம் ஒடுக்கப்பட்ட மக்கள் சார்பாகப் பேசியதற்கும் மேலாக, ஒடுக்கப்பட்ட சமூகப் பிரிவினரிடையே இருந்து படைப்பாளிகளையும் உருவாக்கியது. அதன் விளைவாகவே, சிங்கள இலக்கியத்துடன் ஒப்பிடுகையில், தமிழ் இலக்கியத்தில் இடதுசாரிச் சிந்தனையின் பாதிப்பு கூடிய வலுவுடன் இருந்தது. பாராளுமன்ற அரசியல் அடிப்படையில் நோக்கினால், அற்பப் பாராளுமன்றப் பிரதிநிதித்துவத்தையே கொண்டிருந்த போதும் இடதுசாரிகளின் இலக்கியப் பிரதிநிதித்துவம் பெரிதாக இருந்தது.

• இடதுசாரி இலக்கிய ஏடுகள் அதிக எண்ணிக்கையில் வராத போதும், கிடைத்த களங்களை எல்லாம் முற்போக்குப் படைப்பாளிகள் பயன்படுத்தினர். முற்போக்கு எழுத்தாளர் சங்கம் படைப்பாளிகளை நெறிப்படுத்துவதில் நல்லதொரு பங்கு வகித்தது. பத்திரிகையாளராகவும் பல்கலைக்கழக ஆசிரியராகவும் திறனாய்வாளராகவும் கைலாசபதி ஆற்றிய பங்கு இவ்விடத்திற் குறிப்பிட வேண்டியதாகும்.

• தமிழ்த் தேசியவாதிகளிடம் இருந்த பொருள் வளமும் பிரசுர வசதிகளும் அரசியற் செல்வாக்கும் ஏன் ஒரு தமிழ்த் தேசியவாத இலக்கியப் போக்கை விருத்தி செய்து வலுப்படுத்தத் தவறியது என்பதைத் தமிழ்த் தேசியவாதத்தின் வர்க்க நிலைப்பாட்டின் அடிப்படையிலே விளங்கிக் கொள்ள இயலும்.

• இடதுசாரி எதிர்ப்பு, தமிழ்த் தேசியவாத எல்லைகட்கு வெளியிலும் செயற்பட்டது. தனிப்பட்ட முரண்பாடுகளும் சொந்த நலன்களும் இடதுசாரிகள் பற்றிய முற்சாய்வான சிந்தனைகளும் இலக்கியத் துறையிற் தமக்கான இடங்களைத் தேடிக் கொண்டன.

• எவ்வாறாயினும், 1956 அளவிற் தமிழ் இன உணர்வு மேலோங்கிய நிலைமைகளின் போதும், இடதுசாரிகளே தேசிய இலக்கியம், மண்வாசைன, சமுதாயச் சார்பான இலக்கியம் எனுமாறாகத் தமிழ்த் தேசியவாதிகள் முன்னெடுத்திருக்கக்கூடிய இலக்கியக் கொள்கைகளை முன்வைத்து ஈழத் தமிழ் இலக்கியத்திற்கு உறுதியான ஒரு தளத்தை நிறுவினர். ஈழத் தமிழ் இலக்கியத்தை இழிவாகக் கருதிய தமிழக இலக்கிய மேட்டுக்குடிகட்கு எதிராக அவர்களே போர்க்கொடி எழுப்பினர். அவர்களது முயற்சியின் விளைவாகவே ஈழத்து இலக்கிய ஏடுகளாற் பொருள் நட்டமின்றி வெளிவர முடிந்தது.

• இடதுசாரிகள் முன்னெடுத்த மக்கள் சார்பான, மக்களது பேச்சு மொழியில் அமைந்த இலக்கியம் தமிழ்ப் பழமைவாதிகளாலும் அவர்களுடன் கூட்டுச் சேர்ந்த இடதுசாரி விரோதிகளாலும் இழிசினர் இலக்கியம் என்று இழிவு செய்யப்பட்டதைத் தமிழ்த் தேசியவாதிகள் கண்டிக்கத் தவறினர்.



**முற்போக்கு இலக்கியம் என்பது எப்போதும் இடதுசாரி இலக்கியமாக அமைந்ததுமில்லை அமைய வேண்டியதுமில்லை. நாறிப்போன பழமைகளினின்று சமுதாயத்தை விடுவிக்கும் நோக்குடனும் அறஞ்சார்ந்த விழுமியங்களுடனும் அமையும் படைப்புக்கள் முற்போக்கு இலக்கியம்**



## முற்போக்கு இலக்கியம்

முற்போக்கு இலக்கியம் என்பது எப்போதும் இடதுசாரி இலக்கியமாக அமைந்ததுமில்லை அமைய வேண்டியதுமில்லை. நாறிப்போன பழமைகளினின்று சமுதாயத்தை விடுவிக்கும் நோக்குடனும் அறஞ்சார்ந்த விழுமியங்களுடனும் அமையும் படைப்புக்கள் முற்போக்கு இலக்கியம் என்ற பரப்பினுள் அடங்குவதால் முற்போக்கு இலக்கியக் கோட்பாடு இடதுசாரிச் சிந்தனையுடையோரை இயல்பாகவே ஈர்த்தது.

• ஈழத்து முற்போக்கு இலக்கியத்தின் தொடக்கப் பகுதி பொதுவாகச் சமுதாய விமர்சனமாகவே இருந்தது. ஒடுக்கப்பட்ட மக்களுக்கான உரிமைக் குரல்களும் தொழிலாளி வர்க்கப் போராட்டங்களும் அதிற் பதிவாகின. சமூக நீதிக்கான கோரிக்கைகளாகவும் அன்றைய படைப்புக்கள் தம்மை அடையாளப் படுத்தின. சிறுகதைகளும் அடுத்தபடியாகக் கவிதைகளும் இடதுசாரிச் சிந்தனையின் முக்கிய வாகனங்களாயின. ஈழத்து முற்போக்கு இலக்கிய இயக்கத்தின் தொடக்கக் நிலையில் கதைகளினளவுக்குக் கவிதை எழுச்சி பெறாமைக்கு 1970கள் வரை கவிதையில் மரபின் பிடி வலுவாக இருந்தமை ஒரு காரணமாக இருந்திருக்கலாம். அதுவே பிரதானமான காரணமென நான் நம்பவில்லை.

• எவ்வாறாயினும், 1964ம் ஆண்டு இலங்கை இடதுசாரி இயக்கத்தின் இரண்டு பிரதான கட்சிகளிலும் பிளவுகள் ஏற்பட்டதை அடுத்துப் புரட்சிகர அரசியல் மாற்றம் பற்றிய கருத்துக்கள் எழுச்சி பெற்றன. தமிழ் இலக்கியப் பரப்பில் கம்யூனிஸ்ற் கட்சியின் செயற்பாடு வலுவாக இருந்ததன் பயனாக, அக் கட்சியில் ஏற்பட்ட பிளவின் தாக்கம் தமிழ் இலக்கியப் பரப்பில் முக்கியமானதாக இருந்தது.

• டொமினிக் ஜீவாவின் தனிப்பட்ட முயற்சியின் விளைவாக மல்லிகை என்ற சஞ்சிகை இடையறாது வந்ததை விட்டால், பாராளுமன்ற இடதுசாரிகளின் வசமாகிய முற்போக்கு எழுத்தாளர் சங்கம் ஏறத்தாழச் செயலிழந்து போயிற்று எனலாம். போராட்ட

*"தமிழ்த் தேசியத்தின் பழமைவாத நோக்கு முற்போக்கு இலக்கத்திற்கு ஈடுகொடுக்க இயலாமற் தடுமாறிய போதும், முற்போக்கு இலக்கியத்திற்கு எதிரான முனைப்புக்கள் வெவ்வேறு வடிவங்களிற் தோன்றின. தூய அழகியல்வாதம் அவற்றுள் ஒன்று."*

இலக்கியச் சிந்தனைகள் தமக்கான களங்களைத் தேடிக் கொண்டன. 1966 ஒக்டோபரில் தொடக்கப்பட்ட தீண்டாமை ஒழிப்பு வெகுசன இயக்கமும் அதன் போராட்டங்களும் தமிழ் இலக்கியத்தின் மீது ஏற்படுத்திய தாக்கம் பெரிது. கருத்தாழமும் உணர்ச்சி வேகமும் இணைந்த கவிதைகளை அப் போராட்டச் சூழல் இயலுமாக்கிற்று. நாடகம், சிறுகதை, நாவல் எனப் பிற வடிவங்களிலும் அப் போராட்டத்தின் தாக்கம் புலனாயிற்று.

• அதையொட்டிய காலப்பகுதியில் மலையகத்திற் போர்க்குணமிக்க தொழிற்சங்க இயக்கமாகச் செங்கொடிச் சங்கம் செயற்பட்டது. மலையகத்தின் இடதுசாரி, முற்போக்குப் படைப்பாளிகட்கு அது ஒரு பெரும் ஊக்குவிப்பாய் இருந்த போதும், மலையகத்தின் படைப்புலகை விருத்தி செய்யக்கூடிய ஒரு சூழலின் உருவாக்கததிற்குத் மலையகம் கல்வியிற் பின்தங்கியிருந்தமையும் தோட்டச் சமூக அமைப்பும் தடையாயிருந்தன. அத் தடைகளை மீறிப் போர்க்குணமிக்க படைப்புக்களை ஈந்த படைப்பாளிகள் மலையகச் சூழலில் உருவாயினர் என்பது முக்கியமானது.

• தமிழ்த் தேசியத்தின் பழமைவாத நோக்கு முற்போக்கு இலக்கியத்திற்கு ஈடுகொடுக்க இயலாமற் தடுமாறிய போதும், முற்போக்கு இலக்கியத்திற்கு எதிரான முனைப்புக்கள் வெவ்வேறு வடிவங்களிற் தோன்றின. தூய அழகியல்வாதம் அவற்றுள் ஒன்று. அதன் வேர்கள் தமிழகத்தின் இடதுசாரி எதிர்ப்பாளர்களிடையிலும் ஒரு பார்ப்பனிய வட்டத்தினுள்ளும் இருந்தன. அவற்றை விட, சி.ஐ.ஏ. நிறுவனம், என்கௌண்ட்டர் (Encounter) சஞ்சிகை மூலம் தூய அழகியல் வாதத்தைத் தூக்கிப் பிடித்தது. சி.ஐ.ஏயின் இலக்கிய முகவர்களாகச் செயற்பட்டோர், மிகவுங் காலங்கடந்து, 1980களிலேயே அம்பலப்படுத்தப்பட்டனர். இன்று வரை, இடதுசாரி எதிர்ப்பு என்பதை மட்டுமே நோக்காகக் கொண்ட ஒரு இலக்கியக் கூட்டணி தொடர்ந்தும் செயற்பட்டு வருகிறது என்பதையும் அது சமூகப் பொதுநோக்கற்ற சில இலக்கிய விக்கிரங்களை முன்னிறுத்தித் தனது வேலைத் திட்டத்தை முன்னெடுத்து வந்துள்ளது என்பதுங் கவனத்துக்குரியன.

## தமிழ்ப் பேசும் தேசிய இன அடையாளங்களும் பிரதேச அடையாளங்களும்

இலங்கைத் தமிழ் இலக்கியம் தமிழகத்தின் தமிழ் இலக்கியத்தினின்று தனது தனித்துவத்தை நிலை நிறுத்தியமை எவ்வளவு சரியானதோ அதே அளவுக்குப் பிரதேசமும் மதமும் பண்பாடும் சார்ந்த வேறுபாடுகள் இலக்கியத்தில் அடையாளம் பெறுவது சரியானது. ஏனெனில் இவ் வேறுபாடுகள் மொழி வழக்கில் முக்கியமாகப் பேச்சு மொழி வழக்கில் தம்மை வெளிப்படுத்துகின்றன. இவை தவறான பிரயோகங்களல்ல. இவை சமூக அங்கீகாரம் பெற்ற, தமிழின் வட்டார வழக்குக்கள். ஒரு பிரதேசத்தை அடையாளப் படுத்தும் ஒரு படைப்பில் அதற்கு முக்கியத்துவமுண்டு. இன்று முஸ்லிம்களும் மலையகத் தமிழ் மக்களும் தம் தனித்தவமான தேசிய இன அடையாளத்தை வலியுறுத்தி நிற்கிற சூழலில் மேற்கூறியவாறான தனித்துவங்கள் மேலும் முக்கிய மாகின்றன.

• தேசிய இலக்கியக் கொள்கையை முன்னெடுத்த முற்போக்கு இலக்கியவாதிகள் பிரதேச மொழி வழக்கிற்கும் பேச்சு மொழிக்கும் முக்கியத்துவம் வழங்கியமை முற்கூறிய அணுகுமுறைக்கு உரியது. அவ் அணுகுமுறை தமிழ்த் தேசியவாதம் சார்ந்து நின்ற பழமைவாதப் போக்கிற்கு உடன்பாடாக இருக்கவில்லை.

• குறுகிய தமிழ்த் தேசியவாதத்ததுடன் இணைந்து நின்ற பழமைவாதப் பிற்போக்குச் சிந்தன படைப்பிலக்கியத்தில் சாதரரண மக்களின் மொழி வழக்கை நிராகரித்து இழிசினர் இலக்கியம் என ஏளனஞ் செய்தது. அதன் விளைவாகக் கடும் போராட்டங்கள் நிகழ்தன. தற்போது மேட்டுக்குடி இலக்கியவாதிகளுடனும் பழமை வாதிகளுடனும் சமரசம் செய்துகொண்டுள்ள அன்றைய 'முற்போக்காளர்கள்' சிலர் அப் போராட்டங்களிலிருந்து தம்மை விலக்கிக் கொள்ள எடுக்கும் முயற்சிகள் பரிதாபமானவை.

• பேச்சு மொழியின் இலக்கியத் தகைமை ஏற்கப்பட்டமை, அதனுடைய தர்க்கரீதியான வழிச் சென்று வெவ்வேறு சமூக மொழிவழக்குக்களது சமத்துவத்தையும் ஏற்பதாகியது. வரலாற்றுச் சூழ்நிலைகளாற் தம்மைத் தனித் தேசிய இனங்களாக இனங்கண்டு அந்த அடையாளங்களை விருத்திசெய்ய முனைந்து நிற்கும் முஸ்லிம், மலையகத் தமிழ்த் தேசிய இனங்கட்கு அந்த ஏற்புடைமை ஒரு ஊக்கியாகச் செயற்பட்டது.

• எவ்வாறு ஈழத் தமிழ் இலக்கியம் தனது தனித்துவத்தை நிலைநாட்டியதோ அவ்வாறே அதே அளவு உரிமையுடன் ஈழத்தின் தமிழ்ப் பேசும் தேசிய இனங்களின் இலக்கியங்கள் தமது தனித்துவத்தை நிலைநாட்ட முடிந்தது. அத்துடன் அவ்வத் தேசிய இன அடையாளங்கட்கு உரிய பிரதேச அடையாளங்களையும் பெருமையுடன் பேண இயலுமாயிற்று.

• ஈழத்து முஸ்லிம் எழுத்தாளர்கள் முற்போக்கு இலக்கிய இயக்கத்தில் பெரும் பங்காற்றியோராவர். அவர்களின் படைப்புலகு பெருமளவும் மதச்சார்பற்றும் சமூகத்தில் ஒடுக்கப்பட்டவர் நிலைநின்று உலகை நோக்குவதாகவும் அமைந்ததற்கு முஸ்லிம் நவீன இலக்கிய முன்னோடிகள் முற்போக்கு இலக்கிய முகாமைச் சேர்ந்தோராயும் பெருமளவில் புரட்சிகர மாக்ஸியத்திற்கு அனுதாபமானோராயும் இருந்தமை ஒரு காரணமாயிருந்திருக்கலாம்.

இலங்கை இடதுசாரி இயக்கத்தின் சரிவும் குறுந் தமிழ்த் தேசியவாதத்தின் எழுச்சியும் முஸ்லிம் தேசியவாதத்தின் எழுச்சிக்கும் மத அடையாளத்தின் முதன்மைப்படுத்தலுக்கும் உதவியுள்ளன. எனினும் தீவிரமான மதவாதம் இன்னமும் இலக்கியத்தில் வலுவாக வேரூன்றவில்லை என்றே தெரிகிறது.

• மலையக எழுத்து அதன் வேறுபட்ட சமூகச் சூழல் காரணமாக எப்போதுமே தனது தனித்துவத்தை வெளிப்படுத்தி வந்தாலும் அதன் தனித்துவத்தை வலியுறுத்தி ஊக்குவித்ததில் கை-லாசபதியின் பங்கு குறிப்பிட வேண்டியது. ஒடுக்கப்பட்ட மக்களின் நிலைநின்று இலக்கியம் படைக்கப்படுவதில் இடதுசாரி அரசியலின் பங்கு பெரியது. புதிய நடுத்தர வர்க்கமொன்றின் எழுச்சி வர்க்க அடையாளத்தைக் குறைத்துப் பிரதேச அடையாளத்தை முதன்மைப்படுத்துவதற்கு இடது சாரி இயக்கத்தின் நலிவு ஒரு முக்கிய காரணமென்றே கூற வேண்டும்.

• மட்டக்களப்பு, வன்னிப் பிரதேசப் பண்பாட்டு அடையாளங்கள் மண்வாசைன இலக்கியம் என்ற நிலையிலிருந்து உயர்ந்து ஆக்க இலக்கியத்தினூடு தெளிவாகவும் உறுதியாகவும் தம்மை அடையாளப்படுத்தியுள்ளன. சமூக, அரசியற் தளங்களில் பிரதேசவாதம் தன்னை அடையாளப்படுத்திய அளவுக்கு இன்னமும் ஆக்க இலக்கியத்திற் தன்னை அடையாளப் படுத்தாமை கவனிக்கத்தக்கது.

• தென்னிலங்கையிற் தமிழரின் வதிவு இலக்கியப் படைப்புக்களிற் தன்னை அடையாளப் படுத்தியபோதும் அது தனக்குரிய தனித்துவமான இடத்தைப் பெறவில்லை. வடக்கு கிழக்கிற்கு வெளியே உருவாகும் படைப்புக்களில், மலையக அடையாளத்தினளவுக்கு பிற பிரதேசங்களிற் தமிழரின் இருப்பு தன்னை வலியுறுத்தியுள்ளதாகக் கூற இயலாது. இது பற்றி வடக்கு கிழக்கிற்கு வெளியே வாழும் தமிழ்ப் படைப்பாளிகள் சிந்திக்க வேண்டும்.

• ஒரு சமுகத்திற் கணிசமானோரின் புலப்பெயர்வு சமுகத்தின் இலக்கியச் செல்நெறியிற் தீர்மானமான சில மாற்றங்களைக் கொண்டுவருகிறது.

> *"1977க்குப் பிற்பட்ட காலத்தின் இலக்கியப் பதிவுகளில் தேசிய இன ஒடுக்கலுக்கு எதிரான போராட்ட உணர்வு முக்கிய இடம் பெற்றது. கவிஞர்கட்கும் மேலாகக் குறிப்பிடத்தக்க சிறுகதை ஆசிரியர்களும் அடையாளங் காணப்பட்டனர்."*

புலம்பெயர்ந்தோர் இலக்கியம் ஒருபுறம் தாய்மண்ணின் இலக்கியத்தின் தொடர்ச்சியாகவும் இன்னொருபுறம் புதிய வாழ்க்கைச் சூழலை வரித்துக் கொள்ளும் போக்கிலான அனுபவங்களின் பதிவாகவும் அமைகிறது.

• சில ஆண்டுகள் முன்புவரை சிலர் ஈழத்துத் தமிழ்ப் புலம்பெயர்ந்தோர் இலக்கியமே தமிழ் இலக்கியத்தின் உச்சமாக அமையும் என்று பேசிவந்தனர் அது அறியாமையின் விளைவோ அன்றிக் கபட நோக்குடையதோ என்று கூறுவது கடினம் ஆனால் அது இப்போது ஓய்ந்துவிட்டது. உயர்வாகப் பேசப்பட்ட சில படைப்புக்களின் தோற்றத்திற்குப் படைப்பாளிகள் தம் கடந்தகாலத்தை ஒரு மாற்றுக் கண்ணோட்டத்தில் காணும் வாய்ப்பைப் புலப்பெயர்வு அவர்கட்கு வழங்கியமை பங்களித்தது எனலாம்.

தமிழ்த் தேசியவாதத்தின் தாக்கம்

• தமிழ் இன உணர்வு தமிழ்த் தேசியவாதமாக எப்போது உருப்பெற்றது என்பதைப் பற்றிக் கருத்துக்கள் வேறுபடலாம். சிங்களம் மட்டுமே சட்டத்தை அடுத்து வீறு கொண்ட மொழியுணர்ச்சி 1956 முதல் 1961ம் ஆண்டின் சத்தியாக்கிரகம் வரை கவிதைகளாகவும் இசைப்பாடல்களாகவும் வடிவம் பெற்றது. புனைகதைகளிலும் மொழியுணர்வு பதிவு கண்டாலும் அது ஒப்பிடத்தக்க வளர்ச்சியை எய்தவில்லை என்பேன். 1965-70 கால இடைவெளியிற் தமிழ் இன உணர்வும் அதை முன்னிறுத்திய கட்சியின் நடைமுறை அரசியலும் விலகி இருந்தன. தமிழ் மக்களின் குறைபாடுகளில் எவையும் இக் காலத்திற் தீராவிட்டாலும், தமிழ்த் தேசியவாத அரசி யற் தலைமை சிங்களப் பேரினவாதத்தின் அதி பிற்போக்கான கட்சியுடன் கூட்டரசாங்கத்தில் இருந்தமை தமிழ் மக்களின் உரிமைப் போராட்டத்தைக் கிடப்பிற்போடச் செய்தது. அந்த நிலைமை இலக்கியத்திலும் புலப்பட்டது.

• 1970ல் ஐக்கிய முன்னணி ஆட்சிக்கு வந்தது. தமிழ்த் தேசிய வாதிகளுடனான பகைமையும் ஸ்ரீ.ல.சு. கட்சி சந்தர்ப்பவாத நோக்கிற் கிளறிவிட்ட பேரினவாதமும் அதனை எதிர்க்கத் தைரியமற்ற பாராளுமன்ற இடது சாரிகளின் கோழைத்தனமும் 1970முதல் 1977 வரையிலான ஆண்டுகளிற் பல தவறுகட்குக் காரணமாயின.

• தரப்படுத்தல், தமிழாராய்ச்சி மாநாட்டு அசம்பாவிதம், தமிழருக்கு எதிரான பாரபட்சம் போன்ற பலவும் வடக்கிற் தமிழ் இளைஞர்கள் நடுவே கொதிப்புணர்வை ஏற்படுத்தின. அதே வேளை, தமிழ்த் தேசியவாதிகளின் காந்திய சாத்வீகத் தலைவர்களது ஆசிகளுடன் நடந்த, முன்னாள் மாநகராட்சித் தலைவர் துரைப்பாவின் கொலை பொலிஸ் கெடுபிடிகளை மேலும் அதிகப்படுத்தியது. பொலிஸ் வன்முறையையும் இளைஞர்களது ஆயுத வன்முறையும் அதன் பின்விளைவுகளாயின. 1972ம் ஆண்டின் அரசியல் யாப்பு நாட்டின் தேசிய இனப் பிரச்சனையை மோசமாக்கியது. அதற்கு எப்படி முகங்கொடுப்பது என்ற அரசியற் தெளிவில்லாமல் 1976ம் ஆண்டு வட்டுக்கோட்டைப் பிரகடனம் தமிழ்த் தேசியவாதிகளால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. அன்று ஒரு குறுகிய கால அரசியல் வசதிக்காக முன்வைக்கப்பட்ட சுதந்திரத் தமிழீழம் என்ற இலக்கு, இன்றுவரை ஒரு சரியான நெறிப்படுத்தலுமின்றித், தமிழ் மக்களை மேலும் இன்னலுக்கும் அழிவுக்கும் பிளவுகட்கும் சிதறலுக்கும் வழிசெய்து வந்துள்ளது.

• இத்தகையதொரு பின்னணியிலேயே, வடக்கில் முதலிலும் கிழக்கிற் பின்புமாக, முக்கியமாக இளைய தலைமுறையினரிடையே, தமிழ்த் தேசியவாதம் வேரூன்றியது. அது காத்திரமான

இலக்கியப் படைப்புக்களாக வெளிப்பட்டது கவிதையிலேயே. புதுக் கவிதை ஈழத் தமிழிலக்கியத்திற் தடம் பதித்தமை அதற்கு முக்கியமான பங்களித்தது. தேசிய இன ஒடுக்கல் கடுமையான அரச வன்முறையாகவும் இனவாதத் தாக்குதல்களாகவும் விருத்தி கண்ட 1977க்குப் பிற்பட்ட காலத்தின் இலக்கியப் பதிவுகளில் தேசிய இன ஒடுக்கலுக்கு எதிரான போராட்ட உணர்வு முக்கிய இடம் பெற்றது. கவிஞர்கட்கும் மேலாகக் குறிப்பிடத்தக்க சிறுகதை ஆசிரியர்களும் அடையாளங் காணப்பட்டனர்.

• பாராளுமன்ற இடதுசாரிகளின் சந்தர்ப்பவாதமும் 1970-77 ஆட்சிக் காலத்தில் அவர்கள் பேரின வாதிகளுடன் அடையாளங்காணப் பட்டமையும் அவர்களை மட்டுமன்றி அனைத்துத் தமிழ் இடதுசாரிகளையுமே பாதித்தது. தேசிய இனப் பிரச்சனை பற்றி நேர்மையான இடதுசாரிகள் முன்வைத்த தீர்க்கதரிசனமிக்க கருத்துக்களாற் பேரினவாத அலைக்கும் அதற்கு எதிராக எழுந்த குறுகிய தேசியவாத அலைக்குமிடையே ஓங்கி நிற்க இயலவில்லை. எனினும் இடதுசாரி இலக்கியம் தனது நிலைப்பாட்டிற் உறுதியுடன் தொடர்ந்தும் இயங்கி வந்தது. இருந்தும், 1970களில் இருந்து மாக்சிய லெனினியக் கம்யூனிஸ்ற்றுக்களிடையே ஏற்பட்ட பிளவுகள் இடதுசாரி இலக்கியத்தின் வளர்ச்சியைக் கணிசமாக மந்தப்படுத்தின. அதைவிட முக்கியமாக, இடதுசாரிகளை அரசியலினின்று ஓரங்கட்டுவதில் இளைஞர் இலக்கங்களிற் பெரும்பாலானவை தீவிரமாயிருந்தன. விடுதலைப் புலிகளின் ஆதிக்கமும் பின்பு அரசியல் ஏகபோகமும் நிலவிய காலத்தில் மிகுந்த இடர்ப்பாடுகளின் நடுவிலேயே இடதுசாரிகளின் கலை இலக்கிய முயற்சிகளை வடக்கில் முன்னெடுக்க இடமிருந்தது. தேசிய கலை இலக்கியப் பேரவை மூலமே முற்போக்காகன சமூக அரசியற் சிந்தனைகளை மக்கள் நடுவே கொண்டு செல்ல முடிந்தது.

• தமிழ்த் தேசியவாதம் போர்க்குணமிக்க ஒரு போராட்டச் சக்தியாக உருப்பெற்ற காலத்திலேயே ஈழத் தமிழ்க் கவிதையின் ஒரு பேரெழுச்சி நிகழ்ந்தமை கவனிக்கத் தக்கது. அதன் மூலம் உணர்த்தப்பட்ட கருத்துக்கள் 1960கள் வரையிலான ஆண்ட பரம்பரைக் கதைகளினின்று விலகியவையாய் இருந்தன. கவிதைகள் அன்றாட நிகழ்வுகள் பற்றியும் அவை மனதில் எழுப்புகிற தாக்கங்களைப் பற்றியும் பேசின. போராட்டம் பற்றிப் பேசின. சமூக நீதி பற்றிய குரல்களும் இடையிடை எழுத்தன. தேசியவாதம் பற்றிய விமர்சனங்ளுக்கும் போராட்டத்தின் செல்நெறி பற்றிய வினாக்களுக்கும் இடமிருந்தது. எனினும் 1983க்குப் பின்பு அதாவது இந்திய எசமானர்கள் ஈழக் தமிழர் விடுதலைப் போராட்டத்தைத் தத்தெடுத்ததன் பின்பு தமிழ்த் தேசிய இனத்தின் விடுதலைப் போராட்டமும் அதன் இலக்கியச் செல்நெறியும் பெரும் பாதிப்பிற்குட்பட்டன.

> *தமிழ்த் தேசியவாதத்தையும் தமிழீழப் பிரிவினைக் கொள்கையையும் கேள்விக்கு உட்படுத்த இயலாது என்று துப்பாக்கி தூக்கிய இளைஞர்களைவிடத் தீவிரமாகச் சில பேனை தூக்கிய இலக்கியவாதிகள் மிரட்டத் தொடங்கிய காலம் ஈழத் தமிழ் இலக்கியத்தின் நலிவின் தொடக்கப்புள்ளி*

• தமிழ்த் தேசியவாதத்தையும் தமிழீழப் பிரிவினைக் கொள்கையையும் கேள்விக்கு உட்படுத்த இயலாது என்று துப்பாக்கி தூக்கிய இளைஞர்களைவிடத் தீவிரமாகச் சில பேனை தூக்கிய இலக்கியவாதிகள் மிரட்டத் தொடங்கிய காலம் ஈழத் தமிழ் இலக்கியத்தின் நலிவின் தொடக்கப்புள்ளி என்பேன்.

• அந்தப் போக்கையும் அதன் தொடர்ச்சியாக ஏற்பட்ட நலிவுமிக்க இலக்கியச் சூழலையும் விவரிக்கஇங்கு இடம் போதாது. அவற்றைப் பற்றிய முக்கியமான பல தகவல்கள் இன்னும் பலரும் அறியாதவையாகவே உள்ளன.

• தமிழ்த் தேசிய இனத்துக்கு நடந்தவாறே, இடதுசாரி இயக்கத்தின் நலிவு முஸ்லிம்களின் படைப்புலகிலும் ஒரு தேக்கத்தைக் கெண்டுவந்தது. குறுகிய தமிழ்த் தேசியவாதத்தின் எழுச்சியும் அதற்குப் பங்களித்தது.

• எனினும் 1980களின் போக்கில் புதியதொரு முஸ்லிம் படைப்பாளித் தலைமுறை உருவானதைக் காணலாம். அதன் பார்வை முஸ்லிம் சமூகம் முகங்கொடுத்த குறுகிய தமிழ்த் தேசியவாதத்தாலும் இன்னொருபுறம் உலகளாவி வளர்ந்த இஸ்லாமிய உணர்வெழுச்சியினாலும் பாதிக்கப்பட்டது.

• விடுதலைப் போராட்டத்தின் வளர்ச்சிப்போக்கிற் தமிழ்த்தேசியவாதத்தின் போர்க்குணமிக்க படைப்புக்கள் உருவான அதே வேளை, சமூகச்சார்பான படைப்புக்களும் ஓரளவுக்கேனும் வெளிவந்தன. மறுபுறம், போராட்டத்தின் திசைவிலகல்கள் போராட்டத்தையே நிராகரிப்பது வரையிலான விமர்சனப்போக்கான படைப்புக்களுக்கு வழிசெய்த போதிலும் அவற்றின் பயனான பிரதேசவாதம் இலக்கியத்திற் தன்னை வலுவாக அடையாளப் படுத்தியதாகத் தெரியவில்லை. முற்போக்கு இலக்கிய இயக்கத்தினூடாகத் தன்னை வலுவாக நிலைநிறுத்திச், சமூக அக்கறைகளை வெளிப்படுத்திவந்து, தேசியவாதத்தின் எழுச்சியையொட்டிக் திசை மாற்றங் கண்ட ஈழத் தமிழ் இலக்கியத்தின் சமகால நிலையைத் தமிழர் விடுதலைப் போராட்டம் என்கிற துன்பியல் நாடகத்தின் பின்பான சூழலில் மீள நோக்குவோம்.

## இன்றைய ஈழத் தமிழ் இலக்கியம் பற்றிய ஒரு கணக்கெடுப்பு

தேசிய இனப் பிரச்சனை பிரதான முரண்பாடாக உருப்பெற்ற 1970களின் பிற் பகுதியிலிருந்து ஈழத் தமிழ் இலக்கியத்தில் அதுவே

மிகுந்த கவனிப்பிற்கு உரித்தானதில் வியப்பில்லை எனினும் தேசிய இனப் பிரச்சனை தவிர்ந்த பிற முரண்பாடுகளைப் பற்றிப் பேசுவதைத் தவிர்க்கிற அல்லது தடுக்கிற ஒரு போக்கும் அதற்கு மாறாகத் தேசிய இனப் பிரச்சனைக்கும் பிற முரண்பாடுகட்குமிடையிலான உறவு-களைக் கருத்திற் கொண்டு பேசுகிற ஒரு போக்கும் எப்போதுமே இருந்து வந்தன. முன்னையது தமிழ்த் தேசியவாத மரபின் இறுக்கமான தொடர்ச்சியாகவும் பின்னையது இடதுசாரிச் சிந்தனையின் தாக்கங்களை உள்வாங்கியதாகவும் இருக்கக் காணலாம்.

• தமிழ்த் தேசிய விடுதலைப் போராட்டத்தில் ஒற்றுமை என்பது ஒரே குரலிற் பேசுவது, ஏகப் பிரதிநிதித்துவம் என்கிறவிதமாக விகாரப்படுத்தப்பட்ட சூழலில் விடுதலைப் புலிகளின் கட்டுப்பாட்டுப் பிரதேசங்களிலும் அவர்களது செல்வாக்கு வலுவாயிருந்த சூழல்களிலும் மாற்று அரசியற் கருத்துக்கள் பகைமையுடன் நோக்கப்பட்ட அளவுக்குப் படைப்பிலக்கியங்கள் நோக்கப்படாவிடினும், படைப்பாளிகள் விடுதலைப் புலிகளின் ஏகபோக உரிமைக்கு முரணாகச் செயற்படு வதற்கு இடமளிக்கப்படவில்லை.

• அதன் விளைவாக வெறுமனே இயக்கத்தினதும் தலைமையினதும் துதிபாடுகிற ஒரு போக்கு உருவானது. அவற்றின் நடுவிலும் மக்களது இன்னல்கள் பற்றியும் தமிழ்த் தேசியவாதத்திற்கு முரண்படாத விதமாகப் பெண்ணுரிமை போன்ற விடயங்களைப் பற்றியும் பேச இடம் இருந்தது. ஏகாதிபத்தியத்தைப் பற்றியோ உலகின் பிற விடுதலைப் போராட்டங்களைப் பற்றியோ பேசப்படாமை ஒரு முக்கியமான விடயமாகும்.

• இந்தத் தமிழ்த் தேசியவாத நாணயத்தின் மறுபக்கமாக விடுதலைப் புலி எதிர்ப்பு நோக்கிலான இலக்கியப் போக்கொன்று இருந்து வந்தது. இது தென்னிலங்கையிற் தம்மை ஓரளவு பாதுகாப்பாகப் பேணிக்கொண்டிருந்தோ ரிடையிலும் புலம் பெயர்ந்தோரில் ஒரு பகுதியினரிடையிலும் காணப்பட்டது. இது வளமான இலக்கியமாக வளரவில்லை.

• விடுதலைப் போராட்டத்தையே நிராகரிக்கிற இலக்கியப் போக்குக்கள் முன்னர் விடுதலை இயக்க ஆதரவாளர்களிடையிலும் உறுப்பினர்களிடையிலும் இருந்து வந்துள்ளமை கவனத்திற்குரியது.

• எவ்வாறாயினும், இலங்கையுள் போர்ச் சூழலுக்கு வெளியிலும் புலம் பெயர்ந்த சூழலிலும் புற நெருக்குவாரங்களின்றித் தேசிய இன விடுதலைப் போராட்டத்தை நிதானமாக நோக்கி விசாரித்து விமர்சிக்கிற வாய்ப்புக்களைப் பயன்படுத்தியவர்கள் இருக்கின்றனர். அவ்வாறானவர்களின் பார்வை இன்னுந் தொலைவுகளை எட்ட வேண்டி உள்ளது.

• இடதுசாரி இலக்கிய மரபு தொடர்ந்தும் சிறுபான்மைப் போக்காகவே உள்ளது. எனினும் ஏகாதித்திய எதிர்ப்பு, தேசிய இனங்களின் சமத்துவமும் நல்லுறவும், புதிய பண்பாடு என்னுமாறான கருத்தாங்களை அது தொடர்ந்தும் நல்ல படைப்பாளிகளைச் சோரம் போகச் செய்துள்ளன. இவற்றுக்கும் மேலாக விஞ்ஞான அடிப்படையிலானதும் சமூக மாற்றத்துக்குமான முயற்சிகட்கு ஆப்புவைக்கும் இலக்குடன் பின்நவீனத்துவம் தீவிரமாக ஊக்குவிக்கப் பட்டு வந்துள்ளது.

• நீதிக்கான போராட்டங்கள் பின்நவீனத்துவ நியாயப்படுத்தல்கள் மூலம் தனிமைப் படுத்தப்படுவதுடன் ஒன்றுக் கொன்று பகைமையாக்கப்படுகின்றன. தமிழகத்திலும் புலம் பெயர்ந்த சூழலிலும் "தலித்தியம்" இவ்வாறு பயன்படுகிறது. எல்லாவிடத்தும் நடுத்தர வர்க்கப் பெண்ணியம் இடது சாரி எதிர்ப்பிற் தீவிரமாக உள்ளது.

• ஈழத் தமிழ் இலக்கியத் துறை யில் நூல்வெளியீடும் சஞ்சிகைகளின் வருகையும் குறைவாக உள்ள நிலையில் அதினும் முக்கியமாக நூல்களின் வாசிப்பும் விற்பனையும் குறைவாக உள்ள நிலையில் இந்திய வணிக நிறுவனங்கள் உள்நாட்டிலும் புலம் பெயர்ந்த சூழலிலும் தமது லாப வேட்டையில் மும்முரமாயுள்ளன. இலங்கையிலிருந்து இன்னமும் வணிக அடிப்படையிற் தமிழ் நூல்களை இறக்குமதி செய்ய இயலாதவாறு இந்தியாவிற் தடை தொடருகிறது. ஆனால் இந்தியாவிலிருந்து இலங்கைக்கு இறக்குமதி செய்யத் தடை இல்லை. இது இலங்கை நூல் வெளியீட்டுத் துறையைப் பெரிதும் பாதிக்கிறது.

*" ஈழத் தமிழ் இலக்கியத் துறையில் நூல் வெளியீடும் சஞ்சிகைகளின் வருகையும் குறைவாக உள்ள நிலையில் அதினும் முக்கியமாக நூல்களின் வாசிப்பும் விற்பனையும் குறைவாக உள்ள நிலையில் இந்திய வணிக நிறுவனங்கள் உள்நாட்டிலும் புலம் பெயர்ந்த சூழலிலும் தமது லாப வேட்டையில் மும்முரமாயுள்ளன. "*

முன்னெடுத்து வருகிற போதும் கடந்த சில ஆண்டுகளின் இடப்பெயர்வுகளும் இளைய தலைமுறையினரிடையே வாசிப்புப் பழக்கம் குறைந்து வருவதும் முக்கியமான பிரச்சனைகளாக உள்ளன.

• இவ்விதமான நிலைமை களின் நடுவே என்.ஜி.ஓக்கள் எனும் தன்னார்வக் குழுக்கள் மூலம் அரசியற் சிந்தனைகளையும் செயற்பாடுகளையும் மக்கள் இயக்கங்களையும் மழுங்கடிக்கும் முயற்சிகள் கடந்த இருபது ஆண்டுகட்கும் மேலாகத் தீவிரப்படுத்தப் பட்டுள்ளன. என்.ஜி.ஓ. நிதி ஆதரவை நேரடியாகவோ மறைமுகமாகவோ பெற்று நடத்தப்படுகிற சஞ்சிகைகள் பல உள்ளன. அதைவிடச் சமூகப் பிரச்சனைகள் பலவற்றைப் பற்றி ஆராய்வதற்கும் வற்புறுத்துவதற்கும் சமூக சேவைகட்கென்றும் உருவாக்கப்பட்ட என்.ஜி.ஏக்கள் வழங்கும் பெரிய ஊதியங்களுஞ் சலுகைகளும் பல

• புலம் பெயர்ந்த ஈழத் தமிழரது மன உளைச்சல்களைத் தமக்குச் சாதகமாக்கி தமிழீழ விடுதலைப் போராட்டத்தை வைத்து இந்தியாவின் பல விதமான சஞ்சிகைகள் கொள்ளை லாபம் ஈட்டுகின்றன. போதாததற்குத்

**"தமிழ் இலக்கியத்தில் நாமறிந்த முதலாவது மெய்யியற் சிந்தனையாக வரும் கணியன் பூங்குன்றனாரின் "யாதும் ஊரே யாவருங் கேளிர்" எனும் வரியை வெறும் சுலோகமாக அன்றி அதன் முழுமையான பொருளில் இன்றைய உலகிற்குப் பொருந்திப் பார்க்கத் தமிழர் துணிய வேண்டும்."**

தமிழகத்தின் குப்பைச் சஞ்சிகைகளும் கீழ்த்தரமான சினிமாவும் அதற்கு ஈடான சின்னத்திரைத் தொடர் நாடகங்களும் ஈழத் தமிழரதும் புலம் பெயர்ந்தோரதும் ரசனையைச் சிதைத்து வருகின்றன.

• இன்னொரு புறம், மரபின் பேரால் ஒரு பகுதியினரும் நவீனத்துவத்தின் பேரால் இன்னொரு பகுதியினரும் தமிழ்க் கலை இலக்கியப் பண்பாட்டு விருத்திக்குத் தீங்கான 'கலை' நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர்.

• இவை அனைத்தின் நடுவிலும் நாம் நமக்கான ஒரு வாழ்வையும் பண்பாட்டையும் உடையோம். அவை காலத்துடன் மாறுவன. ஆயினும் அவை நமது இருப்பும் நலனும் விருத்தியுஞ் சார்ந்தவையாயிருக்க வேண்டும். இந்தத் தேவையை நாம் தனி மனிதர்களாகவும் ஒட்டுமொத்தமான சமூகங்களாகவும் சமூகப் பிரிவுகளாகவும் மறந்து போகும் அபாயம் நம்மை எதிர் நோக்குகிறது.

• ஈழத்து இலக்கியம் எவரது அங்கீகாரத்தையும் எதிர்பாராமற் தலை நிமிர்ந்து பெருமை கொண்ட ஒரு காலம் இருந்தது. இன்று இந்திய இலக்கிய வணிகர்களின் தயவில் நூல் வெளியிட்டு நட்டப்பட்டு முட்டாள்களாகிற நிலையில் ஈழத்துப் படைப்பாளிகள் பலர் இலங்கையிலும் புலம்பெயர்ந்தோரிடையிலும் உள்ளனர். (இவ் வணிகத் தொடர்புகளைப் பயன்படுத்தித் தம்மை வளப்படுத்ததிக் கொள்ளத் தெரிந்த இலக்கியப் பிரமுகர்கள் சிலர் உள்ளனர் என்பது வேறு விடயம்).

• தமிழக இலக்கிய மேட்டுக்குடி நிறுவனங்களின் அங்கீகாரத்துக்காகத் தவங்கிடக்கும் வட்டங்களும் தனிமனிதர்களும் அந்த நிறுவனங்களின் அற்ப அங்கீகாரங்களையே தமது தகுதிகளாக்கித் தம்மை ஈழத்து இலக்கியப் பிரமுகர்களாகக் காட்சிப்படுத்துகிற போக்குப் புதியதல்ல. எனினும் தேய்ந்து போன அப் போக்கு மீண்டும் உயிர்த்துப் போருக்குப் பின்பான சூழலில் வலுப்படும் அபாயம் கவலைக்குரியது.

• ஏற்றத்தாழ்வுமிக்க ஒரு சமூகத்தின் இலக்கியத்தில் மேலாதிக்கப் போக்குக்கள் இயல்பானவை. சான்றோர் வழக்கு , இழிசினர் வழக்கு என்ற ஆதிக்க உறவு முறியடிக்கப்பட்டாலும், சமூகத்தில் உட்பொதிந்துள்ள அதிகார உறவுகளை அடையாளப்படுத்தும் விதமாகப் பொருளாதார அரசியல் அதிகார உயர்வு தாழ்வுகளும் பெரும்பான்மை-சிறுபான்மைப் பாகு பாடுகளும் குறிப்பிட்ட வட்டார வழக்குக்களை உயர்த்தியும் பிறவற்றைத் தாழ்த்தியும் காணும் போக்காக இன்னமும் தொடர்கின்றன. இது போராடி வீழ்த்தப்பட வேண்டியது.

• சில சமயங்களில் மேற்கூறிய மேலாதிக்கப் போக்குக்கட்கு எதிர்வினையாகவும் சில சமயங்களில் சுயலாபங் கருதியும் குறுகிய தேசியவாதமும் பிரதேசவாதமும் இலக்கியத்தில் வெளிப்படுகின்றன. இதுவும் தோற்கடிக்கப்பட வேண்டியது எனினும், கவனமாகக் கையாளப்பட வேண்டியது. ஏனெனில் ஒடுக்குதலுக்கெதிரான ஒரு போராட்ட நியாயம் அங்கு இருக்கக் கூடும்.

## நாம் செய்யக் கூடியவை யாவை?

"ஈழத் தமிழ் இலக்கியத்தில் கவிதைகள் சிறப்பாகவும் சிறுகதைகள் ஏற்கத்தக்கனவாயும் உள்ளபோதும், நாவல் இலக்கியம் பலவீனமாக உள்ளது" என்ற விதமான கவலைகள் முக்கியமானவையல்ல. ஈழத் தமிழில் ஒரு வகையான இலக்கிய வடிவத்திற் சிறப்பாகச் செய்ய இயலுமாயின், பிறவற்றிலும் அவ்வாறு இயலும். எனவே நம் அக்கறைகள் நம் இலக்கியங்களின் நோக்குப் பற்றியதாகவும் அவற்றின் சமூகப் பெறுமதி பற்றியதாகவும் இருப்பது முக்கியமானது. உருவத்தை விட உள்ளடக்கமும் செய்நேரத்தியும் மக்களைச் சென்றடையும் ஆற்றலும் முக்கியமானவை. அழகியல் என்பது படைப்பின் நோக்கத்தினின்று முற்றாக விலக்கிப்பார்க்கக் கூடிய தனித்துவமானதொரு பொருளல்ல.

• பலவிதமான நவீன இலக்கிய வடிவங்களும் எழுத்து முறைகளும் பரீட்சார்த்த முயற்சிகளும் போதாமையைச் சிலர் ஒரு குறை யாகக் கூறுகின்றனர். இது இலக்கியம் பற்றிய ஒரு குழப்பமான கொள்கையின் விளை வானது. புதிய எழுத்து நடைகள், உத்திகள் போன்ற அனைத்தும் எழுத்தைச் சுவைப்படுத்துவன. ஆனால் எழுத்திற்கு அடிப்படையானவை அல்ல. எந்தப் புதுமையும் புத்தாக்கமும் வாசகரைச் சேர்கிறதா என்பதும் சொல்ல எண்ணியதைச் செம்மையாகச் சொல்கிறதா என்பதும் முக்கியமானவை. சொற் சிலம்பங்களும் இருண்மையுமே இலக்கிய ஆளுமையின் அளவு கோல் என்ற சிந்தனை பிற்போக்கானது பழமைக்குரியது.

• நாம் எல்லாருடனும் பகிர வேண்டிய அனுபவங்களும் சிந்தனைகளும் உள்ளன. அனைவரும் அறிய வேண்டிய பொது உண்மைகள் உள்ளன. நமது சமூகம் பற்றி அறிய வேண்டியன உள்ளன. நமக்கு நடந்தனவும் நடப்பனவும் பற்றி மனத் தடைகளின்றி எடுத்துரைக்கவேண்டியன உள்ளன. நம்மைச் சூழவுள்ள சமூகங்களைப் பற்றி அறிய வேண்டியன உள்ளன. நாம் காண விழைகிற உலகம் பற்றிய சிந்தனைகளைப்

பிறரது சிந்தனைகளுடன் மோதியும் இணைந்தும் புதிய பார்வைகளை உருவாக்க வேண்டியுள்ளது. பல சமயங்களில் ஆய்வுக் கட்டுரைகளும் பட்டிமன்றங்களும் கருத்தரங்குகளும் செய்ய இயலாதவற்றை ஆக்க இலக்கியம் செய்கிறது. எனவே ஆக்க இலக்கியத்தை அனைவர்க்கும் உரிய ஒரு பொருளாக்க வேண்டியுள்ளது. நாம் கொண்டிருந்து இழந்துபோன வாசிப்புப் பழக்கத்தை மீளவும் வென்றெடுத்து நமதாக்க வேண்டிய தேவை உள்ளது.

• நமது இலக்கியம் முதலில் நம்மைப் பற்றியது. நம்முடைய சகோதரச் சமூகங்களைப் பற்றியது. நம்மைச் சூழவுள்ள உலகுடன் நமது உறவு பற்றியது. நமது பெருமைகட்கு உரியதாகக் கூறப்படுகிற இலக்கியங்கள் நம்மை அடையாளப்படுத்தா. நமது வரலாறு பற்றிய பலவேறு புனைவுகள் நமது சமகால இருப்பாகா.

• பல நூற்றாண்டுகளாக் நம்மைப் பீடித்திருக்கும் சமூக நோய்களின்றும் நமது சிந்தனைத் தேக்கத்தினின்றும் விடுபடாமல், விடுதலை பற்றிப் பேசுவது பொருளற்றதாகும். எதையும் மூடிக்கட்டுவதால் நமது சிந்தனைத் தேக்கம் இல்லாமற் போகாது. அனைத்தையும் வெளிவெளியாகப் பேச வேண்டியுள்ளது. அதை இலக்கியத்தால் மிகச் சிறப்பாகச் செய்ய இயலும். நாம் அதற்கு ஆயத்தமாக வேண்டும்.

• புலம்பெயர்ந்த சமுதாயத்தினர் தமக்கு முன்னாலுள்ள வாய்ப்புக்களை முழுமையாகப் பயன்படுத்த வேண்டியுள்ளது. முதலிற் தமது பிறந்த மண்ணிலிருந்து சுமந்து வந்த தேவையற்ற சுமைகளை அவர்கள் தமது தோள்களிலிருந்து கீழிறக்க வேண்டியுள்ளது. பண்பாட்டின் பேராலும் மதத்தின் பேராலும் பேணி வருகிற மூடத்தனங்களையும் கால விடயத்தையும் பொருள் விரயத்தையும் பற்றி மீளாய்வு செய்து சாதிய, ஆணாதிக்கச் சிந்தனைகளையும் நடைமுறைகளையும் தூக்கி எறிவதில் புலம்பெயர்ந்த சமூகம் முன்னோடியாக இருக்க இயலும்.

• புலம்பெயர்ந்த சமூகம் காலப் போக்கிற் தனது சூழலிற் தனது இருப்பைத் தீர்மானிக்கும். அடுத்தடுத்த தலைமுறைகள் தமிழிற் செயற்படுவது ஐயத்திற்குரியது. எனினும் ஈழ மண்ணுடனான தொடர்புகள் நீண்ட காலத்திற்கு இருந்து வரும். அது ஆரோக்கியமான ஒரு உறவாகவும் ஒன்றுக்கொன்ற பயனுள்ள உறவாகவும் விருத்தி பெறுவதாயின் இரண்டு சமூகங்களினுள்ளும் ஆரோக்கியமான சமூக விழுமியங்கள் விருத்தி பெறுவது அவசியம். உலகுபரந்த தமிழ் மக்களிடையில் நல்லுறவு உறுதிப் படுவது அவர்களைப் பிற சமூகங்களிலிருந்து தனிமைப் படுத்துவதாக இருக்கலாகாது.

• தமிழ் இலக்கியத்தில் நாமறிந்த முதலாவது மெய்யியற் சிந்தனையாக வரும் கணியன் பூங்குன்றனாரின் "யாதும் ஊரே யாவருங் கேளிர்" எனும் வரியை வெறும் சுலோகமாக அன்றி அதன் முழுமையான பொருளில் இன்றைய உலகிற்குப் பொருந்திப் பார்க்கத் தமிழர் துணிய வேண்டும். அதற்குத் தமிழ் இலக்கியம் பாதை வகுத்துக் கொடுக்க வேண்டும். புலப்பெயர்வு ஈழத் தமிழுக்கு ஏற்பட்ட ஒரு கெடுதல். அதை நன்மையாக மாற்ற இயலும். அது நம் முன்னாலுள்ள முக்கியமான சவால்களுள் ஒன்றாகும். ●

---

(2ம் பக்கத் தொடர்ச்சி)
எவ்வளவு முக்கியமோ அதைவிட நிலத் தொடர்ச்சியும், அதன் பொருளாதார வளங்களும் அவ்விருப்பிற்கு இன்றியமையாததாகும்.

புலிகள் கடந்த காலங்களில் சிறிலங்கா இராணுவத்திற்கு எதிராகத் தொடர்ச்சியாகப் போராடிய புலிகள் மற்றைய சகோதர இராணுவ இயக்கங்களையும், முதலாளித்துவ அரசியல் கட்சிகளையும் இடதுசாரி இயக்கங்களையும் தமிழ் தேசிய அரசியல் போராட்டத்திலிருந்து முற்று முழுதாக திட்டமிட்டு அழித்ததன் மூலம் தமிழ் தேசிய அரசியலில் தங்களை ஒரு ஏகோபித்த தலைமையாக உருவாக்கினர். எந்தக் கோட்பாட்டு அரசியலையும் முன்வைக்காது வெறும் இராணுவ மோதல்களையும் அதனால் உருவாகும் சாகச வெற்றிகளையுமே புலிகள் அரசியலாக முன் வைத்தனர். யுத்தத்தால் ஏற்படும் வெற்றி தோல்விகளுக்கேற்ப புலிகளுக்கும், அரசிற்குமான பேச்சுவார்த்தை, யுத்தம் என்ற நிலை கடந்த 30 வருடங்களாக நடைபெற்றது. அரசிற்கு எதிராகப் போராடும் ஒரே ஒரு இயக்கமாக தம்மை முன்னிறுத்திய புலிகள், அரசியல் ரீதியாக ஒரு வங்குரோத்து நிலைமையையே அடைந்திருந்தனர். இதனாலேயே புலிகள் முள்ளிவாய்க்காலில் இராணுவ ரீதியாகத் தோற்கடிக்கப்பட்டவுடன், அவர்கள் அரசியல் ரீதியாகவும் மடிந்து போயினர். இதனாலேயே ஒரு சூன்யமான அரசியல் சூழ்நிலைக்குள் தமிழ் மக்கள் தள்ளப்பட்டனர்.

வடகிழக்கு அபிவிருத்தி அடைதல் என்ற கோஷம் முன் வைக்கப்பட்டு, அதற்காக சிங்கள இனவாத அரசுடன் வெவ்வேறு அணிகளாக தமிழர் தரப்பு அரசியல் குழுக்கள் பேரம் பேசத் தொடங்கியுள்ளன. சிறைக்கைதி K.P. என்கின்ற பத்மநாதன் போன்ற புலிகளும், சொந்தச் சின்னத்தில் தேர்தலில் நிற்க முடியாத தேவானந்தா தலைமையிலான அணியும் இன்று களத்தில் நிற்கின்றன. இதில் 20 வருட இணக்க அரசியலில் இருந்த தேவானந்தாவை புதிய ஒட்டுக்குழுவின் தலைவன் KP பின் தள்ளியவுடன் இலங்கையிலும், புலம்பெயர் சமூகத்திலும் புதிய அரசியல் போக்குகள் தலைகாட்டத் தொடங்கி உள்ளன. இப்புதிய சூழலை இலங்கை வாழ் தமிழ் மக்களும், புலம் பெயர் வாழ் தமிழ் பேசும் மக்களும் எவ்வாறு எதிர் கொள்ள வேண்டுமென்பதே எம்முன் உள்ள சவாலாகும்.

- தேடல் ஆசிரியர் குழு -
ஒக்டோபர் 2010






- ரதன் -

1. உலகின் தலை சிறந்த திரைப்படங்கள் தயாரிக்கும் நாடுகளுள் கனடாவும் ஒன்று. ஹொலிவூட்டிற்கு அருகில் இருப்பதானால் அதன் நிழலுக்குள் கனடிய திரைப்படவுலகம் மறைந்து விடுகின்றது. ரைட்டானிக், அவற்றார் இயக்குனர் ஜேம்ஸ் கமரோனும் ஒரு கனடியர். இவரது படங்களும் ஹொலிவூட் பாதையில் பயணிப்பதனால் கனடிய திரைப்பட படைப்பாளிகளது பெயர்கள் நிழலிலேயே உள்ளன. சர்வதேச அரங்கில் தீபா மேத்தா போன்ற வர்த்தக இயக்குனர்களுக்கு இருக்கும் பிரபல்யம் விமர்சகரீதியாக வரவேற்பு பெற்ற படைப்பாளிகளுக்கு இருப்பதில்லை. அவ்வாறு விமர்சகரீதியாக பலத்த வரவேற்பை பெற்ற கனடிய திரைப்பட படைப்பாளிகளை அறிமுகப்படுத்த வேண்டிய தேவை ஒன்றுள்ளது.

கனடிய திரைப்படங்கள என்றவுடன் பல விமர்சகர்கள் மத்தியில் உடன் நினைவுக்கு வரும் பெயர் Atom Egoyan . இவரது பெயரின் முதல் பகுதி அணு குண்டை மையமாகக் கொண்டது. எகிப்தின் முதலாவது அணு குண்டு பரிசோதனை முயற்சியின் நினைவாக சூட்டப்பட்டது. ஆம் இவரது பெற்றோர் எகிப்திய-ஆமேனியர். ஏகிப்தில் இருந்து பிரிட்டிஸ் கொலம்பியாவிற்கு குடிபெயர்ந்தது இவர்களது குடும்பம். பின்னர் ரொரன்ரோ பல்கலைக் கழகத்தில் தனது பட்டப்படிப்பை மேற்கொண்டார். படிக்கும் காலங்களில் Samuel Beckett, Harold Pinter. போன்றோரது படைப்புக்களில் ஆர்வமேற்பட்டு தனது தேடலை வளர்த்துக் கொண்டார்.

இவர் தனது முதலாவது படமான Next of Kin 1984ல் வெளிவந்தது. இப் படம் ரொரண்ரோ சர்வதேச திரைப்படவிழாவில் திரையிடப்பட்டது. இவரது அடுத்த படமான Family Viewing என்ற படம் ரொரன்ரோ சர்வதேச திரைப்பட விழாவில் சிறந்த கனடிய திரைப்படமாக தெரிவு செய்யப்பட்டது. இவரது மூன்றாவது படம் Speaking Parts Director's Fortnight என்ற பிரிவில் கான்ஸ் திரைப்பட விழாவில் திரையிடப்பட்டது.

இதே பிரிவில் பிரான்ஸைச் சேர்ந்த தமி ழர் பிரதீபனின் குறும்படம் இவ் ஆண்டு திரையிடப்படுகின்றது. இவரது மற்றொரு திரைப்படமான EXOTICA கான்ஸின் பிரதான போட்டியில் 1994ல் போட்டியிட தெரிவானது. புத்து வருடங்களின் பின்னர் ஒரு கனடிய படம் இப் பிரிவில் தெரிவானது. இப் படம் கான்ஸின் சர்வதேச நடுவர்களின் விருதைப் பெற்றது. The Sweet Hereafter படம் ஒஸ்காரில் சிறந்த இயக்குனருக்கும், திரைக் கதைக்குமான இறுதிப் போட்டிக்கு தெரிவானது. 1996ல் கான்ஸின் நடுவர் குழுவில் ஒருவராக அங்கம் வகித்தார். இவ் வருடம் கான்ஸின் குறும்பட பிரிவின் தலைமை நடுவராக கடமையாற்றுகின்றார். இசை மீது அதிக நாட்டம் கொண்ட இவர் மூன்று ஒப்பிரா நிகழ்ச்சிகளையும் இயக்கியுள்ளார். இவரது படங்கள்

| Year | Film Notes |
| --- | --- |
| 1984 | Next of Kin First met Arsinée Khanjian |
| 1987 | Family Viewing |
| 1989 | Speaking Parts Best Motion Picture nomination, including five others, at the 1989 Genie Awards |
| 1991 | The Adjuster |
| 1993 | Calendar |
| 1994 | Exotica Won the FIPRESCI Prize at Cannes[5] |
| 1997 | The Sweet Hereafter |



| | |
|---|---|
| | Won three awards at Cannes[6] |
| 1999 | Felicia's Journey Palme d'Or nomination at Cannes[7] |
| 2002 | Ararat |
| 2005 | Where the Truth Lies Palme d'Or nomination at Cannes[8] |
| 2008 | Adoration |
| 2009 | Chloe |

2. Ararat

Ottoman Empire 1299 ல் இருந்து கார்த்திகை 1,1922 வரை நீண்டிருந்த சாம்ராஜ்யம். இதனை துருக்கி சாம்ராஜ்யம் எனவும் அழைப்பார்கள். இந்த சாம்ராஜ்யத்தின் முக்கிய மதம் சுனிமுஸ்லீம். 1500 களில் பாக்தாத், கெய்ரோ, ஜெருசலேம் வரை பரந்திருந்தது இந்த சாம்ராஜ்யம். இந்த சாம்ராஜ்யத்தில் பல்வேறு இனக் குழுக்களும் வாழந்தனர். ஆர்மேனியர் இந்த இனக் குழுக்களுள் ஒரு குழு. இன்று உலக வரைபடத்தில் ஆமேனியா என்ற நாடே இல்லை. ஒட்டமன் சாம்ராஜ்யத்தின் விரிவில் உள்ளடக்கபட்ட பல பிரதேசங்களுள் ஆமேனியாவும் ஒன்று. 15ம் நூற்றாண்டில் ஆமேனியா இந்த சாம்ராஜ்யத்தில் உள்ளடக்கப்பட்டது அல்லது ஆக்கிரமிக்கப்பட்டது எனலாம். ஆமேனியர் பெரும்பாலானோர் கிறிஸ்தவர்கள். இரண்டந்தர பிரசைகளாக நடாத்தப்பட்டார்கள். 1894-1896 க்குமிடைப்பட்ட பகுதியில் சுமார் மூன்று லட்சம் ஆமேனியர்கள் கொல்லப்பட்டனர். 1909ல் மீண்டும் சுமார் 15,000 பேர் கொல்லப்பட்டனர். Young Turk Partyyd; மத்திய குழுவால் 1916ல் திட்டமிடப்பட்டு ஆமேனியர் கொல்லப்பட்டனர். சித்திரை 24,1916ல் ஆமேனிய புத்திஜீவிகள் சுத்திவளைக்கப்பட்டு கொல்லப்பட்டனர். மிகுதியாக இருந்த ஆமேனியர் வன்னியில் உள்ள முகாம்கள் போன்ற முகாம்களில் அடைக்கப்பட்டனர். அதை விட சுமார் இரண்டு லட்சம் ஆமேனியர் சிரியாவிற்கும், கிறீஸ்க்கும் அனுப்பப்பட்டனர். இது நடைபெற்ற காலம் முதலாவது மகாயுத்தம் நடைபெற்ற காலமாகும். ஆயிரக் கணக்கானோர் வீதிகளில் வெட்டி எறியப்பட்டனர். பலர் பசியால் இறந்தனர்.இந்த படுகொலைகள் 1923 வரை நீடித்தது. இந்தப் பகுதியி ல் வேலை பார்த்த அமெரிக்க அதிகாரிகள் இந்த படுகொலைகளை வெளி உலகிற்கு உணர்த்தினர். பல ஆங்கில பத்திரிகைகள் முக்கிய செய்தியாக வெளியிட்டனர். இந்த படுகொலைகளை கண்டித்த துருக்கியர் சிறையில் அடைக்கப்பட்டனர். இந்த படுகொலைகளின் பிரதானமான நகரமாக வான் என்ற நகரம் திகழ்ந்தது. அமெரிக்க தலைமை வைத்திய அதிகாரியாக கடமையாற்றிய Dr.Clarence D.Ussher தலைமை இராணுவ அதிகாரியுடன் தொடர்பு கொண்டு கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முயற்சித்தும் தோல்வியில் முடிவடைந்து விட்டது. இவர் பின்னால் தனது நூலான An American Physician in Turkey என்ற நூலில் இக் கொலைகள் பற்றி விரிவாக எழுதியுள்ளார்.


Atom Egoyan

*ஆமேனிய புத்திஜீவிகள் சுத்திவளைக்கப்பட்டு கொல்லப்பட்னர். மிகுதியாக இருந்த ஆமேனியர் வன்னியில் உள்ள முகாம்கள் போன்ற முகாம்களில் அடைக்கப்பட்டனர். அதை விட சுமார் இரண்டு லட்சம் ஆமேனியர் சிரியாவிற்கும், கிறீஸ்க்கும் அனுப்பப்பட்டனர். இது நடைபெற்ற காலம் முதலாவது மகாயுத்தம் நடைபெற்ற காலமாகும். ஆயிரக் கணக்கானோர் வீதிகளில் வெட்டி எறியப்பட்டனர். பலர் பசியால் இறந்தனர்.*

முதலாம் உலக யுத்தத்தின் போது ஒட்டமன் சாம்ராஜ்யத்தின் ஆமேனியா பகுதியை ருசியா கைப்பிடித்தது. இது சோவியத் யூனியனின் தொடர்ச்சி வரை நீடித்தது. இதன் பின்னர் சுதந்திர ஆமேனிய குடியரசு தோன்றியது. மூன்றாவது சந்ததியைச் சேர்ந்த கனடிய இயக்குனரான Atom Egoyan ஆமேனியர்கள் மீதான துருக்கியரின் இன அழிப்பு படுகொலைகளை திரைப்படமாக்கியுள்ளார். Ararat என்ற இப் படம் கான்ஸின் முக்கிய படங்களுள் ஒன்றாக 2002ல் திரையிடப்பட்டது. சர்வதேசரீதயாக பெரும் அதிர்வை இப் படம் ஏற்படுத்தியது. ஊடக வலிமைக்கு இப் படம் ஒரு சான்றாகும். இன்று வரை துருக்கி இக் கொலைகளை மறுத்து வருகின்றது. இவ் வகையில் இப் படம் துருக்கி மீதான விமர்சனங்களை மீண்டும் சந்திக்கு கொண்டுவந்தது.

இயக்குனர் இப் படத்தை எடுத்துள்ள விதம் முக்கியமானது. நேரடியாக படு கொலைகளை எடுக்காமல், படுகொலைகளை பற்றி எடுக்கும் படமொன்றுக்குள் ஓர் படமாகவே இப் படம் எடுக்கப்பட்டுள்ளது. Filmmaker Edward Sorayan ஆமேனியா படுகொலைகளைப் பற்றிய படமொன்றை உண்மைச் சம்பவங்களை மையமாகக் கொண்டு தயாரிக்கின்றார். படு கொலைகள் நடைபெற்ற காலத்தில் வாழ்ந்த ஓவியர் Arshile Gorky என்ற ஓவியரைப் பற்றி ஆய்வு செய்ய ஒரு சரித்திர ஆய்வாளரை நியமிக்கின்றார். இவர் ரொரண்ரோவில் சரித்திர விரிவுரைகளை இந்த ஓவியர் பற்றி நிகழ்த்துகின்றார். இந்த ஓவியரின் "ஓவியரும் தாயும்" என்ற ஓவியம் பிரபல்யமானது.


Arshile Gorky "ஓவியரும் தாயும்"

ஆமேனியா படு கொலைகளின் போது இறந்த தாயை நினைத்து ஓவியர் வரைந்தது. பின்னாளில் 1948ல் ஓவியர் தற்கொலை செய்கின்றார். சரித்திர ஆய்வாளர் அனியின் குடும்பத்தில் பல குழப்பங்கள். அனியின் மகன் அனியின் பெறமகளை அல்லது அரைச் சகோதரனை காதலிக்கின்றார். அனியின் அரை மகள் சிலியா, அனி யின் இரண்டாவது கணவனும் சிலியாவி ன் தந்தையும் இறந்தமைக்கு அனியே காரணம் எனக் குற்றஞ்சாட்டுகின்றாள். அனியின் முதல் கணவனும் ரபியின் தந்தை துருக்கிய சர்வதேச அதிகாரி ஒருவரை கொலை செய்ய முயற்சிக்கும் பொழுது இறந்து விடுகின்றார்.

அனியின் மகன் ரபி படு கொலைகளை பற்றிய சில பதிவுகளை எடுப்பதற்கு துருக்கி செல்கின்றார். இவர் ரொரண்ரோ திரும்பும் வழியில் ரொரண்ரோ விமான நிலையத்தில் தடுத்து வைக்கப்படுகின்றார். சுங்க அதிகாரி கேள்விகளால் துளைத்தெடுக்கின்றார். விடியோ பிரதிகளுக்குள் என்ன இருக்கின்றது என்பதை விமான நிலையத்திலேயே ரபி யின் படம் பிடிக்கும் கருவியில் போட்டு பார்க்கின்றார். படு கொலைகள் திரையி ல் விரிகின்றன. சுங்க அதிகாரியின் குடும்பத்தில் புதிய பிரச்சினைகள். அவரது மகன் ஒருபாலியலாளர். இதனை ஏற்று கொள்ள முடியாதுள்ளார் இந்த அதிகா-ரி. இத் திரைப்படம் கான்ஸ்ல் திரையிட முன்னரே துருக்கிய அரசு, இப் படத்திற்கு எதிராக பிரச்சாரங்களை முடுக்கிவிட்டன. இப் படத்தில் இயக்குனரால் முன் வைக்கப்படும் ஹிட்லரின் வசனம் இது "Who remembers the extermination of the Armenians" . இயக்குனர் இப் படத்தை ஒரு புதிய தேடலுக்கான ஆரம்பமாக தொடங்கியுள்ளார். சரித்தி ரங்கள் தொடர்ந்து கேள்விகளை எழுப்பிக் கொண்டே இருக்கும். இதனால் தானோ தெரி யாது கான்ஸில் நடைபெற்ற பத்திரிகையாளர் சந்திப்பில் கருத்துக் கூறிய துருக்கிய பத்திரிகையாளர் கூறிய கருத்து இது இப்பொழுது இல்லாத துருக்கியர் செய்ததாக செய்யப்படும் பிரச்சாரம். உண்மை நிலை தெரிய எவரும் இல்லை . இதனால் வன்னியிலும் அனைவரும் கொலை செய்யப்பட்டார்களோ? படம் பல நிலைக-ளில் பதிவாகியுள்ளது. அனி தற்கொலை செய்து கொண்ட கவிஞரின் வாழ்க்கை வரலாறை எழுத முயற்சிக்கின்றார். சரோயன் படுகொலைகள் பற்றிய படமொன்றை எடுக்க முயற்சிக்கின்றார். ரபி உண்மை வரலாற்றை பதிவாக்க துருக்கி செல்கின்றார். சிலியா தனது தந்தையின் மரணத்தின் உண்மையை கண்டறிய முயற்சிக்கின்றார். சுங்க அதிகாரி மறந்த சரித்திரத்தின் தொடக்கமெதற்கு என ஆக்கிரமிக்கின்றார். இவை அனைத்தும் ஒரு தளத்தை நோக்கி நகருகின்றன. ஆமேனிய படு கொலைகளை மீள மக்கள் முன் விசாரணைக்குட்படுத்தல், துருக்கிய அரசு மீதான விமர்சனங்களை மீள தொடங்கல். இயக்குனர் தனது நோக்கம் பற்றி பின்வருமாறு கூறுகின்றார் That is the determining issue of why I made the film. It wasn't to ascertain the fact of the genocide..I think that we have to able to find a way to stop talking about this as a film of the American genocide. It is a film about living with the offers of the denial of that event into the present

இப் படம் இவரது வேதனையை பூர்த்தி செய்துள்ளது. நேற்று இன்று நாளை என வெவ்வேறு காலப் பகுதியில் ஏற்பட்ட மாற்றங்களையும் இப் படம் பதிவு செய்துள்ளளது. ஆர்மேனிய படுகொலைகள் எடுக்கப்பட்ட விதம் கண்கலங்க வைக்கின்றது. வண்டிலின் மேற்பகுதியல் ஒரு பெண்ணை துருக்கிய இராணுவம் பாலியல் வல்லுறவுக்குட்படுத்துகின்றது. வண்டியின் கீழ் பகுதியில் தாயின் கைகளை பிடித்த வண்ணம் ஒரு சிறுமி. ஒரு மாதுளம் பழத்தை உடைத்து ஒவ்வொரு முத்தை ஒவ்வொரு நாளும் உண்டு பசியாறும் தாய் என படம் திட்டமிட்ட படுகொ லைகள அப்பட்டமாக பதிவு செய்துள்ளது.



# தமிழ்த் தேசியத்தின் அடிப்படையும் அதன் வர்க்க நிலைப்பாடும்

- சி.கா.செந்திவேல் -

***"சமூக மாற்றத்திற்கான போராட்டப் பயணத்திற்கு முற்போக்கான தமிழ்த் தேசியத்தின் தோற்றமானது சாதகமானதாக அமையக் கூடியதாகும். ஆனால் அதுவே இறுதியானதும் வெற்றிபெறக் கூடியதும் என்ற முடிவுக்கு வருவதே அபத்தமாகும். எனவே தேசியம் தேசியவாதம் வலதுசாரிப்பதையில் பயணித்து ஃபாசிச சர்வாதிகாரத்தை அடையலாம். அல்லது இடதுசாரிப் பாதையில் பயணித்து சோசலிசத்தை அண்மிக்கலாம்."***

தோழர் சிவம் மறைந்து ஓராண்டாகி விட்டது. அவரது நினைவுகள் இன்றும் பசுமை நிறைந்தவையாகவே இருந்து வருகின்றன. மனித வாழ்வில் ஒருவரது வாழ்வும் அதனூடான அவரது சிந்தனையும் நடைமுறைச் செயற்பாடும் தான் அவர் பற்றிய நினைவின் கனதிக்கு காரணமாகின்றன. அந்த வகையில் தோழர் சிவம் தாயக மண்ணிலும் புலம் பெயர்ந்த நாட்டிலும் மாக்சிய உலக நோக்கினூடான வாழ்வு முறைக்குத் தன்னை ஆட்படுத்தி வாழ்ந்து மறைந்தவர். மாக்சிசவாதிகள் சர்வதேசிய வாதிகளாவர். அதனாலேயே அவர்கள் தேசியத்தின் அடிப்படைகளையும் அரசியலில் அதன் பரப்பெல்லைகளையும் கண்டு கொள்பவர்களாகின்றனர். தமிழ்த் தேசியம் தனது உச்ச நிலையை வெளிப்படுத்தி நின்ற ஒரு காலகட்டத்தில் அதனை எதிர் கொண்டு நின்ற புரட்சிகரப் பொதுவுடைமைவாதிகளில் தோழர் சிவமும் ஒருவராக இருந்தார் என்பது தான் அவருக்குரிய நினைவின் சிறப்பாகும். அந்த வகையில் அவரது நினைவாக வெளிவரும் இச் சிறப்பு மலரில் மேற்குறித்த தலைப்பில் கட்டுரை படைப்பது பொருத்தமுடையதாகும்.

அண்மைக் காலத்தில் இரண்டு கருத்து நிலைகள் தமிழ்ச் சூழலில் முன்வைக்கப்பட்டு வருவதை அவதானிக்க முடிகிறது. ஒன்று, தமிழ்த் தேசியத்தை யாரும் விமர்ச்சிக்கவோ அன்றி நிராகரிக்கவோ முற்படக் கூடாது. அத்தகைய முயற்சி முழுத் தமிழ்த் தேசிய இனத்தையும் பலவீனப்படுத்தி விடும் என்பதாகும். இரண்டாவது, தமிழ்த் தேசியம் உடைக்கப்பட்டு அதன் பிற்போக்கான அடிப்படைகள் நிராகரிக்கப்படுவதன் ஊடாக முற்போக்குத் தமிழ்த் தேசியம் தோற்றுவிக்கப்பட வேண்டும் என்பதாகும். முன்னையதைத் தமிழ்ப் பழைமை-வாதிகளும் பின்னையதை ஜனநாயக சக்திகளும் சார்ந்து நின்று கருத்துரைத்து வருவதைக் காண முடிகிறது. இவ்விரு கருத்து நிலைகளில் மாக்சிச லெனி னிசவாதிகள் பிற்போக்கான தமிழ்த் தேசியம் உடைக்கப்பட்டு முற்போக்குத் தமிழ்த் தேசியம் தோற்றுவிக்கப்படுவதை ஆதரித்து நிற்கின்றனர். ஏனெனில் சமூக மாற்றத்திற்கான போராட்டப் பயணத்திற்கு முற்போக்கான தமிழ்த் தேசியத்தின் தோற்றமானது சாதகமானதாக அமையக் கூடியதாகும். ஆனால் அதுவே இறுதியானதும் வெற்றிபெறக் கூடியதும் என்ற முடிவுக்கு வருவதே அபத்தமாகும். எனவே தேசியம் தேசியவாதம் வலதுசாரிப்பதையில் பயணித்து ஃபாசிச சர்வாதிகாரத்தை அடையலாம். அல்லது இடதுசாரிப் பாதையில் பயணித்து சோசலிசத்தை அண்மிக்கலாம். அதனாலேயே இறுகிப்போன நிலையில் காணப்படும் தமிழ்ப் பழை மைவாதச் சூழலில் முற்போக்கான தமிழ்த் தேசியம் தோற்றுவிக்கப் படுவதை மாக்சிச லெனி னிசவாதிகள் ஊக்குவிக்கின்றனர்.

தேசியம் என்பது நிலவுடைமைக் காலத்திற்கு உரிய ஒன்றல்ல. முதலாளித்துவ உற்பத்தியும், மூலதனத் திரட்சியும், சுரண்டல், சந்தை, லாபக் குவிப்பு என்பனவற்றின் காரணமாகவே தேசியம் தோற்றம் பெற்று வளர்ந்தது. அது முற்றிலும் முதலாளித்துவ காலகட்டத்தின் உற்பவிப்பாகும். அந்த வகையில் மேற்குலகில் தோன்றி வளர்ந்த முதலாளித்துவமும் தேசியமும் நிலவுடைமைக்கால கருத்தியல்களையும் அவற்றின் ஆதிக்க மையங்களையும் குறிப்பாக மத பண்பாட்டு ஆதிக்கப் பின்புலங்களையும் உடைத் தெறிந்தன. இதன் மூலம் முதலாளித்துமும் அதன் கீழான தேசியமும் தங்குதடையற்ற வளர்ச்சிப்பாதையில் முன் சென்றன. ஆனால் கொலனித்துவத்தின் கீழ் அதனை

ஏதிர்த்து வளர ஆரம்பித்த தென்னாசியச் சூழலிலான தேசியம் என்பது நிலவுடைமைக் கருத்தியலினதும் அதன் கீழான மத ஆதிக்கத்தினின்றும் வேறுக்கப்படாத ஒன்றாகவே வளர்த்தெடுக்கப்பட்டது. அவ்வாறு நோக்கும் போது இலங்கையில் வளர்ச்சி பெற்று வந்த சிங்களத் தேசியமும் தமிழ்த் தேசியமும் நிலவுடைமைக் கருத்தியல் சிந்தனை நடை முறைகளில் வேர் பிடித்தவையாகவே வளர்ந்தன. இவ்வாறு தேசியவாதத்தை முன்னெடுத்த சிங்களத் தலைமைகளும் தமிழ்த் தேசியத்தை கையேற்ற தமிழ்த் தலைமைகளும் நிலவுடைமை மேட்டுக்குடி வழி வந்த உயர்வர்க்கத்தினராகவே இருந்தனர் என்பது ஊன்றிக் கவனிக்க வேண்டியதாகும். இன்றுங் கூட, அதன் தொடர்ச்சி கருத்தியல், சிந்தனை, நடைமுறை நிலைகளிலும், அரசியல் தலைமைத்துவங்களிலும் நீடித்து நிலைத்து வருவதைக் காண இயலும். இத்தகைய தொடர்ச்சி அறு-படாத தலைமைகள் யாவும் தமது வர்க்கநிலைப் பாதுகாப்பிலும் அந்நிய ஏகாதியத்திய மேலாதிக்க சக்திகளுடனான பிணைப்பிலும் தம்மை வளப்படுத்தியவாறு இருந்து வருகிறார்கள். அதே வேளை தத்தமது தேசியவாதக் கருத்துகளின் தீவிரத்தால் மக்களைப் பிளவு படுத்தி ஒருவரோடு ஒரு-வரைப் பகைப்படுத்துவதில் கவனமாக இருந்தும் வருகிறார்கள். வர்க்க அடிப்படையில் சுரண்டி ஒடுக்கப்படும் அனைத்து தேசிய இன மக்களையும் வர்க்க நிலையில் ஒன்றுசேர விடாது தடுத்துத் தனித்தனித் தேசியங்கள் என்ற இரும்பு வலைகளுக்குள் வைத்துத் தாமே மேய்ப்பர்களாக இருந்து வரும் போக்கினையே இன்று காண முடிகின்றது. இதன் ஒரு அம்சமாகவே தமிழ்த் தேசியம் பற்றிய விரிவான ஒரு பார்வையைச் செலுத்த வேண்டியுள்ளது. இப் பார்வையானது இன மொழி வழிப்பட்டதாகவே பலரால் நோக்கப்படுகிறது. மாக்சிச அடிப்படையிலான வர்க்கப் போராட்டக் கண்ணோட்டத்தில் வரலாற்று வளர்ச்சியின் ஊடாக நோக்கப்படுவதை தமிழ்த் தேசியவாதிகள் விரும்புவதுமில்லை ஏற்பதும் இல்லை. ஆனால் வரலாற்று நிர்ப்பந்தமானது இத்தகைய ஒரு பார்வையை வேண்டி நிற்கிறது.

தமிழ்த் தேசியத்தின் தோற்றக் காலத்தைக் கணிக்க முற்படும் பலர் அதனை ஆறுமுக நாவலரது சைவசமய புத்தெழுச்சிக் காலத்திலிருந்து தொடங்க முற்படுவர். ஆனால் நாவலரது செயற்பாடானது சைவ சமயத்தைத் தூய்மைப்படுத்தி பழைமைவாத அடிப்படையில் அதனை நிலைப்படுத்தும் நோக்கத்தையே கொண்டிருந்தது. அதன் போக்கிலேயே கிறிஸ்தவ மதமாற்ற எதிர்ப்பையும் நாவலர் கொண்டிருந்தார். கொலனித்துவ வாதிகளை எதிர்த்து நிற்காத நிலைப்பாடுடைய நாவலர் நிலவுடைமை வழிவந்த உயர் வெள்ளாள ஆதிக்கக் கருத்தியல் சிந்தனை நடைமுறைகளின் நிலைப்பிற்கும் நீடிப்பிற்கும் வழி வகுத்து நின்றார். அதன் மூலம் சாதியம் - தீண்டாமை, ஆணாதிக்கம்-பெண்ணடிமை ஆகியவை நாவலர் காலத்தில் மேன்மேலும் கட்டிறுக்கமுடையனவாக அமைந்து கொண்டன. எனவே நாவலர் காலத்திலிருந்து தமிழ்த் தேசியத்தின் தோற்றத்தைக் கணக்கிட முயல்வது, எதிலும் காலத்தை பின் நீட்டிக் காணும் போக்கில் பெருமையடைவதாகும்.

ஆதலால் கடந்த நூற்றாண்டின் இருபதுகளுக்கு முன் பின்னாகவே தமிழ்த் தேசியத்திற்கான கருத்து நிலைகள் வெளிப்பட ஆரம்பித்தன. தமிழர்களிடையேயான வியாபார, வர்த்தக, கல்வித் துறைகளிலான வளர்ச்சியானது தமிழ்த் தேசியத்திற்கான சிந்தனைப் போக்குகள் வளர வழிவகுத்தன. இவ்வாறு கடந்த நூற்றாண்டின் ஊடாகத் தமிழ்த் தேசியம் என்பது ஒவ்வொரு கட்டங்களைக் கடந்து வந்துள்ள வரலாற்றினைக் காண இயலும். அவற்றை மூன்று முக்கிய காலகட்டங்களாக வகுத்துக்காண்பது பயன் தருவதாகும்.

முதலாவது கால கட்டம் (1918–1948) பொன்னம்பலம் இராமநாதன்-அருணாசலம் சகோதரர்களின் பிற்காலம் முதல், ஜீ.ஜீ. பொன்னம்பலத்தின் தலைமையும் அதன் ஊடாக உருவாகிய அகில இலங்கை தமிழ்க் காங்கிரஸ் கட்சியும் தமிழ்த் தேசியத்தை



> "தமிழ்த் தேசியத்தின் தோற்றக் காலத்தைக் கணிக்க முற்படும் பலர் அதனை ஆறுமுக நாவலரது சைவசமய புத்தெழுச்சிக் காலத்திலிருந்து தொடங்க முற்படுவர். ஆனால் நாவலரது செயற்பாடானது சைவ சமயத்தைத் தூய்மைப்படுத்தி பழைமைவாத அடிப்படையில் அதனை நிலைப்படுத்தும் நோக்கத்தையே கொண்டிருந்தது. கொலனித்துவ வாதிகளை எதிர்த்து நிற்காத நிலைப்பாடுடைய நாவலர் நிலவுடைமை வழிவந்த உயர் வெள்ளாள ஆதிக்கக் கருத்தியல் சிந்தனை நடைமுறைகளின் நிலைப்பிற்கும் நீடிப்பிற்கும் வழி வகுத்து நின்றார்."

**இவ்வாறு தமிழ்த் தேசியத்தை முன்னெடுத்த அகில இலங்கைத் தமிழ்க் காங்கிரசானது சைவ உயர் வேளாள மேட்டுக் குடியினரை முதன்மைப்படுத்திய கட்சியாக நின்றது. அதன் தமிழ்த் தேசியத்திற்கான முழக்கமாக அன்று காணப்பட்ட விடயம் "தமிழன் என்று சொல்லடா தலை நிமிர்ந்து நில்லடா என்பதாகும். உயர் வேளாள மேட்டுக்குடி சட்டவாதிகளும் கல்வியாளர்களும் நிறைந்து காணப்பட்ட அத் தமிழ்க் காங்கிரஸ் வளர்ந்து கொண்டிருந்த சிங்கள பௌத்த பேரினவாதத்திற்கு முகம் கொடுத்து நிற்கும் என்றே தமிழ் மக்கள் நம்ப வைக்கப்பட்டனர்.**



முன்னெடுத்து நின்றது. கொலனிய ஆட்சியினால் வழங்கப் பெற்ற சேர் பட்டங்களையுடைய பொன்னம்பலம் இராமநாதன் சகோதரர்கள் யாழ்ப்பாணத்தைப் பூர்வீகமாகவும் கொழும்பை மையமாகவும் கொண்ட தனவந்தர்களாகவும் உயர் கல்வியாளர்களாகவும் காணப்பட்டனர். அவர்கள் சைவ உயர் வேளாள மேட்டுக்குடி வழி வந்தவர்களாகவும் விளங்கினர். பிரித்தானிய கொலனியவாதிகளுக்கு மிகுந்த விசுவாசமானவர்களாக இருந்தனர். இவ் இருவர்களில் இராமநாதன் பழைமை வாதப் பிற்போக்குத்தனங்களை இறுக்க முடையனவாகக் கொண்டிருந்தார். அவரது சகோதரர் அருணாசலம் அதிலிருந்து சற்று வேறுபட்டுச் சில முனைகளில் மனிதாபிமானியாகவும் ஜனநாயகவாதியாகவும் அன்றைய சூழலில் முற்போக்குடையவராகவும் விளங்கினார். இருப்பினும் நிலவுடைமைக் கருத்தியல் நடைமுறை சிந்தனை விதித்த எல்லைகளைத் தாண்ட முடியாதவராகவே இருந்தார்.

கொழும்பை மையமாகக் கொண்டு தோற்றம் பெற்ற மேற்படி தமிழ்த் தேசியத்தை வட புலத்திற்கு இடம் மாற்றுவதில் ஜீ.ஜீ. பொன்னம்பலம் முன்னின்றார். யாழ்ப்பாண வடமராட்சியின் மேட்டுக் குடி உயர் வேளாள வழி வந்த ஜீ.ஜீ. பொன்னம்பலம் ஆங்கிலப் புலமையும் பேச்சாற்றலும் மிக்க, பிரித்தானியக் கல்வி பெற்ற இளம் சட்டத்தரணியாக தமிழ்த் தேசிய அரசியலில் புகுந்தார். அதே அளவிற்கு சிங்களத் தேசியத்தை முன்னெடுத்த சிங்களத் தலைவர்களிடையே எஸ். டபிள்யூ.ஆர். டி. பண்டாரநாயக்கா விளங்கினார். இவ்விருவருக்குமிடையில் சில முனைகளில் ஒற்றுமையும் வேற்றுமையும் காணப்பட்டன. அதில் கவனத்திற்குரியது தான் இருவரும் நிலவுடைமை வழிவந்த "உயர் வெள்ளாள" "உயர் கொய்கம" மேட்டுக்குடியினராக விளங்கியமையாகும். இவர்கள் தான் தமிழ் சிங்களத் தேசியத்தை பேரினவாதமாகவும் குறுந்தேசியவாதமாகவும் இலங்கையில் வளர்த்தெடுப்பதில் ஆரம்பம் முதல் தமது பங்கைச் செலுத்தியவர்கள்.

ஐம்பதுக்கு ஐம்பது என்னும் சம பிரதிநிதித்துவத்தை முன்வைத்து (ஐம்பது சதவீதம் சிங்களவரும் இருபத்தைந்து சதவீதம் தமிழர்களும் மிகுதி இருபத்தைந்து சதவீதம் ஏனைய சிறுபான்மையினரும்) அதனை வலியுறுத்தியதன் மூலம் பொன்னம்பலம் தமிழ்த் தேசிய அரசியலில் முக்கியத்துவம் பெற்றார். இதனால் 1934ல் அரசாங்க சபைக்கும், பின்பு அகில இலங்கை தமிழ்க் காங்கிரசை நிறுவி 1947ன் முதலாவது பாராளுமன்றத்திற்கும் தெரிவானார். அவருடன் கூடவே அதே காங்கிரஸ் மூலமாக எஸ்.ஜே.வி. செல்வநாயகம், கு. வன்னியசிங்கம் போன்ற பிற்காலத் தமிழரசுக் கட்சியின் தலைவர்கள் முதலாவது பாராளுமன்றப் பிரவேசம் செய்தனர்.

இவ்வாறு தமிழ்த் தேசியத்தை முன்னெடுத்த அகில இலங்கைத் தமிழ்க் காங்கிரசானது சைவ உயர் வேளாள மேட்டுக் குடியினரை முதன்மைப்படுத்திய கட்சியாக நின்றது. அதன் தமிழ்த் தேசியத்திற்கான முழக்கமாக அன்று காணப்பட்ட விடயம் "தமிழன் என்று சொல்லடா தலை நிமிர்ந்து நில்லடா" என்பதாகும். உயர் வேளாள மேட்டுக்குடி சட்டவாதிகளும் கல்வியாளர்களும் நிறைந்து காணப்பட்ட அத் தமிழ்க் காங்கிரஸ் வளர்ந்து கொண்டிருந்த சிங்கள பௌத்த பேரினவாதத்திற்கு முகம் கொடுத்து நிற்கும் என்றே தமிழ் மக்கள் நம்ப வைக்கப்பட்டனர். மேட்டுக்குடி தனவந்தர்கள், சட்டவாதிகள், பேச்சாற்றல் மிக்கவர்களான இத் தலைவர்கள் தமிழ்த் தேசியத்தின் பாதுகாவலர்கள் என அப்பாவித்தனமாகத் தமிழ் மக்கள் நம்பினர். ஆனால் தமது வர்க்க நலன்களிலும் தம்மை ஒத்த சிங்கள மேட்டுக்குடி உயர் கொய்கம சகபாடிகளுடனும் ஐக்கியத்துடனேயே இத் தலைவர்கள் விளங்கினர்.

இச் சூழலிலேயே இலங்கையின் மலையகத் தமிழ் மக்களின் பிரசாவுரிமையை டி.எஸ்.

சேனநாயக்கா தலைமையிலான ஐக்கிய தேசியக் கட்சி அரசாங்கம் பறித்ததுடன் வாக்குரிமையற்றவர்களாகவும் ஆக்கியது. வர்க்க இன அடிப்படையில் மலையக மக்களுக்கு எதிராக இழைக்கப்பட்ட இவ் அநீதி பேரினவாத முதலாளித்துவ சிங்கள ஆளும் வர்க்கத்தின் சுதந்திரம் என்பதற்குப் பின்னான முதல் ஒடுக்கு முறைச் செயற்பாடாக அமைந்தது. இதனை எதிர்ப்பதில் அகில இலங்கை தமிழ்க் காங்கிரஸ் பிளவுபட்டது. ஜீ.ஜீ. பொன்னம்பலம் ஐக்கிய தேசியக் கட்சியில் அமைச்சராகினார். அதனால் பிரசாவுரிமைப் பிரச்சினையின் இரண்டாவது சட்டமூலத்தை ஜீ.ஜீ. பொன்னம்பலம் ஆதரித்தார். ஆனால் எஸ். ஜே.வி. செல்வநாயம் அதனை எதிர்த்தார்.

இரண்டாவது காலகட்டம் (1948–1976) எஸ்.ஜே.வி. செல்வநாயகம் தலைமையில் தமிழரசுக் கட்சி ஆரம்பிக்கப்பட்டதில் இருந்து தமிழ்த் தேசியம் மற்றொரு காலகட்டத்தினுள் பிரவேசித்துக் கொண்டது. இத் தமிழரசுக் கட்சியை வழி நடாத்திய தமிழரசுத் தலைவர் பெரும் தனவந்தரும் குடியியல் சட்டத்தில் திறமை பெற்றவரும் யாழ்ப்பாண உயர் வெள்ளாள கிறிஸ்தவ மேட்டுக்குடியைச் சேர்ந்தவருமாவார். அவரது தலைமையில் தமிழரசுக் கட்சியின் தலைவர்களுமாக இருந்தவர்கள் உயர் வெள்ளாள மேட்டுக்குடி வழிவந்தவர்களாகவே இருந்தனர். இவர்கள் கருத்தியல் ரீதியில் முன்னையவர்கள் போன்று நிலவுடைமைப்

பின்பு எல்லா ஆசனங்களையும் தமக்குத் தருமாறும் அதற்கு அப்பால் தெரிவு செய்யப்பட்டோரை தமிழினத் துரோகிகள் என்றும் அடையாளப்படுத்தத் தொடங்கியமை இத் தமிழரசுக் கட்சிக் காலத்திலேயே பிரபல்யம் பெற்றது.

தமிழ்க் காங்கிரசிற்கும் தமிழரசுக் கட்சிக்குமிடையிலான தலைமைத்துவ வேறுபாடு, முன்னையது சைவ உயர் வெள்ளாள மேட்டுக்குடித் தலைமைத்துவத்தைக் கொண்டிருந்தது. பின்னையது சைவ-கிறிஸ்தவ உயர் வெள்ளாளத் தலைமையைக் கொண்டிருந்தமையாகும். தமிழரசுக் கட்சியானது, மட்டுப்படுத்தப்பட்ட எதிர்ப்பியக்கங்களை நடத்தியது. தமிழ்த்



> **தமிழரசுக் கட்சியானது சிங்கள பௌத்த பேரினவாதத்தின் தமிழர்கள் மீதான இன ஒடுக்கு முறைக்கு எதிர்ப்பு அரசியலை முன்னெடுப்பதாகத் தோற்றங்காட்டியது. அது பாராளுமன்ற ஆசனங்களை அதிகளவு வென்றெடுப்பதை நோக்கமாகக் கொண்டே முன்னெடுக்கப்பட்டது. அதிக ஆசனங்களை வலியுறுத்திய அவர்கள் பின்பு எல்லா ஆசனங்களையும் தமக்குத் தருமாறும் அதற்கு அப்பால் தெரிவு செய்யப்பட்டோரை தமிழினத் துரோகிகள் என்றும் அடையாளப்படுத்தத் தொடங்கியது**

இதனால் எஸ்.ஜே.வி.யும் அவரை ஆதரித்தோரும் காங்கிரசில் இருந்து வெளியேறித் தனிக் கட்சியாக தமிழரசுக் கட்சியைத் தோற்றுவித்தனர். இப் பிளவானது வளர்ந்து கொண்டிருந்த சிங்கள பௌத்த பேரினவாதத்தை முற்போக்கான திசையில் எவ்வாறு எதிர்த்து தமிழ்த் தேசியத்தை முன்னெடுப்பது என்பதை விடத், தலைமைத்துவம், பதவிகள், வர்க்க நலன்கள் போன்றவற்றில் ஏற்பட்ட போட்டியாகவே இருந்தது. எவ்வாறாயினும், இப் பிளவு, தமிழ்த் தேசியம் தனது இரண்டாவது காலகட்டத்தினுள் பிரவேசிக்கும் வரலாற்று நிகழ்வாகியது.

பழைமைவாதப் பாரம்பரியத்திலிருந்து விலகாதவர்களாகவே இருந்தனர். அதனால் அக் கட்சி, தமிழர்கள் மத்தியில் இருந்து வந்த சாதியம், பெண்ணடிமை, பிரதேச வேறுபாடுகள் போன்றவற்றுக்குத் தீர்வுகாண்பதற்குரிய கொள்கைத் திட்டங்களைச் செயற்பாட்டு ரீதியில் கொண்டதாக இருக்கவில்லை.

தமிழரசுக் கட்சியானது சிங்கள பௌத்த பேரினவாதத்தின் தமிழர்கள் மீதான இன ஒடுக்கு முறைக்கு எதிர்ப்பு அரசியலை முன்னெடுப்பதாகத் தோற்றங்காட்டியது. அது பாராளுமன்ற ஆசனங்களை அதிகளவு வென்றெடுப்பதை நோக்கமாகக் கொண்டே முன்னெடுக்கப்பட்டது. அதிக ஆசனங்களை வலியுறுத்திய அவர்கள்

தேசியத்தை முன்னுறுத்தி முழக்கங்களை உணர்ச்சி பூர்வமாக எழுப்பி நின்றது. தமிழில் தரமான பேச்சாளர்களையும் கொண்டிருந்தது. கறுப்புக் கொடி இயக்கம், துக்கதினம், சத்தியாக்கிரகம், பாத யாத்திரை, எழுச்சி மாநாடுகள், எதிர்ப்புக் கூட்டங்கள் அமைச்சர்கள் வரவை எதிர்த்தல் போன்றவை மூலம் தமிழ் மக்களை, குறிப்பாக இளைஞர்களை, எழுச்சிப்படுத்துவதில் தமிழரசுக் கட்சி முன்னின்றது. அதனால் அவர்களது பாராளுமன்ற ஆசனங்களின் எண்ணிக்கை அதிகரித்தது. மேலும் பேச்சாற்றல் அற்றவரும் அதிகம் பேசாதவருமான எஸ்.ஜே.வி. செல்வநாயகத்திற்கு "ஈழத்துக் காந்தி," "தமிழரசுத் தந்தை" என்ற படிமங்களும்

பேச்சுவல்லமை மிக்கவரான அ. அமிர்தலிங்கத்திற்கு தமிழரசுத் தளபதி, அண்ணன் அமிர்தலிங்கம் போன்ற உணர்ச்சி தோற்றங்களும் காட்டப்பட்டன.

மறுக்கப்படும் இன மொழி உரிமைகளையும், திட்டமிட்ட தமிழர் நிலப் பறிப்பையும் தமிழரசுக் கட்சி தனது எதிர்ப்பு இயக்கங்கள் மூலம் எதிர்ப்பதாகக் காட்டியதன் மூலம் தமிழ்த் தேசியத்தை வடக்கு கிழக்கில் ஒட்டுமொத்தமாகப் பாதுகாப்பதற்குத் தாமே தனித் தகுதியுடையவர்கள் எனக் காட்டி நின்றது. அதன் மூலம் வாக்கு வங்கியைத்திரட்டி பாராளுமன்ற ஆசனங்களையும் அதிகரித்து வந்தது. அதற்கு முன்பு தமிழ்க் காங்கிரஸ் தமிழ்த் தேசியத்தின் பெயரால் முன்னெடுத்த முன்னெடுக்க முடியவில்லை. அதற்குக் காரணம் அவர்கள் கொண்டிருந்த பழைமைவாத ஆதிக்கப் பிற்போக்குக் கருத்தியலும் அது சார்ந்த உயர் வர்க்க நிலைப்பாடுமேயாகும்.

வடக்கு-கிழக்குத் தமிழ் மக்கள் மத்தியில் சமஸ்டி எனக் கூறி எதிர்ப்பு இயக்கங்களைத் தமது பாராளுமன்ற ஆசனங்களுக்கு அளவானதாக முன்னெடுத்து வந்தமையானது நீண்ட காலத்துக்குரிய செயற்பாடாக அமைய முடியவில்லை. தமிழ் மக்கள், குறிப்பாக இளம் தலைமுறையினர், மத்தியில் வளர்ந்து வந்த அதிருப்தியையும் எதிர்ப்புணர்வையும் மடைமாற்றம் செய்வதற்கே 1976ல் தனித்தமிழ் ஈழம் என்னும் பிரிவினைக் கோரிக்கை எதிர்பாராத சூழலில் எதிர்க்கட்சித் தலைமைப் பதவியை அ. அமிர்தலிங்கமும் பெற்றுக் கொண்டமை மட்டுமே அவர்களுக்குரிய இறுதி உச்சமான தமிழ் தேசிய அரசியலாக அமைந்து கொண்டது. தமிழரசுக் கட்சியானது எஸ். ஜே.வி. செல்வநாயகம்-அமிர்தலிங்கம் தலைமையில் சுமார் மூன்று தாசப்தங்கள் தமிழ்த் தேசியத்தைப் பிற்போக்கான தளத்தில் வைத்து பாராளுமன்ற அரசியல் ஊடாக முன்னெடுத்து வந்தது. ஆனால் தமிழ்த் தேசியம் சிங்கள பௌத்த பேரினவாதத்தின் மூலம் ஒடுக்கப்படுவதை அவர்களது தலைமையால் தடுத்து நிறுத்த முடியவில்லை. அதற்கு அடிப்படையாக அமைந்தவை அவர்கள் கொண்டிருந்த தமிழர் பழைமைவாதப் பிற்போக்கு கருத்தியலும்

> **“ கூட்டணி 1976இல் முடிந்த முடிவாக எடுத்த வட்டுக்கோட்டைத் தீர்மானமே “சுதந்திர இறைமையுள்ள மதச் சார்பற்ற சோசலிச தமிழீழ அரசை உருவாக்குவது'' என்பதாகும். அடுத்து வந்த 1977இன் பொதுத்தேர்தலில் மேற்படி கூட்டணி பதினெட்டு ஆசனங்களை வடக்கு கிழக்கில் பெற்றுக் கொள்ள மேற்படி தீர்மானம் காரணமாகியது. இவ் வெற்றியின் மூலம் அ. அமிர்தலிங்கம் முதலும் முடிவுமாகப் பாராளுமன்றத்தில் எதிர்க்கட்சித் தலைவராகவும் பதவி வகிக்க முடிந்தது. அதற்கு அப்பால் மேற்படி தீர்மானத்தால் எதனையும் சாதிக்க முடியவில்லை. ”**



ஆதிக்க அரசியலைத் தமிழரசுக் கட்சி தனதாக்கிக் கொண்டது. கட்சியும் தலைவர்களும் மாறினார்களே தவிரத், தமிழ்த்தேசியத்தின் வர்க்க அடிப்படையில் மாற்றம் எதுவும் நிகழவில்லை.

இத்தகைய தமி ழரசுக் கட்சியினால் பேரினவாத ஒடுக்குமுறையின் தீவிரத்தைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. அதற்குப் பல்வேறு காரணங்கள் காணப்பட்டன. பரந்துபட்ட தமிழ் மக்களின் எதிர்ப்பு இயக்க நிலை காரணமாகத் தமிழரசுக் கட்சியை சுற்றி அவ்வப்போது மக்கள் திரண்ட போதிலும், அவற்றை ஒரு பரந்த தளத்தில் வெகுஜன அணிதிரட்டலாகவும் வெகுஜனப் போராட்டமாகவும் அவர்களால் முன்வைக்கப்பட்டது. அதன் போது சுயநிர்ணய உரிமை என்ற பதம் உச்சரிக்கப்பட்ட போதிலும் அதன் உண்மையான தாற்பரியம் கண்டு கொள்ளப்பட வில்லை.

தமிழ்த் தேசியத்தின் உச்ச நிலைக் குரலாகவும் கொள்கையாகவும் தனித் தமிழ் ஈழம் என்பது தமிழரசுக் கட்சித் தலைமைத்துவத்தால் தமிழர் விடுதலைக் கூட்டணி என்ற பெயரில் முன்வைக்கப்பட்டதே தவிர அதனை அடையும் மார்க்கம் “இரகசியம்” என்றே கூறப்பட்டு வந்தது. இதன் மூலம் வடக்கு கிழக்கில் அதிக பாராளுமன்ற ஆசனங்களும் அதனை வைத்து அதனை முன்னெடுத்த உயர் வர்க்கத் தலைமையுமேயாகும். அதனாலேயே தன்னை மதித்துப் போற்றிய தமிழ்த் தேசிய ஆதரவாளர்களுக்கு எஸ்.ஜே.வி. செல்வநாயகம் தனது இறுதி வசனமாகத் தமிழர்களைக் கடவுள் தான் காப்பாற்ற வேண்டும் எனக் கூறிச் சென்றார்.

மூன்றாவது கால கட்டம் (1976-2009) எஸ்.ஜே.வி. செல்வநாயகம், அ. அமிர்தலிங்கம், மு. சிவசிதம்பரம் ஆகியோரை முதன்மையாகக் கொண்ட தமிழர் ஐக்கிய விடுதலைக் கூட்டணி தமிழ் இன ஐக்கியத்தின் பெயரில் தோற்றுவிக்கப்பட்டிருந்தது. இக் கூட்டணி 1976இல் முடிந்த முடிவாக

எடுத்த வட்டுக்கோட்டைத் தீர்மானமே "சுதந்திர இறைமையுள்ள மதச் சார்பற்ற சோசலிச தமிழீழ அரசை உருவாக்குவது" என்பதாகும். அடுத்து வந்த 1977இன் பொதுத்தேர்தலில் மேற்படி கூட்டணி பதினெட்டு ஆசனங்களை வடக்கு கிழக்கில் பெற்றுக் கொள்ள மேற்படி தீர்மானம் காரணமாகியது. இவ் வெற்றியின் மூலம் அ. அமிர்தலிங்கம் முதலும் முடிவு-மாகப் பாராளுமன்றத்தில் எதிர்க்கட்சித் தலைவராகவும் பதவி வகிக்க முடிந்தது. அதற்கு அப்பால் மேற்படி தீர்மானத்தால் எதனையும் சாதிக்க முடியவில்லை.

அதேவேளை இத் தீர்மானத்தைச் சிங்கள பௌத்த பேரினவாத ஆளும் வர்க்கமோ சாதாரண சிங்கள மக்களோ ஏற்றுக் கொள்ளவில்லை. அன்றியும் சிங்கள மக்கள் பிரிவினைக் கோரிக்கை மூலம் தமது ஒரே ஒரு சொந்த நாடாக விளங்கும் இலங்கை துண்டாடப்படுவதை எதிர்த்தனர். இதனை சிங்கள ஆளும் வர்க்கத்தினர் தமது ஆட்சி அதிகார இருப்பிற்குரிய அடிப் படையாகவும் பயன்படுத்திக் கொண்டிருந்தனர். இலங்கையைத் தமது நவகொலனித்துவப் பிடிக்குள் வைத்திருக்க விரும்பிய அமெரிக்க, இந்திய, ஐரோப்பிய வல்லரசுச் சக்திகள் மேற்படி தீர்மானத்தின் பின்னால் கால்பதித்தும் கொண்டனர். அதன் விளைவு விரைவாகவே இன முரண்பாடு ராணுவ ஒடுக்கு முறையாகவும் பாராளுமன்ற வழியும் அகிம்சையான எதிர்ப்பும் ஆயுதப் போராட்டமாகவும் வளர்ச்சி காண ஆரம்பித்தன.





**தமிழீழ விடுதலையை வென்றெடுக்க கொலைகள், கொள்ளைகள், கப்பங்கள், வரிகள் மூலம் பணம் பொருள் திரட்ட, ஆயுதங்களே அவர்களை வழிநடத்தின. இந்திய, அமெரிக்க ஆலோசனைகள் வழிகாட்டின. ஆதரவும் அரவணைப்பும் கொடுத்த மக்களே பல வழிகளிலும் பலிக் கடாக்கள் ஆக்கப்பட்டனர். யாவும் தமிழ்த் தேசியத்தின் பெயரால் முன்னெடுக்கப்பட்டன. இறுதியில் தமிழீழ விடுதலைப் புலிகள் தனியொரு ஆதிக்க இயக்கமாக வே.பிரபாகரன் தலைமையில் தனிவளர்ச்சி கண்டு ஏனைய இயக்கங்களை அழிக்க முற்பட்டு அதனால் சகோதரப் படுகொலைகள் பிரதான போக்காகின.**



பௌத்த சிங்கள பேரினவாத ராணுவ ஒடுக்குமுறை தனது கொடிய நடவடிக்கைகளால் தமிழ் மக்கள் மீதான தாக்குதலை விரிவுபடுத்தி வந்த சூழலில் தமிழ் இளைஞர்கள் ஆயுத நடவடிக்கைகளுக்கு முன்வந்து தம்மை தீவிரவாத இயக்கங்களாக்கிக் கொண்டனர். அவற்றுக்கு இந்தியா தனது உள்நோக்க அடிப்படையில் அரவணைப்பும் ஆதரவும் வழிகாட்டலும் வழங்கியது. முப்பத்திமூன்று வருட காலத்தில் இவ்வாறு தோன்றி வளர்ந்து பல்வேறு நிலைப்பாடுகளை அவ்வப்போது எடுத்து வந்த ஆயுதந் தாங்கிய தமிழ் இளைஞர் இயக்கங்கள் யாவும் தமிழீழத்தை வென்றெடுப்பதற்கு என்றே இளைஞர் யுவதிகளைத் தத்தமது இயக்கங்களில் அணி திரட்டிக் கொண்டன. தமிழீழ விடுதலையை வென்றெடுக்க கொலைகள், கொள்ளைகள், கப்பங்கள், வரிகள் மூலம் பணம் பொருள் திரட்ட, ஆயுதங்களே அவர்களை வழிநடத்தின. இந்திய, அமெரிக்க ஆலோசனைகள் வழிகாட்டின. ஆதரவும் அரவணைப்பும் கொடுத்த மக்களே பல வழிகளிலும் பலிக் கடாக்கள் ஆக்கப்பட்டனர். யாவும் தமிழ்த் தேசியத்தின் பெயரால் முன்னெடுக்கப்பட்டன. இறுதியில் தமிழீழ விடுதலைப் புலிகள் தனியொரு ஆதிக்க இயக்கமாக வே.பிரபாகரன் தலைமையில் தனிவளர்ச்சி கண்டு ஏனைய இயக்கங்களை அழிக்க முற்பட்டு அதனால் சகோதரப் படுகொலைகள் பிரதான போக்காகின. இதனால் பேரினவாத ஆளும் வர்க்கத்துடன் புலிகள் தவிர்ந்த தமிழ் இளைஞர் இயக்கங்கள் சமரசமாகித் தாம் ஜனநாயக நீரோட்டத்தில் கலப்பதாகக் கூறி இணைந்து கொண்டன. இதன் போது இந்திய ஆளும் வர்க்கம் அவ் இயக்கங்களை தனது நம்பிக்கைக்கு உரியனவாகப் போசித்தும் வந்தது.

அதேவேளை தமிழீழ விடுதலைப் புலிகள் இயக்கம் தனது ராணுவ வலிமையாலும் போராட்ட நிலைப்பாட்டாலும் முன்செல்வதாகத் தன்னை தகவமைத்து அமெரிக்க, மேற்குலகத்தின் மறைமுக ஆதரவுடன் முன்சென்றது. மக்கள் நம்பவைக்கப்பட்டதுடன் தாம் நிலை கொண்ட பகுதிகளில் மக்கள் மீதான பல்வகை ஆதிக்கத்தை ஆயுத முனையில் கொண்டிருக்கவும் செய்தது. நிர்ப்பந்தங்களாலும், தவிர்க்க முடியாத சூழலாலும், பேரினவாத ராணுவ ஒடுக்குமுறைக்கு முகங்கொடுக்க வேண்டியதாலும் வடக்கு கிழக்குத் தமிழ் மக்களில் கணிசமானோர் புலிகள் இயக்கத்திற்கு ஆதரவாக இருந்தனர். இவ் ஆதரவை அரசியல் மயப்படுத்தப்பட்ட உறுதிமிக்க வெகுஜன ஆதரவாகவும் மக்கள் அணிதிரண்டு பங்கேற்கும் போராட்ட மார்க்கமாகவும்

முன்னெடுக்க அவ்வியக்கம் முன்வரவில்லை. ஆயுதங்கள் மீதான அதீத நம்பிக்கை, ராணுவக் கட்டுப்பாடு, தகவல் பரிமாற்ற வலையமைப்பு, உளவுத் தகவல் வலையமைப்பு, தனியொரு தலைவர் மீதான எல்லையற்ற விசுவாசம் நம்பிக்கை போன்றனவே அவர்களது பிரதான போக்குகளாக விளங்கின. அதே வேளை புதிய உலகக் கண்ணோட்டத்தையும் அதன் அடிப்படையிலான கொள்கையினைக் கொண்டிராமை, அறிவியல் பூர்வமாக யதார்த்தத்தைப் புரிந்து கொள்ளாமை, தூரநோக்கின்மை, பழைமை மீதான உள்ளார்ந்த பிடிப்பு, வெறும் வீரதீரத்தால் மக்களை நம்ப வைத்து பிரமைகளை ஏற்படுத்தியிருந்தமை போன்றனவே தமிழீழத்தை வென்றெடுப்பதற்கு மேற்கொள்ளப்பட்ட நிலைப்பாடுகளாகும். இவற்றுடன் அமெரிக்கா, ஐரோப்பா ஆகிய ஏகாதிபத்திய வல்லரசுகளையும் இந்தியாவையும் தமிழீழக் கொள்கையை முன்வைத்த தொடக்க காலத்திலிருந்து இறுதி முள்ளிவாய்க்கால் அழிவு வரை முற்று முழுதாக நம்பியிருந்தமை முக்கிய விடயமாகும். அதுவரை மட்டுமன்றி இன்றும் கூட அதே சக்திகளிடம் தான் தமிழ்த் தேசியத்தை உயர்த்தி நிற்கும் உள்நாட்டு புலம்பெயர்ந்த நாடுகளின் தமிழ்த் தேசியவாத சக்திகளும் கட்சிகளும் நம்பிக்கை வைத்து தம்முள் அணி பிரிந்து நிற்கின்றனர்.

இவ்வாறு மேற்குறித்துக் காட்டப்பட்ட மூன்று காலகட்டங்களின் ஊடான தமிழர்களுடைய சுமார் ஒரு நூற்றாண்டுக் கால அரசியல் வரலாற்றுப் பயணத்தில் மட்டுமன்றிப் பொருளாதார சமூக கல்வி பண்பாட்டு வளர்ச்சிப் போக்கிலும் தமிழ்த் தேசியம் என்பது என்றும் முதன்மைக்குரியதாக இருந்து வந்திருக்கிறது. ஆனால் அதன் உயர் வர்க்க அடிப்படையானது எத்தகைய சூழலிலும் நிலை மாற்றம் பெறாது கெட்டியானதாகவே இருந்து வந்துள்ளது.

இன்றும் கூட வரலாறு காணாத பேரழிவுகள் பேரவலங்கள் துயரங்களுக்குப் பின்பும் எவ்வித சுயவிமர்சனத்துக்கோ மறுமதிப்பீட்டுக்கோ விவாதச் சூழலுக்கோ தயார் இல்லாத நிலையில் தமிழ்த் தேசியம் புனிதம் மிக்க மூடு மந்திரமாக மீண்டும் மீண்டும் உச்சரிக்கப்படுகிறது. அதனை கேள்விக்கு உட்படுத்தி அதன் சாராம்சத்தை வெளிக்கொணர வேண்டிய கல்வியாளர்கள், ஆய்வறிவாளர்கள் என்போர் வாய் திறக்காது இருந்து வருகின்றனர். தமிழ்த் தேசியத்துடன் இணங்கிப் போவோர் அதனைப் பாதுகாப்பதில் முன்நிற்கின்றனர். சில மாற்றுக் கருத்துடையோர் அதனை விமர்ச்சிக்கத் தயங்குகின்றனர். தத்தமது இருப்பிற்காக மௌனம் காக்கின்றனர். தமிழ்த் தேசியத்தின் பழைமை வாதத்தைக் கண்டும் காணாது போன்று இருப்பதானது அல்லது அதனுடன் இணங்கிப்போவதானது, சமூகத்திற்கு இழைக்கும் ஒருவகை அநீதியாகும்.

இச் சூழலிலே தமிழ்த் தேசிய ஊன்றி அவதானிக்க வேண்டியதாகும். அக் கருத்தியல் என்பது சுமார் இரண்டாயிரம் ஆண்டுக் கால நிலவுடைமைக் காலத்தின் கருத்தியலேயாகும். இது தனிச்சொத்துடைமை சார்ந்த உற்பத்தி முறைமையிலும் அது உருவாக்கிய உறவுகளின் அடிப்படையிலும் வேர் கொண்டிருந்தது. அதன் கூடவே மதம், பண்பாடு, சமூக வழக்காறு எவற்றின் கீழான நடைமுறைகள் பின்பற்றல்கள் ஊடே ஊட்டம் பெற்றன. தமிழர்களுடைய வரலாற்றில் பிராமணியக் கருத்தியல் தாக்கமும் செல்வாக்கும் செலுத்தியதுடன் அது தமிழர் நிலவுடைமைக்காலச் சமூக அமைப்புச் சூழலில் பூரணமாக உள்வாங்கப்பட்டது. அக்காலத்தில் எழுச்சி பெற்று உச்சம் பெற்ற உயர் வெள்ளாள ஆதிக்க சக்திகள் இப் பிராமணியக் கருத்தியலைத் தமதாக்கிக் கொண்டனர். குறிப்பாகப், பிரா-மணியம் வகுத்த மனுதர்மத்தைக் கையேற்ற, சொத்து சுகம் கண்ட உயர் வேளாளர் என்போர், அதைத் தமது கருத்தியலாக உருமாற்றம் பெற வைத்து முன்னெடுத்தனர். இது தமிழகத்திலிருந்து இலங்கைக்கு அவ்வப்போது இடம்பெற்ற படையெடுப்புகள், குடிப்பெயர்வுகள், மதம், பண்பாட்டு வழிகளின் ஊடாக கொண்டு வரப்பட்டது. இலங்கைத் தமிழர்கள் மத்தியில் பிராமணர் சமூக சாதி ரீதியில் மிக எண்ணிக்கை குறைந்தவர்களாவர் என்பது நோக்குதற்குரியதாகும்.

> **“நிலவுடைமை வழிவந்த பழைமை தொன்மை, இன, மொழி மேன்மை, மன்னர் ஆட்சிக்காலப் பெருமை, கோவில்கள், இந்து (சைவ) சமய முதன்மை, நீண்ட இலக்கியச் செழுமை, சடங்குகள் கிரிகைகள், சாதியப் படிநிலையின் வழியான உயர்வு தாழ்வு, சாதியத் தீண்டாமை-புனிதம், துடக்கு, மூடநம்பிக்கைகள், ஆணாதிக்கம்-பெண்ணடிமை-சீதனம், சுயநலம், சொத்துச் சேகரிப்பு, நிலவுடைமை மதிப்பீட்டினைக் கொண்ட கௌரவம்-அந்தஸ்து, உழைக்கும் வர்க்க சக்திகளை கீழானவர்களாகக் கொள்ளல், பிற இன-மொழி-மத மக்களை இழிவாக நோக்குதல் போன்ற யாவும் தமிழ்த் தேசியத்தில் இறுகி நிற்கும் கூறுகளாகும்.”**

இனத்தின் வரலாற்று வளர்ச்சியின் மையப் பகுதியாக இருந்து வந்த தமிழ்த் தேசியத்தின் அடிப்படையையும் உள்ளடக்கத்தையும் உடைத்துப் பார்க்க வேண்டிய வரலாற்றுத் தேவை உருவாகி உள்ளது. இதற்குத்தேவையான அறிவாயுதம் சமூக விஞ்ஞானப் பார்வையாகும் அது நிச்சயமாக மாக்சிச உலகக் கண்ணோட்டமாகவும் வர்க்கப் போராட்ட அணுகு முறையாகவுமே இருக்க முடியும்.

தமிழ்த் தேசியம் என்பதாக் கூறி முன்னெடுக்கப்பட்டு வந்துள்ள இவ் விடயமானது திட்டவட்டமான ஒரு கருத்தியலுக்கு உட்பட்டதாகவும் இறுக்க முடையதாகவும் இருந்து வந்துள்ளமை

இலங்கைத் தமிழர் சமூகப் பரப்பில் இவ்வாறு உயர் வெள்ளாளக் கருத்தியல் நிலைபெற்று நீடிப்பதற்கு சாதிய ரீதியில் வெள்ளாளர் சாதியினர் (அவர்கள் வர்க்க நிலையில் வேறுபட்டவர்களாக இருந்த போதிலும்) எண்ணிக்கையில் சுமார் நாற்பது வீதத்தை கொண்டிருந்தமை விசேடமான-தாகும். அதுமட்டுமன்றி இவ் வெள்ளாளக் கருத்தியலின் செல்வாக்கிற்கு தமிழர் சமூகத்தின் இடைநிலைச் சாதியினரான முப்பது வீதமானோர் உட்பட்டிருந்தமை குறிப்பிடத்தக்கதாகும். மிகுதியான முப்பது வீதமான தாழ்த்தப்பட்ட மக்கள் மேற்படி கருத்தியலின் கீழ் சாதிய-தீண்டாமை அமைப்பின் ஊடாக அடக்கப்பட்டு அடிமை குடிமைகளாக நடாத்தப்பட்டனர்.

பெண்ணடிமை-சீதனம், சுயநலம், சொத்துச் சேகரிப்பு, நிலவுடைமை மதிப்பீட்டினைக் கொண்ட கௌரவம்-அந்தஸ்து, உழைக்கும் வர்க்க சக்திகளை கீழானவர்களாகக் கொள்ளல், பிற இன-மொழி-மத மக்களை இழி-வாக நோக்குதல் போன்ற யாவும் தமிழ்த் தேசியத்தில் இறுகி நிற்கும் கூறுகளாகும். இவற்றின் ஒட்டுமொத்தத் திரட்சியில் சாதியும் வர்க்கமும் அடிப்படையாக அமைந்து வந்துள்ளமை ஆழ்ந்து நோக்க வேண்டியதாகும்.

சாதி வர்க்க அடிப்படைகளைக் கொண்ட நிலவுடைமை வழிவந்த வெள்ளாளக் கருத்தியலின் மறு உருவமே தமிழ்த் லயும் அதன் உள்வாங்கி உயிர்ப்புடன் இறுதிவரை போராடி வந்த வெள்ளாளர் சமூகத்திலிருந்த வந்த பொதுவுடைமை-வாதிகள் நிறையவே தமிழர் மத்தியில் இருந்து வந்துள்ளனர். இன்றும் அதன் வழியில் செயலாற்றி வருகின்றனர்.

இக் கருத்தியலைத் தமதாக்கி முன்னெடுப்பதில் வெள்ளாளச் சமூகத்தைச் சாராதவர்கள் கூட தமிழ்த் தேசியத்தின் பெயரால் அதனை முன்னெடுத்தே வந்துள்ளார்கள். குறிப்பாகத் தமிழ் இளைஞர் இயக்கங்கள் தமது போராட்டப் பயணத்தில் இவ் வெள்ளாளக் கருத்தியலை தமிழ்த் தேசியத்தின் பெயரால் முன்னெடுத்தனர்.



> **“ பொன்னம்பலம் சகோதர தலைமைத்துவ காலம் முதல் பிரபாகரன் தலைமையிலான தமிழீழக் கோரிக்கை தோற்கடிக்கப்படும் வரையான காலகட்டம் முழுவதும் பழைமைவாத வெள்ளாள ஆதிக்க கருத்தியலே தலைமைத்துவ மைய நீரோட்டமாகவும் இறுக்கமுடையதாகவும் இருந்து வந்துள்ளது. இக் கருத்தியலில் எவ்வித உடைவும் ஏற்படாதவாறு இன்றுவரை பேணிப் பாதுகாப்பதில் கல்வியாளர்களும், நிறுவனங்களும் சமயவாதிகளும் அவர்களது சமய பீடங்களும் ஊடகங்களும் எழுத்தாளர்களும் கோவில்களும் ஆதீனங்களும் கலை இலக்கியங்களும் அமைப்புகளும் மிகுந்த அக்கறையுடன் செயற்பட்டு வருகின்றன. ”**

ஆனால் தாழ்த்தப்பட்ட மக்களில் ஒரு சிறு பிரிவினரது பொருளாதார கல்வி வளர்ச்சி காரணமாக மேன்நிலையாக்கம் அடைந்தவர்களால் மேற்படி கருத்தியல் நடைமுறைகள் மத பண்பாட்டு நிலைகளில் உள் வாங்கப்பட்டு வரும் போக்கு அண்மைக் காலங்களில் வளர்ச்சி பெற்று வருகின்றமை நோக்குதற்குரியது.

நிலவுடைமை வழிவந்த பழைமை தொன்மை, இன, மொழி மேன்மை, மன்னர் ஆட்சிக்காலப் பெருமை, கோவில்கள், இந்து (சைவ) சமய முதன்மை, நீண்ட இலக்கியச் செழுமை, சடங்குகள் கிரிகைகள், சாதியப் படி நிலையின் வழியான உயர்வு தாழ்வு, சாதியத் தீண்டாமை-புனிதம், துடக்கு, மூடநம்பிக்கைகள், ஆணாதிக்கம்-

தேசியமாகும். இங்கே வெள்ளாளக் கருத்தியல் என்பதனை அப் பெயரால் சுட்டப்படும் மக்களுக்குரியதாகக் கொள்ளப்படவோ அல்லது அவர்கள் அதற்காக நிந்திக்கப்படவோ கூடாது. அதன் நிலவுடைமைக் காலத்தின் ஆதிக்கக் கருத்தியலாகவே அதனைக் காணுதல் வேண்டும். பிரமாணியம் என்பது கருத்தியல் கண்ணோட்டத்தின் வழியாக எல்லாப் பிராமணர்களையும் சுட்டி நிற்காமை போன்றே வெள்ளாளக் கருத்தியலும் அந்தச் சாதியினருக்குரியதான ஒன்றாக் சுட்டி நிற்க முடியாது. தமிழர்கள் மத்தியில் இவ் வெள்ளாளக் கருத்தியலை மறுத்து அதன் ஆதிக்க அரசியலையும் சமூக நடைமுறைகளையும் நிராகரித்து மாக்சிச உலகக் கண்ணோட்டத்தையும் அரசியலை-

சோ'லிசம், புரட்சி என்று தொடங்கிய எந்தவொரு இயக்கமும் தமிழ்த் தேசியம் அடிப்படையாகக் கொண்டிருந்த வெள்ளாள ஆதிக்க கருத்தியலைக் கடந்து செல்லவோ அதன் ஆழப்பதிந்த வேர்களை அறுக்கவோ முனையவில்லை. இதில் வெள்ளாளத் தலைமையாக அமையாத புலிகள் இயக்கமும் பழைமைவாதம் நிறைந்த அப் பழைமை வாத ஆதிக்க கருத்தியலுக்கு அப்பால் செல்ல முடியவில்லை. சில வேளை-களில் சில முனைகளில் தோற்றம் காட்ட முடிந்ததே தவிர நடை முறையில் அங்கு அடிப்படை மீறலோ நிராகரிப்போ இடம்பெறவில்லை.

இவ்வாறு தமிழ்த் தேசியம் கொண்டிருந்த குறிப்பான பிற்போக்கு விடயங்களை

எதிர்த்தும் மீறியும் நிராகரித்தும் கடந்த நூற்றாண்டில் இரண்டு வரலாற்று நிகழ்வுகள் செயற்பாட்டு ரீதியில் இடம்பெற்றன. அவை இரண்டும் ஜனநாயகம், சமத்துவம், ஐக்கியம் என்பனவற்றின் அடிப்படையில் முற்போக்குத் தமிழ்த் தேசியத்திற்கு வலுச்சேர்க்கும் நிகழ்வுகளாகவே அவற்றை காண இயலும்

ஒன்று, கடந்த நூற்றாண்டின் இருபதுகளின் முற்கூற்றில் இருந்து சுமார் ஒரு தசாப்த காலமாக யாழ்ப்பாண இளைஞர் காங்கிரசினால் முன்னெடுக்கப்பட்ட முற்போக்கான தேசிய இயக்க நடவடிக்கைகளாகும். அவை பழைமைவாத தமிழ்த் தேசியத்தின் ஆதிக்க அரசியல் சமூகத் தளத்தில் பெரும் அதிர்வை ஏற்படுத்தியிருந்தன. கொலனித்துவ அரசியல் சீர்திருத்தங்களை நிராகரித்து முழுமையான சுதந்திரம் வேண்டி நின்றதுடன் கொலனித்துவ எதிர்ப்பையும் கொண்டிருந்தது. அத்துடன் சாதியத் தீண்டாமையை சமூக ரீதியில் நடைமுறை வழிகளில் எதிர்த்தது. தேசிய உற்பத்தி தேசிய பொருள்களின் நுர்வு, தேசிய கலாசார நடைமுறைகள், விதேசிய எதிர்ப்பு என்பனவற்றைக் காட்டியது. சுமார் ஒரு தசாப்த காலம் (1924-1934) நீடித்த யாழ்ப்பாண இளைஞர் காங்கிரஸின் செயற்பாடானது முற்போக்குத் தமிழ் தேசியத்தின் வளரும் கருவாகவே காணப்பட்டது. அதனை ஹன்டி பேரின்பநாயகம், ஒரேற்றர் சி. சுப்பிரமணியம் போன்ற பல இளம் கல்வியாளர்கள் துணிவுடன் முன்னெடுத்தனர். அத்தகைய துணிவு பிற்காலத்தில் தமிழ்த் தேசியத்தை முன்னெடுத்த எந்தத் தலைமையிடமும் காண முடியவில்லை என்பது நோக்குதற்குரியது. இருப்பினும் ஜீ.ஜீ. பொன்னம்பலம் தலைமையிலான பிற்போக்குத் தமிழ்த் தேசியம் அம் முற்போக்குத் தமிழ்த் தேசியத்தை தோற்கடித்து தனது ஆதிக்க அரசியலை நிலைநிறுத்திக் கொண்டமை நோக்குதற்குரியதாகும்.

இரண்டாவது, நாற்பதுகளுக்கு பின்பு உருவாகிய இடதுசாரி இயக்கம் முன்னெடுத்த தொழிலாளர்களின் உரிமைகளுக்கானதும் சாதிய தீண்டாமையை எதிர்த்த இயக்கங்களுமாகும். தமிழ்த் தொழிலாளர்களைம் அவர்களது உரிமைகளையும் தமிழ்த் தேசியம் ஒருபோதும் கணக்கில் கொண்டதில்லை. ஆனால் வடபுலத்து இடதுசாரி இயக்கமே தொழிற்சங்க செயற்பாடுகளையும் தொழிளார் போராட்டங்களின் ஊடான உரிமைகளையும் வென்றெடுத்து வந்தது. மேலும் சாதிய தீண்டாமைக்கு எதிராக ஜனநாயகம் சமத்துவம் கோரி 60 பதுகளின் நடுக் கூறில் வீறு பெற்றெழுந்த வெகுஜனப் போராட்டங்கள் மாக்சிச லெனினிசவாதிகளின் தலைமையில் புரட்சிகரமானவையாக அமைந்திருந்தன. சாதிய தீண்டாமைக்கு எதிரான அப் போராட்ட எழுச்சியின் முன்னால் தமிழ்த் தேசியம் எதிர் நிற்க முடியாத ஒன்றாகவே நின்றது. வெகுஜனப் போராட்டங்களும் தீண்டாமையை முறியடித்து வெற்றி கொண்ட வரலாற்று வெற்றியும் தமிழ்த் தேசியப் பிற்போக்குவாதிகளை அச்சமூட்டியது. இவ் அச்சத்தின் பிரதிபலிப்புகள் தனித் தமிழீழக் கோரிக்கை உருவாக்கத்திலும் உள்ளடங்கி இருந்தன என்பது மறுப்பிற்குரியதல்ல.

எனவே சுமார் ஒரு நூற்றாண்டு காலத் தமிழ்த்தேசிய அரசியல் பொருளா-தார சமூக பண்பாட்டுத் தளத்தில் மேற்குறித்த இரண்டு வரலாற்று நிகழ்வுகளுக்கு அப்பால் பழைமைவாத வெள்ளாள ஆதிக்க கருத்தியலே தமிழ்த் தேசியத்தின் அடிப்படையாக இருந்து வந்துள்ளது. அதனை பொன்னம்பலம் சகோதரர்களின் தலைமைத்துவ காலம் முதல் அண்மைக்கால வேலுப்பிள்ளை பிரபாகரன் தலைமையிலான தமிழீழக் கோரிக்கை தோற்கடிக்கப்படும் வரையான காலகட்டம் முழுவதும் பழைமைவாத வெள்ளாள ஆதிக்க கருத்தியலே தலைமைத்துவ மைய நீரோட்டமாகவும் இறுக்க முடையதாகவும் இருந்து வந்துள்ளது. இக் கருத்தியலில் எவ்வித உடைவும் ஏற்படாதவாறு இன்றுவரை பேணிப் பாதுகாப்பதில் கல்வியாளர்களும், நிறுவனங்களும் சமயவாதிகளும் அவர்களது சமய பீடங்களும் ஊடகங்களும் எழுத்தாளர்களும்

> **“ சுமார் ஒரு தசாப்த காலம் (1924-1934) நீடித்த யாழ்ப்பாண இளைஞர் காங்கிரஸின் செயற்பாடானது முற்போக்குத் தமிழ் தேசியத்தின் வளரும் கருவாகவே காணப்பட்டது. அதனை ஹன்டி பேரின்பநாயகம், ஒரேற்றர் சி. சுப்பிரமணியம் போன்ற பல இளம் கல்வியாளர்கள் துணிவுடன் முன்னெடுத்தனர். அத்தகைய துணிவு பிற்காலத்தில் தமிழ்த் தேசியத்தை முன்னெடுத்த எந்தத் தலைமையிடமும் காண முடியவில்லை ”**



கோவில்களும் ஆதீனங்களும் கலை இலக்கியங்களும் அமைப்புகளும் மிகுந்த அக்கறையுடன் செயற்பட்டு வருகின்றன. தமது தமிழ்த்தேசியப் பிற்போக்குத் தனங்களைப் பாதுகாக்க இந்திய மேலாதிக்கத்துடனும் அந்நிய ஏகாதிபத்திய சக்திகளுடனும் நவ கொலனிய நிறுவனங்களுடனும் பூகோளமயமாதல் நிகழ்ச்சி நிரலுடனும் தமிழ்த தேசியவாத உயர் வர்க்க மேட்டுக்குடியினர் மிகுந்த விசுவாசத்துடன் இணங்கி அரவணைப்புடன் இருந்து வருவது இன்றைய யதார்த்தமாக உள்ளது.

அவ்வாறே புலம்பெயர்ந்த நாடுகளிலான தமிழ்த்தேசியவாதிகள் என்போர் நவீன அடிமைத்தன வழிகளில் பழைமைவாத பிற்போக்குத் தமிழ்த் தேசியத்தை முன்னெடுப்பவர்களாகவே இருந்து வருகின்றனர். அங்கும் வெள்ளாள மேட்டுக்குடி ஆதிக்க கருத்தியலே முன்னிலை வகித்து வருகிறது. தமிழ்த் தேசியவாத அரசியல் வரலாற்றில் தலைவர்கள் இறந்து போகலாம். தலைமைகள் கைமாறலாம். புதியவர்கள் அவ் இடங்களை நிரப்பலாம். ஆனால் தமிழ்த் தேசியத்தின் அடிப்படையாக அமைந்து நீடித்துவரும் நிலவுடைமை வழிவந்த மேட்டுக்குடி உயர் வர்க்கப் பழைமைவாத வெள்ளாள ஆதிக்க கருத்தியல் என்பது தனது இருப்பை உறுதிப்படுத்தி நீடித்தவாறே இருந்து வருகின்றது. பாராளுமன்ற அரசியலிலும், ஆயுதப் போராட்ட அரசியலிலும் தன்முனைப்புடையதாகவும் தன்னை வெளிப்படுத்தி வந்துள்ளது. இன்றும் இந்நிலை தொடர்கிறது.

தமிழ்த்தேசியம் தமிழ் இனத்தின் மத்தியில் உள்ள தாழ்த்தப்பட்ட மக்களை 'அதுகள்' என்ற அஃறிணைச் சொல்லாலேயே சுட்டிவந்தது. அவ்வாறே முஸ்லீம் மக்களைச் "சோனயியள்" என்ற தாழ்வுச் சொல்லால் தரம் குறைத்து அழைத்து வந்தது. அவ்வாறே மலையக மக்களை இரண்டாம் தரமாகத் "தோட்டக்காட்டான்" என அழைத்துக் கொண்டது. சிங்கள மக்களை "மோட்டுச் சிங்களவன்" என எடுத்துரைத்தது. எதிலும் உயர்வு தாழ்வுகாணும் சாதியக் கண்ணோட்டத்துடன் சக மனிதர்களை நோக்கும் அணுகுமுறை இன்றும் தமிழர்கள் மத்தியில் பழைமைவாதச் சிந்தனை ஊடாக நடைமுறையில் இருந்து வருகிறது. மனித வாழ்வின் மனிதநேய உயர் லட்சியங்களுக்கு மாறான கூறுகளையே தமிழ்த் தேசியம் தன்னகத்தே கொண்டிருந்தமை அடையாளம் காணவேண்டியதாகும். இவ்வாறு தமிழ்த் தேசியத்தின் உள்ளடக்கமாகவும் அடிப்படையாகவும் இருந்துவரும் பிற்போக்கான வர்க்க சாதியக் கூறுகளையும் அவற்றின் சமூகத் தன்மையையும் மேலெழுந்தவாரியாகப் பார்ப்பது பயனற்ற ஒன்றாகும். எனவே தமிழ்த் தேசியம் உடைத்துப் பார்க்கப்பட வேண்டும். அதனிடத்தில் முற்போக்கான தமிழ்த் தேசியம் தோற்றுவிக்கப்பட வேண்டும். அதன் அரசியல் நிலைப்பாடு சமூக மாற்றத்திற்கான சோ'லிசத்தை நோக்கிய நீண்ட பயணத்தில் ஒரு ஜனநாயகப் பங்களிப்பை வழங்க முடியும்.

அவ்வாறான ஒரு அரசியல் திருப்புமுனையானது தமிழ்த் தேசியத்தின் இதுவரையான பிற்போக்கு பாதையில் இருந்து விலகி நான்காவது காலகட்டத்திற்குரிய வர்க்கப் போராட்ட அடிப்படையிலான தேசிய விடுதலைப் போராட்ட பயணத்தை முன்னெடுக்க வழி சமைக்கும். அதற்குரிய முன்தேவையாக தமிழ்த் தேசியத்தின் மீதான விமர்சனமும் சுயவிமர்சனமும் மறுமதிப்பீடும் இன்றைய தேவையும் அவசியமும் ஆகும். ●

## தேடல் - 4 ஆசிரியர் தலையங்கத்திலிருந்து....

### படைப்புகளும் மறுப்புகளும்

தாய் நாட்டின் சிலரது ஏகபோக சிந்தனைகளால் மனிதத்துவத்தின் அடிப்படைகள் மறுக்கப்பட்டு தாய் நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்ட மனிதர்கள் - எங்கு சென்றாலும் அவர்களின் உணர்பூர்வமான செயற்பாடுகள் தொடவே செய்யும் என்பதற்கு சான்றுபகர்வாக - மேற்குலகில் பல பாகங்களிலும் உருவாக்கப்பட்டடிருக்கும் கலை, இலக்கிய முயற்சிகள் இருக்கின்றன. எம் தாய் நாட்டில் எம்மவர்களினாலேயே மழுங்கடிக்கப்பட்ட சிந்தனையின் வெளிக்காட்டல் உத்வேகமே இவ்வரிய முயற்சிகள் ஆகும். இவ் முயற்சிகளும் இலகுவானதாக வெளிக்கொணரப்படவில்லை. பற்பல தடைகளின் மத்தியில்தான் வெளிக்கொணரப்படுகின்றன. தாய் நாட்டில் எவ்வாறு எழுத்து, கருத்து சுதந்திரங்கள் சிலரால் தடுக்கப்பட்டனவோ அதே பின்னணிகளில் உள்ள சிலர் வெளியுலகிலும் அவ்வாறான செயற்பாடுகளில் இறங்கியிருப்பது கண்டிக்கப்படவேண்டியது.

போராட்ட சீரழிவுகளினால் சிக்குண்டு தவிக்கும் கலை, இலக்கிய முயற்சிகள் மீண்டும் கட்டியெழுப்ப வேண்டிய கட்டாயத்தில் உள்ளது. அவ்வாறான முயற்சிகளில் ஈடுபட்டுவரும் கலை-இலக்கிய ஆவலர்கள் வரவேற்கப்படவேண்டியவர்கள். சமூகத்தின் ஐதார்த்தங்களுக்கூடாக கலை-இலக்கியங்களை இட்டுச்செல்வதென்பது மிகக் கடினமான உழைப்பேயாகும். இவ்வாறான கடின முயற்சிகளினால் பல ஈழநாட்டு எழுத்தாளர்கள், கலைஞர்கள் போராட்ட சூழ்நிலைகளிலும் மிகத்தரமான படைப்புகளை படைத்துள்ளார்கள். பல புதிய படைப்பாளிகள் உருவாக்கப்பட்டுள்ளார்கள். எம் போராட்ட வரலாற்றில் மிகப்பெரிய பலாபலன் இவ் கலை-இலக்கியப் படைப்புகள்தான்.

சுதந்திரம் என்பது மற்றவர்களின் சுதந்திரத்தை நேசிப்பதிலும் தங்கியிருக்கிறது. எனவே மனிதனை சுதந்திரமாக சிந்திக்க விடுங்கள். சுதந்திரம்பற்றி பேசிக்கொண்டே சுதந்திர மறுப்புகள் வேண்டாம். என்றும் எம் போராட்டம் அடக்குமுறைக்கெதிரானதே.

**" சுரங்கத்தில் தங்கம் இருக்கலாம். அதற்காக, கைகளில் விலங்குடன் செல்ல எமக்கு சம்மதமில்லை. "**

**- தேடல் 4, மாசி 1990 -**

# படநம் துயர நிழல்

நிலம் பறித்த துயரினால் எழும்
சனங்களின் குரல்
எனக்குக் கேட்கும்பொழுதுதான்
என் புகைப்படங்களை மிருகங்கள்
பறித்துக் கொண்டிருந்தன
மிருகங்களின் முகாங்களுக்கும்
அவர்களின் துப்பாக்கிகளுக்கும்
ஊடாகத்தான் அந்த ஆறு செல்கிறதாய்
சொல்லுகின்றன மிருகங்கள்.

தெருக்கரையில் குந்தியிருக்க
அனுமதிக்காய்
காத்திருக்கும் கணவனை இழந்த ஒரு
பெண்ணைத் தவிர
யாருடைய முகத்தையும்
பார்க்கமுடியவில்லை.
என்னை தடுத்து வைத்திருக்கும்பொழுது
அவள் வழியற்று வந்திருக்கிறாள்.
பிள்ளைகள் பாரமாகிவிட அதற்காக
மிருகங்களிடம் செல்கிறாள்

புகைப்படங்களில் உன் நிழலிருக்கிறது
உன் நிழலை
ஏன் படைமுகாங்களின்மீது விழுத்தினாய்
என்கின்றன மிருகங்கள்
நான் பார்க்க முடியாத துயர்பெருகிய
முகங்களை

இந்த கமரா பார்த்திருக்கிறது
இந்தக் கமராவின் முன்னால்
எனது நிழல் விழுந்து கொண்டிருக்கிறது.

இவர்கள் என் சனங்கள்
இது என் நகரம்
இது நான் நீந்திய ஆறு
இது எனது நிலம்
எதற்கும் சான்றுகள் மறுக்கப்பட
நாடற்றவனைப்போல கைதாகியிருந்தேன்.

அன்றைய நாள் இந்த நகரம்
எங்களிடமிருந்தது
எங்கள் சனங்கள் நகரத்தில்
மகிழ்ந்திருந்தனர்
எந்த முகாங்களும் மூடாது ஆறு பாய்ந்து
கொண்டிருந்தது.

நிலத்திற்காக சனங்கள்
அழுதுகொண்டேயிருந்தனர்
குழந்தைகளின் பாரம் அதிகரிக்க
அந்தப் பெண்ணிற்கு தெரு
மறுக்கப்பட்டதுபோல
எனக்கு ஆறு மறுக்கப்பட்டது.
மூன்று மணித்தியாலங்களின் பின்னர்
தீர்ப்பு அறிவித்தனர்

எல்லாப் புகைப்படங்களும் பறிக்கப்பட்டு
எல்லா அடையாளங்களும் பெறப்பட்டு
நான் வெளியில் அனுமதிக்கும் பொழுது
புகைப்படத்தில் உள்ள உன் நிழலையும்
தரமாட்டோம்
என்றன மிருகங்கள்.
என்னை நாடற்றவன் என்று மிருகங்கள்
தீர்ப்பளித்த பொழுது
ஏன் அந்த நிழல் வரைபடமெடுத்து
படர்ந்து கொண்டிருந்தது?

*தீபச்செல்வன்*
*ஜீலை 2010*

# தேசியம்பற்றிய மாக்சிய கோட்பாடு

- ஹெறொஸ் பி(B) டேவிஸ் -
**Horace B Davis**



*"தேசியம் பற்றிய பிரச்சனையில் ஐரோப்பிய மார்க்சியர்கள் காட்டிவரும் மௌனம், அனைத்து வரலாற்றுத் தவறுகளிலும் பெரியதாகவும் அழிவைக் கொண்டு வரக்கூடியதாகவும் பின்னாளில் பார்க்கப்படும். அத்தகைய மக்கள் வெற்றிடத்தில் பணியாற்றுகிறார்கள்"*

- ரெஜிஸ் டெப்ரேவின் கடிதம் (1969) -

தமிழில்: மு. வசந்தகுமார்

## அறிமுகம்

மார்க்சியர்கள் சர்வதேசியவாதிகளாகத் தங்களை அறிவித்துக் கொள்கிறார்கள், இருந்தும் மார்க்சியர்கள் தேசிய வாதிகளாகச் செயல்படுவதையே நாம் எங்கும் காணுகிறோம். இந்த நிலைப்பாடு சில சமயங்களில் சமூகப் புரட்சியின் நீண்டகால நலன்களுக்குச் சாதகமாக உள்ளது, சில சமயங்களில் அவ்வாறு இல்லை. இருந்தும், தேசியத்தை மார்க்சியக் கோட்பாட்டிற்குள் பொருந்த வைக்க இது வரை சில முயற்சிகளே செய்யப்பட்டுள்ளன, அவையும் திருப்திகரமானதாயில்லை. ரெஜிஸ் டெப்ரோ (Regis Debray) பின்வருமாறு கூறுகிறார்: 'தேசியம் பற்றிய பிரச்சனையில் ஐரோப்பிய மார்க்சியர்கள் காட்டிவரும் மௌனம், அனைத்து வரலாற்றுத் தவறுகளிலும் பெரியதாகவும் அழிவைக் கொண்டு வரக்கூடியதாகவும் பின்னாளில் பார்க்கப்படும். அத்தகைய மக்கள் வெற்றிடத்தில் பணியாற்றுகிறார்கள்' - ரெஜிஸ் டெப்ரேவின் கடிதம் (1969).

வர்க்க நலன்களே மேலாதிக்கம் செலுத்துகிறது என்றும் பொருளாதார அமைப்பு வடிவம் (உற்பத்தி உறவுகள்) நிகழ்வுகளின் மீது தீர்மானகரமான செல்வாக்கைச் செலுத்துகின்றது என்றும் மார்க்கியச் கோட்பாட்டில் வழக்கமாகக் கருதப்படுகிறது. இதன் காரணமாகவே, அடிப்படையில் அரசியலாகவும், பண்பாடாகவும் உள்ள ஒரு இயக்கத்தின் மீது கூடக் குறைவான கவனமே செலுத்தப்படுகிறது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஐரோப்பியச் சூழலில் இருந்து வேறுபட்ட ஒரு சூழலில், சமூக வர்க்கங்களைப் புதிய முறையில் ஆய்வு செய்ய வேண்டியது அவசியம். இருபதாம் நூற்றாண்டின் சமூக எழுச்சிகளில் தேசிய நோக்கங்கள் ஆற்றிய பங்கு பற்றியும், பிற இயக்கங்களோடு அதற்குள்ள உறவு பற்றியும் கவனம் செலுத்தப்பட வேண்டும். இன்றைய மூன்று பெரும் இயக்கங்களில் (ஜனநாயகம் மற்றும் சோசலிசத்துடன்) தேசியமும் ஒன்று என்ற சன்யாட் - சென்னின் வார்த்தைகளை நாம் என்றும் மறக்க முடியாது.

இந்த இயலில் பிரச்சனையையும் நமது வரையறைகளையும் நிறுவுகிறோம். அதைத் தொடர்ந்து தேசியம் பற்றிய நெறிமுறையின் அனைத்து முக்கியமான பிரச்சனையைப் பற்றிய விவாதம் வருகிறது. நாம் தேசிய பிரச்சனை பற்றிய லெனின் மற்றும் ஸ்டாலினின் கருத்துக்களை ஆய்வு செய்கிறோம்: புரட்சியின்போதும், அதனைத் தொடர்ந்தும் தேசியம் பற்றிய பிரச்சனையில் சோவியத்

ஒன்றியம் மேற்கொண்ட முயற்சிகளைக் காணுகிறோம். யூகோஸ்லேவியா மற்றும் சீனாவின் அனுபவங்களைப் பற்றிய ஒரு விவாதம் தொடர்கிறது. பிறகு, சில இலத்தீன் அமெரிக்க நாடுகளில் தேசியத்துக்கும் சமூகப் புரட்சிக்கும் இடையிலான உறவைக் காணுகிறோம்.: ஆபிரிக்கச் சூழல் தொடர்பாக ஃப்ரான்ஸ் ஃபனான் (Frants Fanon) மற்றும் அமில்கர் காப்ரல் (Amilcar Cabral) ஆகியோரின் கோட்பாட்டுப் பங்களிப்பைக் கொடுக்கிறோம். இதனூடே, பல்வேறு சமூக வர்க்கங்களுக்கும் புரட்சிகர சோசலிசம் மற்றும் தேசியத்துக்கும் இடையிலான உறவை நாம் ஆய்வு செய்கிறோம்.

### வார்த்தையைப் பற்றிய வரையறை

தேசியம் பற்றிய வரையறையும் அனுபவமும் காலத்துக்குக் காலம், இடத்துக்கு இடம் மாறுபடுகின்றன. தேசியம் பற்றிய அனைத்து அறிக்கைகளையும் ஒரு சேரக் கொண்டு வர முயற்சிப்பது சில நேரங்களில் இயலாத பணியாகத் தோன்றுகின்றது. ரோசா லக்சம் பர்க் கூறுவது போல " தேசிய அரசு" மற்றும் "தேசியம்" ஆகியவை வெறும் மேல் கூடுகள் தான், அதற்குள் அனைத்து வரலாற்றுச் சகாப்தங்களும், வர்க்க உறவு-களும் தமது சிறப்பான உள்ளீடுகளை நிரப்புகின்றன. (பார்க்க : லக்சம்பர்க், 1928: 294) ஆனால் தேசியம் ஒரு பொதுவான சாரத்தைக் கொண்டுள்ளது, அதனுடைய குறிப்பான இயல்பைக் கண்டறிய நாம் முயற்சி செய்ய வேண்டும்.

அந்நிய ஆதிக்கத்திற்கு எதிரான எதிர்ப்புகள் அனைத்தையும் நாம் தேசியத்திற்குள் உள்ளடக்குவோமானால், தேசியம் எப்பொழுதும் நம்மிடம் இருந்து வந்துள்ளது என முடிவு செய்ய வேண்டும். ஏனெனில் அத்தகைய எதிர்ப்புகள் எழுதப்பட்ட வரலாறு தோன்றுவதற்கு முன்பிருந்தே இருந்து வருகின்றன. அந்நிய ஆதிக்கத்திற்கு எதிரான வெற்றிகரமான போராட்டங்கள் நவீன காலத்தின் துவக்கத்தில் ஐரோப்பாவில் சில அரசுகளை உருவாக்கின, உடனடியாக ஒருவருக்கு டச்சு, ஆங்கில அரசுகள் நினைவுக்கு வரலாம். ஆனால் அவை தேசங்களா?தேசம் என்பது ஆட்சியாளர்களைக் குறிப்பது அல்ல, அது தேசிய ஒற்றுமை மற்றும் தேசியக் கண்ணோட்டம் கொண்ட மக்களை உள்ளடக்கியது என நாம் கருதினால் அவை தேசங்களல்ல. இந்தப் பொருளில், தேசியம் என்பது பதினெட்டாம் நூற்றாண்டிற்கு முன்பு இல்லை.

நான்கு வேறுபட்ட, முதன்மை வடிவங்களைக் கொண்டதாக தேசியத்தை வகைப்படுத்துகிறது ஒரு முயற்சி, ஒவ்வொன்றும் உலகின் ஏதாவது ஒரு பகுதியின் சிறப்புப் பண்பைக் கொண்டுள்ளது. அவை ஏறக்குறைய ஒன்றன்பின் ஒன்றாக வரலாற்றில் தோன்றியவை. அவை:

1) அரசு அதிகாரம் மற்றும் தேசிய உணர்வுநிலை ஆகியவற்றின் தொடர்ந்த வளர்ச்சியின் நீண்ட அனுபவத்துடன் கூடிய மக்களின் தேசியத்துடன் தேசியத்தை நிர்ணயிக்கும் குடியுரிமை (மேற்கு ஐரோப்பா)

2) நீண்ட கால அரசியல் அனுபவம் இல்லாத நாடுகளில் தேசியம், ஆனால் ஒரு பொது மொழி-யையும், ஒரு பொது சுய-அடையாளத்தையும் கொண்டது. (இத்தாலி, ஜெர்மனி)

3) தென்கிழக்கு ஐரோப்பாவைச் சார்ந்த நாடுகளின் தேசியம் போன்றது, நீண்டகாலப் பொதுவான அரசியல் அனுபவம் கிடையாது, இனக்குழு அடிப்படையிலான தொடர்ச்சியான நிலப்பரப்பும் கிடையாது, இங்கு வரலாற்று ரீதியான மத இணைப்புதான் தேசிய உணர்வுநிலையை நிர்ணயிக்கும் முக்கிய காரணியாக உள்ளது.

4) காலனிய எதிர்ப்பு மற்றும் "நவீனத்துவத்துக்"கான இயக்கத்தின் தேசியம், பொதுவாக மூன்றாம் உலகோடு இணைந்தது, தென்கிழக்கு ஐரோப்பாவிலும் வெளிப்படுகிறது (ஸ்டாயினோவிச், 1974:450)

விரிவான பொருளில் இந்த வகைப்பாடு பயனுள்ளதாயிருக்காலம். ஆனால் முழுமையானதல்ல, ஒரு வகை இன்னொரு வயிலிருந்து தெளிவாகப் பிரிக்கப்படவில்லை. அதை நாம் பிரயோகிக்கும் பொழுது உடனடியாகத் தெளிவாகிறது: காலனிய எதிர்ப்பு நவீனத்துக்கான முயற்சியுடன் இணைந்தே தீர வேண்டிய அவசியம் உள்ளதா? இந்தியா - பாகிஸ்தான் மூன்றாவது வகையைச் சார்ந்ததா அல்லது நான்காவது வகையையா? கனடாவை எதில் பொருத்துவது? வகை ஒன்றிலும் நான்கிலும் அரசு-தான் முதன்மையாகத் தேசத்தைக் கட்டமைக்கிறது. ஆனால் இரண்டிலும், மூன்றிலும் மாறிய வகையில் உள்ளது: ஆனால் பொருள் பொதிந்த பரிசீலனை எதுவும் அரசும், தேசமும் ஒன்றையொன்று கட்டமைக்கிறது எனக் கூறுகிறது.

சமூக தகவல் தொடர்புகள் பற்றி (கார்ல் டெட்ஸ் முதலானோர்) தேசியத்தை சமூகத் தகவல் தொடர்புகள் அடிப்படையில், முதன்மையாக மக்கள் ஊடக அடிப்படையில் வரையறுக்கிறது. இந்த வரையறைப்படி ஊடகங்கள் இல்லாவிட்டால் தேசியத்திற்கான முன் நிபந்தனை நிறைவடைவது இல்லை. இந்த அணுகுமுறை ஆய்வுப் பணியை எளிதான கட்டுப்பாட்டுக்குள் சுருக்கிவிடுகிறது. இங்கு உள்ள ஒரே கேள்வி இது, மிக அதிகமாக சுருக்கப்பட்டுவிட்டதா என்பதுதான். கல்வி அறிவு இல்லாத அனைத்து சமூகங்களையும் நாம் ஒதுக்கிவிட வேண்டுமா? டிட்டோவின் யூகோஸ்லேவியாவிலும் மாவோ வின் சீனாவிலும் கப்ரலின் கினியிலும் மக்கள் தேசியம் இருக்கவில்லையா?

இந்தப் பொருள் பற்றி இன்னொரு வகையான தன்னிச்சையான எல்லை சில மார்க்கியர்களிடமும் லெனின் காலத்தில் இருந்தே இருந்து வருகிறது: அதாவது முதலாளிகளின் (பூர்ஷ்வாக்களின்) செயலின் விளைவாக இருந்தால்தான் அதை தேசியம் எனக் கருதப்படவேண்டும். லெனின் இந்த வகையில்தான் தனது வரையறையை வைத்தார். அவருடைய வார்த்தைகளை நாம் எடுத்துக்கொண்டால் போலந்தும் அயர்லாந்தும் நவீன தேசியத்திற்கான எடுத்துக்காட்டுகளாக இருக்க முடியாது (இருந்தும் மார்க்ஸ் அவற்றை அவ்வாறு கருதினார்): முதலாளிகளிடமிருந்து தோன்றிய வகைதான் தேசியம் என நாம் விவாதித்தால் மூன்றாவது உலகத்தின் பெரும்பகுதிகளில் தேசியம் பற்றிய பிரச்சனையை நம்மால் எளிதில் கையாள முடியாது.

சில எழுத்தாளர்கள் அவர்கள் குறிப்பிடும் பகுதியைப் பொருத்து தேசியம் பற்றிய கருத்தாக்கத்தை வெவ்வேறு வழிகளில் பயன்படுத்துகிறார்கள். கார்ல் காவுட்ஸ்கி ஒரு முறை பின்வருமாறு விளக்கியது போல: மேற்கு ஐரோப்பாவில்.... ஒரு அரசைச் சார்ந்த மக்கள் தொகை தேசியம் என குறிப்பிடப்படுகிறது. இந்தப் பொருளில், எடுத்துக்காட்டிற்கு, (பெல்ஜியம் இரு மொழிகள் கொண்ட நாடாக இருந்தபோதும்) பெல்ஜிய தேசியத்தைக் கூறலாம். ஐரோப்பாவில் நாம் இன்னும் கிழக்கு நோக்கிச் சென்றால் ஒரு அரசுக்குள்ளேயே அதனுடன் சேர விரும்பாமல் மக்கள் தொகையில் பல பகுதிகள் இருக்கின்றனர். அதற்குள்ளேயே அவற்றிற்குரிய தேசிய சமூகங்களைக் கொண்டுள்ளன. அவைகளும் “தேசங்கள்” அல்லது “தேசிய இனங்கள்” என அழைக்க ப்படுகின்றன. தேசிய இனங்கள் என்ற ஐரோப்பாவில் உள்ள தேசிய இனங்கள் தொடர்ந்து வாழ முடியாத சமூகக் குழுக்கள் என்றும் அவை ஈர்க்கப்பட்டு மறைந்து விடும் என்றும் எங்கல்ஸ் கருதினார். இந்தக் கருத்தாக்கம் அந்த நூற்றாண்டோடு மறக்கப்பட்டுவிட்டது.

கிழக்கு ஐரோப்பாவிலும்கூட பல மொழிகள் கொண்ட அரசில் அனைத்து மொழிக் குழுக்களும் தேசிய இனங்கள் என்ற தகுதியைப் பெறவில்லை. சில மிகச் சிறியவை. சிலவற்றைச் சார்ந்த மக்கள் தங்களை தனி ஒரு தேசிய இனமாகக் கருதிக் கொள்ள விரும்பவில்லை. இவை இல்லாத நிலையில் அவை இனக்குழுக்களாகவே கருதப்பட்டன.

ஆனால் ஒரு மக்கள் குழு தம்மை ஒரு தேசமாகக் கருத வேண்டும் என விரும்பினால் அவர்கள் ஒரு தேசமாகி விடுவார்களா?ஒரு தேசத்திற்கான குறிப்பிடப்பட்டிருந்தாலும் இவை இரண்டும் உண்மையில் முழுவதும் வேறுபட்டவை, ஒரு இனக் குழுவின் உறுப்பினர்கள் இரத்த உறவுகளால் பிணைக்கப்பட்டுள்ளனர். ஒரு தேசம் ஒரு இருப்பிடத்தைக் கொண்டிருக்க வேண்டும். ஜார் ரஷ்யாவிலிலிருந்த யூதர்கள் தம்மை ஒரு தேசமாக கருத வேண்டும் எனப் பெருமுயற்சி செய்தார்கள். ஆனால் அவர்கள் இஸ்ரேலில் தம்மை நிலைநிறுத்திக் கொள்ளும் வரை அந்த அடையாளம் அவர்களுக்கு வழங்கப்படவில்லை. நாடோடிகள் ஐக்கிய நாடுகளின் சபைக்கு தம்மை ஒரு தேசமாக அங்கீகரிக்கக் கோரி விண்ணப்பிக்கலாம். ஆனால் அவர்கள் தனது இடம் விட்டு இடம் பெயர்ந்து செல்லும் பழக்கத்தை நிறுத்தும் வரை அவர்களால் வெற்றி பெற முடியாது. (அவ்வாறு இடம் விட்டு இடம் பெயர்ந்து செல்லும் பழக்கத்தை நிறுத்த



***“ஒரு பகுதியில் உள்ள மக்கள் கூறுகள் தம்மை ஒரு தேசம் என நம்பும் பொழுது அங்கு தேசம் நிலவுகிறது” என்று கூறப்பட்டது. ஆரம்ப காலத்தில் பிரான்சு நாட்டின் சிறந்த அறிஞர் எர்னஸ்ட் ரெனான் தேசத்தை “கூட்டு ஆன்மா” எனக் குறிப்பிட்டார்.***

வார்த்தையை, பயன்படுத்துவது ஏற்றதாக இருக்கும். (காவுட்ஸ்கி, 1929, 11:441)

காவுட்ஸ்கியின் ஆலோசனையை நீண்ட காலத்திற்கு முன்பே ஏற்றுக்கொண்டு இருந்தால் தேசியம் பற்றிய விவாதங்கள் ஐயமின்றி மேலும் தெளிவடைந்திருக்கும். ஆனால் அவ்வாறு செய்யப்படவில்லை. இவ்விதமாக, ஸ்டாலின், “மார்க்சியமும் தேசிய பிரச்சனையும்” என்ற தனது 1913ம் ஆண்டு கட்டுரையிலும், லெனின் தன்னுடைய பெரும்பாலான எழுத்துக்களிலும் தேசிய இனத்தையும் வேறுபடுத்தவில்லை. எங்கல்ஸ் இத்தகைய வேறுபாட்டைக் குறிப்பிட்டார். ஆனால் அது எந்த தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை, தென்கிழக்கு ஒரே முன்தேவை இதுதான் எனச் சிலர் கருதலாம். முதல் உலக யுத்தத்தின்போது “ஒரு பகுதியில் உள்ள மக்கள் கூறுகள் தம்மை ஒரு தேசம் என நம்பும் பொழுது அங்கு தேசம் நிலவுகிறது” என்று கூறப்பட்டது. ஆரம்ப காலத்தில் பிரான்சு நாட்டின் சிறந்த அறிஞர் எர்னஸ்ட் ரெனான் தேசத்தை “கூட்டு ஆன்மா” எனக் குறிப்பிட்டார்.

ஒரு கண நேரச் சிந்தனையே இந்த அணுகுமுறையின் போதாமையைக் காட்டிவிடும். எடுத்துக்காட்டிற்கு, தேசத்தை இனக்குழுவிலிருந்து பிரித்துக்காட்ட எந்த வழியையும் இது கூறவில்லை. ஒரு காலத்தில் இந்திய இனக் குழுக்கள் “தேசங்கள்” எனக் ஹங்கேரி நடவடிக்கை எடுத்துள்ளது. 1926லிருந்து சோவியத் யூனியனும் நடவடிக்கை எடுத்து வருகிறது).

ஒரு தேசம் ஒரு குறிப்பிடத்தக்க குறைந்தபட்ச பரப்பைக் கொண்டிருக்க வேண்டும். ஜமாய்க்கா ஒரு தேசமா-கும். ஆனால் அங்குயில்லா ஒரு தேசமல்ல. இறுதியாக ஒரு தேசம் ஒரு குறிப்பிடத்தக்க ஒருங்கிணைப்பை அல்லது ஒருவருக்கொருவர் இடையிலான சார்பைக் கொண்டிருக்க வேண்டும். நிலப்பிரபுத்துவ சமூகம் தேசக்கட்டுமானத்திற்கு ஏற்றதல்ல. ஏனெனில் அது போதுமான அளவு மையப்படுத்தலின்றி இருக்கும்.

ஒரு தேசம் நிலவுவதற்கு முன்நிபந்தனைகளாக கூறப்படுகின்றன. ஆனால் அவற்றைப் பரிசீலிக்கும்போது அவை பொருத்தமற்றவையாகவோ அல்லது தவறானவையாகவோ இருக்கின்றன. ஒரு தேசத்தின் மக்கள் ஒன்றாக வாழ்ந்தால் அவர்கள் ஒரு பொதுவான பொருளாதார வாழ்க்கையைக் கொண்டுள்ளார்கள் எனக் குறிப்பிடுவது தேவையற்றதாகத் தோன்றலாம். ஒரு பொதுவான வரலாற்றையும் "தேசப் பண்பையும்" அவர்கள் கொண்டிருக்கலாம். ஆனால் அவை இல்லாமலும் இருக்கலாம். பாகிஸ்தான் வரலாற்று ரீதியாகத் தனியே நிலவி வந்த ஒரு நாடல்ல. சமீபத்தில் தோன்றிய ஆப்ரிக்க தேசங்கள் ஐரோப்பிய வல்லரசுகளால் வகுக்கப்பட்ட எல்லைகளைக் கொண்டுள்ளன. அந்த எல்லைகள் மொழி அடிப்படையிலும் வரலாற்று ரீதியாகவும் இல்லாமல் அமைந்துள்ளன. ஒரு தனியான அரசியல் அரசாக ஒழுங்கமைக்கப்படாத வரை அந்த மக்கள் ஒரு தேசமாக மாட்டார்கள் என வியாட்டர் கூறுகிறார் (வியாட்டர், 1969). போலந்து நாட்டைச் சேர்ந்த ஒருவரிடமிருந்து வரும் அதிசயமான கருத்தாகும் இது. போலந்து அரசு இல்லாத நீண்ட கால கட்டத்தில் போலந்து மக்கள் ஒரு தேசிய இனமாக அமையவில்லையா?

பல முன்னால் காலனிய நாடுகள் விடுதலை பெற்றுத் தேசமாக உருக்கொண்டதற்குப் பொருத்தமாக, ஒரு தேசத்தின் உட் பொருளாகவும் அளவீடாகவும் அரசு இருக்க வேண்டும் என்ற கருத்திற்குப் புதிய அழுத்தம் ஏற்பட்டது. ஐக்கிய தேசங்களின் சபை அரசியல் அரசுகளின் சபையாகும். ஆனால் தேசம் என்பது இன்னும் அரசுடன் அடையாளப்படுத்த முடியாததாகவே உள்ளது. முன்பு போலவே இப்பொழுதும் நிலவுகின்ற அரசு அமைப்புகளுக்கு உள்ளேயோ அல்லது (அதற்கு எதிராக) வெளியேயோ தேசங்கள் கட்டப்படலாம். தேசத்தையும் அரசையும் வேறுபடுத்திப் பார்க்காமல் ஒன்றாகப் பார்ப்பது தவறு என்பதை பியாப்ரா (Biafra) மற்றும் வங்காள தேச தேசிய இயக்கங்கள் நமக்கு நினைவூட்டுகின்றன.

சில மார்க்சியர்கள், ஸ்டாலின் மற்றும் குறிப்பாக கார்ல் காவுட்ஸ்கி உள்ளிட்டோர், ஒரு பொது மொழியை ஒரு தேசத்தின் பண்பாகச் சேர்க்கிறார்கள். வழக்கமாக மொழி என்பது தேசிய இனத்துடன் தொடர்புடையது என்பது உண்மைதான். ஆனால் இது எல்லா இடத்திலும் பொருந்தாது. பெரும்பாலான பெரிய தேசங்களும், பல நடுத்தர மற்றும் சிறிய தேசங்களும் ஒன்றுக்கு மேற்பட்ட மொழிகளைக் கொண்டுள்ளன. சுவிட்சர்லாந்து ஐந்து மொழிகளைக் கொண்டுள்ளது. அவற்றில் மூன்று (ஜெர்மன், ஃபிரஞ்சு, இத்தாலியன்) அலுவலக மொழிகள் ஆகும். இரண்டு உலக யுத்தங்களின் போதும் அதனுடைய ஒற்றுமை பாதிப்புக்குள்ளான போதும் அது ஒரு தேசமாக உள்ளது. மேலும் ஒரே மொழி ஒன்றுக்கு மேற்பட்ட தேசங்களாலும் பேசப்படலாம்.

மக்கள் அதே மொழியைப் பேசும் பிற மக்களுடன் இணைந்து வலிமை வாய்ந்த சக்தியாக மாறுவதற்கு விரும்புவார்கள் என வழக்கமாக கருதப்பட்டு வருகிறது. ஆனால் முதலாம் உலக யுத்தத்திற்குப் பின் நடத்தப்பட்ட வாக்கெடுப்புகளில் சில, வேறு மொழி பேசும் தேசத்துடன் இணைவதற்கு மக்கள் வாக்களித்துள்ளார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டுகளாயுள்ளன. (கோப்பன், 1969: 69 70).

குறைந்த எண்ணிக்கையில் உள்ள மக்கள் தங்கள் மொழி காப்பாற்றப்பட வேண்டும் என்று எப்பொழுதும் விரும்புகிறார்கள் என்ற இன்னொரு கருத்தும் கேள்விக்குள்ளாக்கப்பட்டு வருகிறது. மார்க்சியக் கோட்பாட்டைப் பொருத்த வரையில் ஒரு மொழியைக் கைவிடுவது என்று முடிவு செய்தால், அந்த மொழியைப் பேசும் மக்கள்தான் அது பற்றி முடிவு செய்ய வேண்டும். அவர்களுக்கு வெளியில் இருந்து எந்த அதிகார அமைப்பும் அதைப் பற்றி முடிவெடுக்கக்கூடாது.

இவ்வாறாக ஒரு தேசம் எப்பொழுதும் (1) ஒரு ஆட்சிக்குட்பட்ட நிலப்பரப்பு, (2) குறிப்பிட்ட குறைந்தபட்ச நிலப்பரப்பு, (3) சில ஒருங்கிணைப்புகள் (மையப்படுத்துதல், பரஸ்பர சார்பு), (4) தான் ஒரு தேசம் என்ற உணர்வு நிலை ஆகியவற்றைக் கொண்டு இருக்க வேண்டும் என்பதைப் பார்க்கிறோம். இவற்றில் முதலாவது மற்றும் நான்காவது பண்புகளான ஆட்சிக்குட்பட்ட நிலப்பரப்பும் தேசம் என்ற உணர்வு நிலையும் முதன்மை ஆனது.

***குறைந்த எண்ணிக்கையில் உள்ள மக்கள் தங்கள் மொழி காப்பாற்றப்பட வேண்டும் என்று எப்பொழுதும் விரும்புகிறார்கள் என்ற இன்னொரு கருத்தும் கேள்விக்குள்ளாக்கப்பட்டு வருகிறது. மார்க்சியக் கோட்பாட்டைப் பொருத்த வரையில் ஒரு மொழியைக் கைவிடுவது என்று முடிவு செய்தால், அந்த மொழியைப் பேசும் மக்கள்தான் அது பற்றி முடிவு செய்ய வேண்டும். அவர்களுக்கு வெளியில் இருந்து எந்த அதிகார அமைப்பும் அதைப் பற்றி முடிவெடுக்கக்கூடாது.***

## தேசங்கள் எவ்வாறு உருவாக்கப்படுகின்றன?

தேசங்களின் உருவாக்கத்தில் பொருளாதாரம் அதிக அளவு தொடர்பு உள்ளதாக இருக்கும் அதே சமயத்தில் அத்தகைய உருவாக்கத்திற்கு முதன்மையான காரணங்களாக அமைவது அரசியல் காரணங்களே ஆகும். நவீன சூழலில் அரசியல் வாழ்க்கையை ஒழுங்கமைப்பதற்கும் ஆக்கிரமிப்பை எதிர்ப்பதற்கும், பல்வேறு வழிகளில் ஆட்சிக்குட்பட்ட நிலப்பரப்பில் வாழும் குழுவின் அதிகாரத்தை அதிகரிப்பதற்கும் தேசிய - அரசு என்பது ஏற்ற வடிவமாகும். பாரம்பரிய சுதந்திர வணிகப்

பார்வையிலிருந்து தேசிய - அரசு என்பது பெரும் தீமை விளைவிக்கக் கூடியது. ஆனால் இன்றைய மக்கள், மார்க்சியர்கள் உட்பட, தங்கள் மனதில் கொண்டுள்ள நோக்கங்களை நிறைவேற்ற தேசிய - அரசு தவிர்க்க முடியாதது - அது இல்லாமல் நாம் செயல்பட முடியாது.

முதன்மையாக மூன்று வழிகளில் தேசங்கள் உருவாக்கப்படுகின்றன.

முதலாவது, அரசுகளிலிருந்து அவை உருவாக்கப்படலாம். நவீன சகாப்தத்தின் ஆரம்பத்தில் நிலவிய ஃபிரஞ்சு, ஆங்கில, டச்சு, ஸ்பானிஷ் மற்றும் பிற ஐரோப்பிய அரசுகள் தேசங்களாக வளர்ச்சி அடைந்தன. முன் பின்னாக இது நிகழ்ந்தது. ஸ்பெயினிடமிருந்து டச்சு மக்கள் தங்களுடைய சுதந்திரத்தை வென்றெடுத்த போதோ அல்லது எலிசபெத் அரசியின் காலத்திய இங்கிலாந்தையோ தேசம் எனக் குறிப்பிடுவது தவறாகும். ஆனால் அங்கு தேசம் கருநிலையில் இருந்தது. நெப்போலியன் யுத்தங்களின் போதுதான் ஐரோப்பாவில் பெரும்பாலான நாடுகளில் தேசம் முழுமையான வடிவில் உருவாகியது.

இரண்டாவது, அந்நிய ஆக்கிரமிப்புக்கு எதிரான போராட்டத்திலிருந்து தேசங்கள் உருவாகின்றன. பல காலனிய நாடுகளில் முன்கூட்டியே தேசம் பற்றிய உணர்வு நிலை இல்லாத போதும், ஐரோப்பிய ஆதிக்கத்தை எதிர்த்துப் போராடிய போது பல தேசங்கள் உருவாகின. போலந்து மக்களின் விசயம் ஆர்வத்திற்குரிய ஒன்றாகும். ஏனென்றால் அவர்கள் ஒரு அரசைக் கொண்டு இருந்தார்கள். 1792இல் நடந்த மூன்றாவது பிரிவினையின் போது அவர்கள் ஒரு தேசமாக உருவாகும் நிகழ்ச்சிப் போக்கில் இருந்தார்கள். அதன்பிறகு பல்வேறு எழுச்சிகளுக்குப் பிறகு போராட்டத்தில் போலந்து தேசம் உருத்திரண்டது. இறுதியாக 1919இல் அங்கீகரிக்கப்பட்ட அரசாக அமைந்தது.

மூன்றாவது வழியில், முதலில் பண்பாட்டு ஒருமைப்பாட்டை அடைந்து அதன் பிறகு அந்த ஒருமைப்பாட்டின் அரசியல் வெளிப்பாடாக தேசங்கள் உருவாகின்றன. ஆஸ்த்திரியா மற்றும் ஹங்கேரி ஆகியவற்றிற்கு கீழ்ப்பட்டிருக்கும் நிலையில் ஆஸ்த்திரியா - ஹங்கேரிப் பேரரசில் அடுத்தடுத்து வந்த அரசுகள் தேசிய உணர்வு நிலைக்கு உயர்ந்தன. அரசியல் ஒருமைப்பாட்டிற்கு முன்பாக பண்பாட்டு ஒருமைப்பாடு உருவாகிய நாடுகளுக்கு செவ்வியல் எடுத்துக்காட்டுகளாக இத்தாலியும் ஜெர்மனியும் உள்ளன. தேசங்களின் தோற்றத்தை அரசுகளின் தோற்றத்தோடு சேர்த்து அடிக்கடி குழப்பிக் கொள்ளப்படுகிறது. தேசம் மற்றும் அரசு ஆகிய வார்த்தைகளை ஒன்றுக்கு மாற்றாக இன்னொன்றை பொதுவாக பயன்படுத்துவதால் இந்தக் குழப்பம் எழுகிறது. சில அறிஞர்கள் இந்த வேறுபாட்டை தெளிவாக குறிப்பிடுவது இல்லை.

தேசிய இயக்கங்கள் எழும் சூழல்கள் பல்வேறுபட்டவை. "சரேக்கத் இஸ்லாம்" அல்லது "இஸ்லாமிய ஒற்றுமை" என்ற பெயரில் மதச் சீர்த்திருத்தத்திற்காக உருவாகிய இயக்கத்தில் இருந்து தான் இந்தோனிசியாவில் முதல் மக்கள் திரள் தேசிய இயக்கம் தோன்றியது. 17ம் நூற்றாண்டில் தூய்மை வாதிகள் (Puritans) இங்கிலாந்து தேவாலயத்தைத் தூய்மைப்படுத்த விரும்பியதுபோல முதல் உலக யுத்தத்திற்கு முன்பு சஃபாரி தூய்மை இயக்கம் முஸ்லீம் மதத்தைத் "தூய்மைப்படுத்த" முயன்றது. இந்த இயக்கம் மக்கள் மத்தியில் ஆழமாக வேரூன்றியது. முதல் உலக யுத்தத்திற்கு பின்பு அது அரசியல் மற்றும் பொருளாதாரப் புரட்சிக்கான இயக்கமாக வளர்ச்சி அடைந்தது. அது கம்யூனிச அகிலத்தால் முன்மொழியப்பட்ட ஒரு பொருளாதாரத் திட்டத்தைப் பின்பற்றியது. அதன் பிறகு 1921இல் அது மத அடிப்படையில் ஒரு பிரிவாகவும் மார்க்சிய அடிப்படையில் ஒரு பிரிவாகவும் பிளவுபட்டது. மார்க்சியப் பிரிவு விரைவிலேயே இந்தோனிசிய கம்யூனிசக் கட்சியாக வளர்ச்சியுற்றது. சிறிது காலத்திற்குப் பின்பு இதே போன்ற நிகழ்வு மொராக்கோவிலும் நடைபெற்றது. அங்கு 1930 ல் குட்லத் அல் - அமல் அல்வதானி என்ற தேசிய நடவடிக்கைக் குழு, ஒரு மக்கள்திரள் தேசிய அமைப்பாக மதப் பிரிவிலிருந்து தோன்றியது. (கீர்ட்ஸ், 1968: 73, 84). அல்ஜீரியாவில் 1950களின் ஆரம்பத்தில் "பத்திசியா" என்ற மதச் சீர்திருத்த இயக்கத்தின் தலைவர்கள் நகரங்களில் இருந்தும் விவசாயிகளிடமிருந்தும் குறிப்பாக நடுத்தர விவசாயிகளிடமிருந்தும் ஆதரவு பெற்றார்கள். அல்ஜீரிய தேசியத்திற்கான இரண்டு முக்கியமான தோற்றுவாய்களில் இது ஒன்றாகும். (உல்ப். 1969: 228 - 230)

ஆரம்பகால வரலாற்றுச் சகாப்தங்களில் பண்பாடுகள் மெதுவாகவே மாற்றத்திற்கு உள்ளாகின. அப்பொழுது இன ரீதியாகவோ அல்லது பண்பாட்டு ரீதியாகவோ வேறுபட்ட மக்கள் கலப்புச் சமூகமாக அக்கம் பக்கமாக 500 அல்லது 1000 ஆண்டுகளுக்கு முழுமையாக ஒன்றிணையாமல், ஆனால் யுத்தத்தினால் ஒன்றை ஒன்று அழித்துக் கொள்ளாமல் வாழ்ந்திருக்கலாம். அவற்றில் இந்தியாவும் கௌதமாலாவும் சிறந்த எடுத்துக்காட்டுகள். ஆனால் நவீன காலத்தில் ஒற்றை அரசு இல்லாத இடங்களிலும் வேகமாக வளர்ந்து வரும் தகவல் தொடர்பும், பகுதிகளுக்கு இடையிலான வணிக வளர்ச்சியும் ஒரு ஒற்றை அரசு உருவாகுவதற்கு வலுவான

**மைய அரசாங்கம் ஆதிக்கம் செலுத்தும்போது அல்லது சுரண்டலில் ஈடுபடும்போது அல்லது குறிப்பான அப்பகுதியில் உள்ள மக்களின் உணர்வு பற்றிப் போதுமான அளவு அக்கறையில்லாதபோது அத்தகைய அழுத்தங்கள் எதிர்மறையாக அமையலாம். உள்ளூர் மக்களின் உணர்வில் அக்கறை செலுத்தினாலும் கூட அந்தப் பகுதியில் அரசியல் அல்லது பொருளாதார நெருக்கடி நிலவுமானால் பிரிவினை மனப்பான்மை எழுவதைத் தடுக்க முடியாமல் போகலாம்.**

அழுத்தங்களை ஏற்படுத்துகின்றன. இன்று சோவியத் யூனியனில் நடைபெறுவதுபோல மைய அரசாங்கம் அழுத்தத்தை அதிகரிக்கலாம்.

மைய அரசாங்கம் ஆதிக்கம் செலுத்தும்போது அல்லது சுரண்டலில் ஈடுபடும்போது அல்லது குறிப்பான அப்பகுதியில் உள்ள மக்களின் உணர்வு பற்றிப் போதுமான அளவு அக்கறையில்லாதபோது (மிக இயல்பானதே) அத்தகைய அழுத்தங்கள் எதிர்மறையாக அமையலாம். உள்ளூர் மக்களின் உணர்வில் அக்கறை செலுத்தினாலும் கூட அந்தப் பகுதியில் அரசியல் அல்லது பொருளாதார நெருக்கடி நிலவுமானால் பிரிவினை மனப்பான்மை எழுவதைத் தடுக்க முடியாமல் போகலாம். (யூகோஸ்லேவியாவைப் பற்றி விவாதிக்கும் போது அது பற்றி நாம் விரிவாக பார்ப்போம்).

ஒரு நெருக்கடி நிலையின் விளைவாகவோ அல்லது ஆதிக்கம் மற்றும் சுரண்டலின் விளைவாகவோதான் தேசியம் தோன்றும் என்பது அவசியமில்லை. ஸ்காட்ச் மற்றும் வேல்ஸ் தேசியவாதிகள் தாம் அரசியல் ரீதியாவோ அல்லது பொருளாதார ரீதியாகவோ ஆதிக்கம் செய்யப்படுவதாகக் கூறுகிறார்கள். ஆனால் இந்தக் கூற்றை அவ்வளவு எளிதாக ஏற்றுக்கொள்ள முடியாது. அவர்களுடைய தேசிய இயக்கங்கள் எளிய பண்பாட்டுத் தோற்றங்களாகவே ஆரம்பித்தன. இன்னும் அந்த இயக்கங்களுக்கு கணிசமான ஆதரவு கிடைக்கவில்லை. அது தேசத்தின் தேர்தல்களில் ஒரு காரணியாக அமைகிறது.

ஃபிரான்சில் கூட, பிரேட்டன் (கேலிக்) மொழிக்கு அதிக கவனம் கொடுக்கப்பட வேண்டும் என பிரிட்டானி விடுதலை முன்னணி போராடி வருகிறது. இந்தக் குழு 1974 இல் அவர்களுடைய கோரிக்கைகளின் மீது உலகத்தின் கவனத்தை ஈர்ப்பதற்காக 630 அடி உயரமுள்ள மின்கடத்தும் கோபுரத்தை வெடி வைத்து தகர்த்தது.

வழக்கமாக ஒன்று திரண்டு போராடும் மக்களின் பிரச்சனைகள் புறக்கணிக்கப்பட முடியாத அளவுக்குத் தெளிவாக இருக்கின்றன. சுரண்டலைப் பற்றிய விவாதத்தைத் தவிர்க்கும், நிறுவனத்தைச் சார்ந்த அறிஞர்கள் இந்தப் பிரச்சனையை எவ்வாறு கையாளுகிறார்கள் எனப் பார்ப்பது ஆர்வம் தரக்கூடிய ஒன்று. ஐரோப்பாவின் வரலாற்றுக் காலகட்டங்களில் மேல்தட்டில் இருந்த கற்றறிந்த குழுக்கள், அறிவு ஜீவிகள் ஒரே பண்பாட்டில் இருந்ததையும் அடித்தட்டில் இருந்த மக்கள் பல்வேறு பகுதிகளில் வேறுபட்ட பண்பாடுகளைக் கொண்டிருந்ததையும் காரல் டெச்சு குறிப்பிடுகிறார். அப்பொழுது நாகரீகம் அடுக்குகளைக் கொண்ட ரொட்டியைப் போன்றிருந்தது. மேற்பகுதியில் பெரும்பாலும் முழு இணைவையும் அடிப்பகுதியில் இணைவற்ற தன்மையையும் கொண்டுள்ள ஒரு உலகில் தேசியத்தின் தீவிரமும் ஈர்ப்பும் தேசங்களுக்கும் வர்க்கங்களுக்கும் இடையில் ஏற்படும் இடப் பெயர்ச்சி மீதான தடைகளுக்கு எதிர் விகிதத்திலும் பண்பாட்டு ஒன்றிணைவுக்கு எதிரான தடைகள் மற்றும் வர்க்கங்கள், பண்பாடுகள் மற்றும் பகுதிகளுக்கு இடையிலான பொருளாதாரம் மற்றும் சலுகைகளில் உள்ள வேறுபாடுகளின் அளவு ஆகியவற்றிற்கு நேர் விகிதத்திலும் இருக்கும். (அதே நூல்: 180)

இத்தகைய போராட்டத்தை எதிர் கொள்ளும் அதிகாரத்தில் உள்ள மேல் தட்டிற்கு டெச்சு என்ன தீர்வைக் கூறுகிறார்? ஒன்றிணைப்பு துரிதப்படுத்த வேண்டும். அதன்மூலம் அதிகாரத்தில் உள்ள மக்கள் தங்கள் அதிகாரத்தைத் தக்க வைத்துக் கொள்ளலாம்

**தன்னைத்தானே ஒரு தேசம் உருவாக்கிக் கொள்ளாது. அது கட்டப்பட வேண்டும். ஒரு தேசிய உணர்வை உருவாக்கத் தேவையான காலம் அவசரப்படும் அரசியல்வாதிகளாலும் இராணுவவாதிகளாலும் அடிக்கடி குறைத்து மதிப்பிடப்படுகிறது.**

கொண்டிருந்தது. (டெச்சு 1953: 170 -172) எவ்வாறாயினும் வரலாற்றின் குறிப்பிட்ட காலத்தில் அடித்தளத்தில் இருந்த மக்கள் அரசியல் அமைப்புக்காக ஒன்று திரட்டப்படுகின்றனர். சுரண்டலை எதிர்ப்பதற்காக இவ்வாறு ஒன்று திரட்டப்பட வேண்டும் என ஒரு மார்க்சியர் கூறலாம். தெளிவான தேசியப் பண்புகள் அப்பொழுது அரசியல் முக்கியத்துவம் பெறுகிறது. ஒன்றிணைவின் தோல்விதான் இதற்குக்காரணம் என டெச்சு கூறுகிறார். பாகுபாட்டிற்கும் சுரண்டலுக்கும் எதிரான போராட்டத்திலிருந்துதான் தேசியம் தோன்றுகிறது என்ற முக்கியமான கருத்தைத் தெளிவான நேரடியான வார்த்தைகளில் டெச்சு கூறுவதை இப்போது பார்ப்போம்: வருமானத்திலும் வாழ்க்கைத் தரத்திலும் கூர்மையான வேறுபாடுகளைக் என்று அவர் முன்மொழிகிறார்.

மிகப் பரந்த மற்றும் மிகுந்த அளவு மக்கள் முழுமையாகப் பங்கு கொள்ளும் அடிப்படையில் இறுக்கமான தகவல் தொடர்பு வலைப்பின்னல் மூலம் இணைந்து முழு நிறைவாக்கல் மூலம் மக்களை ஒன்றிணைக்க வேண்டும்.... பலமான அதிகார அரசியலாகும். (அதே நூல் 184)

இது அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட்டால், இதன் பொருள், இனம், நிறம், மத வேறுபாடன்றி அடித்தட்டிலுள்ள அனைத்து மக்களும் முன்னேறுவதற்காக முழு உரிமையும் வசதியும் வழங்கப்பட வேண்டும் என "அதிகாரத்தில் உள்ள மக்களுக்கு" அறிவுரை கூறப்படுகிறது. வேறு வார்த்தைகளில் கூறினால் அரசியல் ரீதியாக ஒன்று திரளும்

மக்களின் நலன்களின் மீது டெச்சு அனுதாபம் கொள்கிறார். எவ்வாறாயினும் மேலே உள்ள மக்கள் அவருடைய பரிந்துரைகளைப் பின்பற்றவில்லையானால் அடித்தட்டு மக்கள் என்ன செய்ய வேண்டும் என எந்த அறிவுரையையும் அவர் கூறவில்லை.

நவீனச் சூழலில், மக்களுக்கிடையில் பண்பாடு அல்லது இன வேறுபாடுகள் இருந்தாலே அது தேசியத்திற்கான அழைப்பைக் கொண்டுள்ளதாகக் கருதப்படுகிறது. சமீப காலம் வரை ஏன் ஸ்காட்ச் தேசியம் இல்லாமல் உள்ளது என ஸ்காட்ச் தேசியம் பற்றி டாம் நயர்ன் (1974) ஒரு விவாதத்தைத் தொடங்கினார். அந்த அளவிற்கு ஐரோப்பிய பண்பாட்டில் தேசம் ஒரு முக்கிய பங்கைக் கொண்டுள்ளது. ஐக்கிய அமெரிக்க நாட்டில் கருப்பு தேசியம் 19வது நூற்றாண்டின் ஆரம்ப காலத்தில் இருந்தே தொடர்ந்து இருந்து வருகிறது (ர்.டீ. டேவிஸ், கோஹென் 1974). 1919இல் ஆபிரிக்க தேசிய விருப்பங்கள் நிறைவேறுவதற்கு முன்பு ஃபிரான்சில் யுத்தத்தில் ஈடுபட்டு இருந்த அமெரிக்கக் கருப்பர் தன் நாட்டிற்கு திரும்பும் வழியில், அவருடன் நான் உரையாடியதை நினைவு கூறுகிறேன். அந்தப் படைவீரர் எகிப்திக்கு ஒரு முறை சென்று கடந்த காலத்தில் அந்த மக்கள் என்ன செய்துள்ளார்கள் என்பதைப் பார்க்க விரும்புவதாகக் கூறினார். அந்த மக்களை அவர் "என்னுடைய மக்கள்" என்று குறிப்பிட்டார். அந்தச் சமயத்தில் நான் அவர்கள் எகிப்திய முன்னோரிடமிருந்து வந்தவர் எனக் கருதினேன். ஆனால் சி-றிது யோசனைக்குப் பிறகு அவ்வாறு இருக்க வாய்ப்பில்லை எனப் புரிந்தது. அவருடைய முன்னோர்கள் பெரும்பாலும் கினி கடற்கரையைச் சார்ந்தவர்களாக இருக்கலாம். அவர் ஆப்பிரிக்காவைத் தனது தாயகமாகக் கருதினார். பழங்கால எகிப்தியர்களின் சாதனைகளும் அவருடையது எனக் கருதினார். பின்னோக்கிப் பார்க்கும் பொழுது இந்த உரையாடல் ஒரு ஆர்வத்திற்குரியதாகத் தோன்றுகிறது. ஏனெனில் ஐக்கிய அமெரிக்க நாடுகளில் அச்சமயத்தில் இன்னும் கார்வி இயக்கம் தொடங்கப்பட்டு இருக்கவில்லை. இவ்விதமாக, உறங்குநிலையில் உள்ள ஒரு உணர்வுக்கு செயல் ஊக்கம் கொடுப்பவர் ஒரு தேசிய இயக்க அமைப்பாளரெனக் கருதலாம். மார்க்கியூஸ் கார்வியின் "நோக்கம், ஏற்கனவே இருக்கும் ஒரு தேசியம் பற்றிய ஒரு உணர்வைக் கருப்பின மக்களுக்கு கொடுப்பதுதான்" என தியோடர் ஜி. வின்சென்ட் கூறுகிறார். (1971 : 22)

ஆனால் தன்னைத்தானே ஒரு தேசம் உருவாக்கிக் கொள்ளாது. அது கட்டப்பட வேண்டும். ஒரு தேசிய உணர்வை உருவாக்கத் தேவையான காலம் அவசரப்படும் அரசியல்வாதிகளாலும் இராணுவவாதிகளாலும் அடிக்கடி குறைத்து மதிப்பிடப்படுகிறது. வியட்நாம் விசயத்தை எடுத்துக்கொள்வோம். இரண்டாம் உலக யுத்தத்திற்குப் பின்பு பிரான்ஸ் தனது வாக்குறுதிகளை மீறி வியட்நாமின் வடக்குப் பகுதியில் மீண்டும் தனது கட்டுப்பாட்டைக் கொண்டு வந்தது. வியட்நாமியத் தலைவர்கள் கடுமையான அடக்குமுறைக்கு உள்ளாக்கப்பட்டார்கள். அவர்கள் ஒரு எதிர்ப்பு இயக்கத்தை உருவாக்கினார்கள். வோ குயன் ஜியாப்பின் கீழ் இருந்த இராணுவம் வடக்கு நோக்கிச் செல்லத் தயாராக இருந்தது. ஆனால் ஹோ சி மின்னின் அறிவுரையால் சில ஆண்டுகளுக்கு அது தள்ளிப்போடப்பட்டது. அக்காலகட்டத்தில் அடித்தள மக்கள் மத்தியில் கடுமையான பிரச்சாரம் மேற்கொள்ளப்பட்டது. தேசியத்தை மட்டும் இல்லாமல் சோசலிசத்தையும் விவசாயிகள் தம்முடைய கொள்கைகளாக ஏற்றுக் கொண்ட போது இராணுவ நடவடிக்கைகள் துவங்கப்பட்டன. அதனுடைய விளைகளை உலகம் அறியும்.

சிறிய இன குழுக்கள், பண்பாட்டு ரீதியான தன்னுணர்வைக் கொண்டிருந்த போதும் நீடித்து நிலைக்கக்கூடிய தேசிய உணர்வை உருவாக்க எல்லாச் சமயங்களிலும் அவற்றால் முடிவதில்லை. ஒரு பெரிய, ஆக்கிரமிப்பு மிக்க தேசத்துடன் தொடர்பு கொண்ட ஒரு சிறிய இனக்குழு எந்தவித அடையாளமும் இல்லாமல் படிப்படியாக உள்வாங்கிக் கொள்ளப்படலாம். உண்மையில் இதை வகை மாதிரியான அனுபவம் என நாம் கூறலாம்.

இது நடக்கும் பொழுது மனித இனம் இழப்புக்கு உள்ளாகிறதா? ஒரு இனக் குழுவின் மறைவு ஒரு குழுவின் உறுப்பினராக உள்ள தனி மனிதரின் மறைவு போன்றதல்ல. அவர்கள் தொடர்ந்து மறுஉற்பத்தி செய்து கொண்டும் மற்றவர்கள் வழங்கும் அளவுக்குத் தாங்களும், தம்மை உள்ஈர்த்துக் கொண்ட பெரிய குழுவிற்குப் பங்கு அளித்து வருகிறார்கள். ஆனால் நமக்கு ஆர்வமூட்டும் எடுத்துக் காட்டுகளில், சிறுபான்மை குழுவைச் சார்ந்த உறுப்பினர்கள் தம்முடைய தனிப் பண்பாட்டை இழப்பதற்கு முன்பும் பின்பும் ஆதிக்கத்திற்கும் சுரண்டலுக்கும் உட்படுத்தப்பட்டு வருகிறார்கள். இத்தகைய ஆதிக்கத்திற்கு முடிவு கட்டுவதே இன்றைய வகை மாதிரியான தேசிய இயக்கத்தின் நோக்கமாக உள்ளது. அப்பொழுது அது மார்க்சியர்களின் கவனத்தைப் பெறுகிறது.

சிறிய தேசிய இனங்கள் உலகப் பண்பாட்டிற்கு உண்மையில் பங்களிப்புச் செய்து உள்ளன அல்லது பங்களிப்புச் செய்யும் ஆற்றல் கொண்டுள்ளன என்பதை மார்க்சியர்கள் சில சமயம் வலியுறுத்தியுள்ளார்கள் என்பது

***சிறிய தேசிய இனங்கள் உலகப் பண்பாட்டிற்கு உண்மையில் பங்களிப்புச் செய்து உள்ளன அல்லது பங்களிப்புச் செய்யும் ஆற்றல் கொண்டுள்ளன என்பதை மார்க்சியர்கள் சில சமயம் வலியுறுத்தியுள்ளார்கள் என்பது உண்மை. அதனால் தான் அவர்கள் அத்தகைய தேசிய இனங்களின் உரிமைகளுக்காக நிற்கிறார்கள்.***

உண்மை. அதனால் தான் அவர்கள் அத்தகைய தேசிய இனங்களின் உரிமைகளுக்காக நிற்கிறார்கள். தம்மை ஒரு மார்க்சியராகக் கருதிக் கொள்ள இன்னும் சில குணாம்சங்கள் இருந்த காலகட்டத்தில் ஸ்டாலின் இதைச் செய்தார். (ஸ்டாலின், 1942). ஆனால் அது உண்மையான நோக்கம் அல்ல என நாம் திரும்பக் கூறுகிறோம். உலக அறிவியலுக்கும் அல்லது பொதுவாக உலக பண்பாட்டிற்கும் பரவலாகப் பயன்படுத்தப்பட்டு வரும் ஒரு மொழியில் பங்களிப்புச் செய்யும் பொழுது அதற்கு ஆரம்பத்தில் இருந்தே பெரும்பகுதி மக்களிடம் இருந்து வரவேற்பு இருக்கிறது. ஒரு மொழியில் உள்ள மதிப்பு மிக்க உயர்ந்த கருத்துக்கள் மற்ற மொழிகளில் கிடைக்கச் செய்ய முடியும். ஒரு பெரிய எழுத்தாளர் தனது சொந்த மக்கள் மரபு மொழியைப் பயன்படுத்த இயலாவிட்டால் அவர் வாசகரை இழந்துவிடுவார் எனக் கருதுவதற்கு எந்தக் காரணமும் இல்லை. அத்தகைய நேர்வுகளில் தேவையாயி ருப்பது என்னவென்றால் இது சாதாரண விஷயம் அல்ல - சிறிய இனக்குழுக்கள் தம்முடைய சொந்த மொழியில் மேம்பாடு அடையும் உரிமை காப்பாற்றப்பட வேண்டும். இதன் பொருள் அந்த மொழியில் அவர்களுக்கு கல்வி வழங்கப்பட வேண்டும். அவர்களுடைய மொழியில் உள்ள இலக்கியம் பற்றித் தெரிந்திருக்க வேண்டும். லெனினுடைய வார்த்தையில் கூறினால் அவர்களுடைய பண்பாடு "உறுதிப்படுத்தப்படும்".

சிறிய தேசிய இனங்களின் மொழி மற்றும் பண்பாட்டு உரிமைகளைப் பலமாக வலியுறுத்துவதற்காக ருசியர்களும் பிற மார்க்சியர்களும் சிலசமயம் விமர்சிக்கப்படுகிறார்கள். ஒன்று கலத்தல் என்ற இன்னொரு திசையில் சென்று புதைகுழியில் வீழ்வதைவிட இந்த வழியில் சென்று தவறு செய்தாலும் பரவாயில்லை. லெனினிய உணர்வில் இது ஏற்றுக் கொள்ளத்தக்கது. ஏனெனில் ஒன்று கலத்தல் என்பதற்கும் முழுமையான ஏகாதிபத்தியம் என்பதற்கும் ஓடிரதான் வேறுபாடு உள்ளது. இதற்குப் பொருள் இந்தியா போன்ற நாடுகளில் மொழி அடிப்படையிலான குழுக்களை தேசிய இனங்களாக கட்டமைக்க பொதுவுடைமையாளர்கள் தங்களுடைய நேரத்தைச் செலவிட வேண்டும் என்பதல்ல. அத்தகைய குழுக்களைப் பிற பண்பாட்டுக் குழுக்களின் சுரண்டலில் இருந்தும் ஆதிக்கத்தில் இருந்தும் விடுதலை செய்யும் என்ற நிலையில் மட்டும் தான் மார்க்சிய அடிப்படையில் இந்த நிகழ்வுப் போக்கு நியாயப்படுத்த முடியும்.

# நான் தண்டனை கோருகிறேன்

-பாப்லோ நெரூடா-

நான் அழுவதற்கு
வரவில்லை
அவர்கள் விழுந்த இடத்தில்
இன்னும் உயிரோடு
இருப்பவர்களே!
உங்களிடம் பேசத்தான்...
உங்களை நோக்கியும்
என்னை நோக்கியும்
நான் வேண்டுவது
இதுதான்...
இறந்து கிடக்கும்
நம்மவர்கள் பேராலே
கேட்கிறேன்...
தண்டனை அளியுங்கள்!

நமது தந்தையர் நாட்டு
மண்மீது
சிகப்பு இரத்தத்தை
சிதற வைத்தவர்களுக்கு
தண்டனை அளியுங்கள்!

இந்த சவங்களின்மீது
சிம்மாசனம் ஏறிய
அந்த துரோகிகளுக்கு
தண்டனை அளியுங்கள்!
மறப்பவர்களுக்கும்
இந்தக் கொடுமைகளை
மன்னிக்கச்
சொல்பவர்களுக்கும்
தண்டனை கொடுங்கள்!

நான் எல்லோருடனும்
கைகுலுக்க
விரும்பவில்லை
ரத்தக்கறை படிந்த
கரங்களைத்
தொடுவதற்கே
விரும்பவில்லை
நான் தண்டனை
கோருகிறேன்...!

தூர தேசங்களுக்கு
அவர்களை
தூதுவராய் அனுப்புவதை
அமைதி வரும்வரை
அவர்களை அறைகளில்
அடைப்பதை
நான் அடியோடு
விரும்பவில்லை.

இங்கேயே...
இப்பொழுதே...
திறந்த வெளியிலே
நீதி வழங்குங்கள்!
அவர்களுக்குரிய
தண்டனையை
என் கண் முன்னே
நிறைவேற்றுங்கள்...!



# இலங்கைச் சமூகத்தின் நெருக்கடிகள்

## - ஒரு இடதுசாரியின் பார்வை

**தோழர் சிவம் நினைவு தின உரை ஜூலை 04, 2009**

**செ. லோகநாதன்**

நண்பர்களே, தோழர்களே,

எமது அன்புக்கும் மதிப்புக்கும் பாத்திரமான தோழர் சிவம் அவர்கள் எம்மை விட்டுப் பிரிந்து சுமார் இரண்டரை மாத காலத்தின் பின்னர் நடைபெறும் இந் நினைவு கூரல் நிகழ்வில் பேசுவதற்கு சந்தர்ப்பம் அளித்த தமிழர் வளாகத்துறைவள நிலைய நண்பர்களுக்கு எனது நன்றிகள். தோழர் சிவம் அவர்கள் இடதுசாரி இயக்கத்தின் மேம்பாட்டுக்காகவே தன்னை அர்ப்பணித்தவர் என்ற காரணத்தினால் எனது பேச்சும் இடது சாரி இயக்கத்துடன் தொடர்பான சிறு குறிப்பாகவே அமையும்.

காலனித்துவமும், தங்கு முதலாளித் துவமும் உருவாக்கிய நெருக்கடிகளின் உடனடித் தாக்குல்களுக்குள்ளான இளைஞர்களது மூன்று ஆயுதம் தாங்கிய கிளர்ச்சிகளில், சுமார் இரண்டரை தசாப்தங்கள் அளவு நீண்டகாலம் இடம்பெற்று வந்த தமிழ் இளைஞர்களது ஆயுதக் கிளர்ச்சியின் மரபு ரீதியான யுத்த வடிவம் அடக்கப்பட்டு விட்டதாக அறிவிக்கப்பட்டுள்ளது.

உலகமூலதனம் பேராவல் காரணமாகவே தானேதோற்றுவித்த நெருக்கடிகளிலிருந்து மீளமுடியாமல் அதன் சுமையை உழைக்கும் வெகுஜனங்கள் மீதும் ஏனைய அடக்கப்பட்ட மக்கள் மீதும் சுமத்தியுள்ளது. உலக வங்கி சர்வதேச நிதியம் உட்பட உலக நிதிஸ்தாபனங்களின் அழுத்தங்கள் காரணமாக, தத்தமது பொருளாதார மூல உபாயங்களை உலக மூலதனத்திற்கு திறந்து விட்ட கோளத்தின் தென்பகுதி நாடுகள், தவிர்க்க முடியாதவாறு இந் நெருக்கடிகளின் தாக்குதல்களுக்கு முகம் கொடுக்கின்றன. இதன் சுமையை அந்தந்த நாட்டு ஆளும் முதலாளித்துவ வர்க்கம் தத்தமது நாடுகளின் உழைக்கும் மக்கள் மீது சுமத்தவே செய்வர். இதனை மறைப்பதற்காக சிறுபான்மை இனத்தவர் மீது யுத்தத்தை திணிப்பதும், பெரும்பான்மை இனமக்களை யுத்த வெறியர்களாக மாற்றி ஏனைய சிறுபான்மையினர் மீது ஏவி விடுவ தையும் காண முடிகிறது.

சர்வதேச மூலதனமும் அதன் பாதுகாவலனுமான அமெரிக்க ஏகாதிபத்தியம், தமது ஆதிக்கத்தை உலகம் பூராவும் நிலைநிறுத்த, ஆப்கானிஸ்தான்,

ஈராக் மக்கள் மீது திணித்த யுத்தம், ஏகாதிபத்தியத்திற்கு மெல்லவும் முடியாத விழுங்கவும் முடியாத நிலைமையை ஏற்படுத்தியுள்ளது.

பிராந்திய ஆதிக்கச் சக்திகளான சீனாவும் இந்தியாவும் அதிகரித்து வரும் தமது எரிபொருள் தேவைகளுக்காக, இந்து சமுத்திரத்தினை ஆதிக்கத்திற்கும் துறைமுகங்களுக்குமாக மக்களை பலவந்தமாக இடப்பெயர்வுகளுக்கு ள்ளாக்குகின்றனர் அல்லது பலவந்த இடப்பெயர்வுக்கு துணையாகவுள்ளனர். இத்தகைய நெருக்கடிகளின் கீழ், பாலஸ்தீன மக்களின் சுதந்திரத்திற்கும் சமத்துவத்திற்குமான வீரம் செறிந்த போராட்டம், இன்றைய காலகட்டத்தின் வியட்னாமாக மாறியுள்ளது. உலகம் தழுவிய காலனித்துவ விரோத - ஏகாதிபத்திய விரோத சக்திகளுக்கு ஒன்றுபடக்கூடிய ஒருமையாக பாலஸ்தீன மக்களின் போராட்டம் நம்பிக்கையை ஊட்டுகிறது. எமக்குத் தென்பகுதியின் லத்தீன் அமெரிக்க நாடுகளில் இடம்பெற்று வரும் அரசி யல் மாற்றங்களும் ஏகாதிபத்தியத்திற்கு நெருக்கடியையே ஏற்படுத்துகிறது.

இவ்வாறான சூழலில், ஒடுக்கப்பட்ட வர்க்கங்களின், அடக்கப்பட்ட இனங்களின், அடக்கப்பட்ட தேசங்களின் பக்கம் நின்ற, அவர்களது போராட்டங்களில் குறைபாடுகள் காணப்பட்ட போதிலும் அவற்றை விளங்கிக் கொண்டு, போராட்டங்களின் பக்கமே நின்ற ஓர் உண்மையான இடது சாரித் தோழர் சிவம் அவர்களை அவரது தீர்க்கமான பாத்திரத்தை நாம் இன்று நினைவு கூருகிறோம்.

இலங்கையின் பாராளுமன்ற இடது சாரிகள் வர்க்கப்போராட்டப் பாதையை கைவிட்டு ஆளும் முதலாளித்துவ வர்க்கத்துடன் சமரசம் செய்து கொண்டு தொழிலாளி வர்க்கத்தையும் அடக்கப்பட்ட இனங்களையும் காட்டிக் கொடுத்த போது அவ்வர்க்க சமரசப் பாதையை நாடாமல் புரட்சிகரப்பாதையை தேர்ந்ததெடுத்தவர்களில் நானும் ஒருவன் என்ற வகையில் அப்பாதையில் பின்னர் இணைந்து கொண்ட (என்னைவிட வயது குறைவு காரணமே) தோழர் சிவம் அவர்களை இலங்கையில் நான் வாழ்ந்த காலத்தில் காணச் சந்தர்ப்பம் கிடைக்காத போதிலும், இங்கு வந்த பின்னர் பல்வேறுபட்ட அரசியல் வேலைகளில், சமூக நீதிக்கும் சமத்துவத்திற்குமான போராட்டங்களில் கடந்த இருபது வருடகாலமாக இணைந்து செயல்படும் வாய்புக் கிடைத்தது. நான் தோழர் சிவத்துடன் பழகிய காலத்தில், நான் பழகிய பல மூத்த இடதுசாரிகளிடம் கண்டிராத சில அம்சங்கள் இவரிடம் இருப்பதை என்னால் அவதானிக்க முடிந்தது. அனேக இடது சாரிகள் தாம் தீவிரமாக ஈடுபட்ட காலத்தில் தம்மை இடதுசாரி இயக்கத்தை நோக்கித் தள்ளிய தேசிய சர்வதேசிய நிலைமைகளையும் தாம் எதிர் கொண்ட சமூக அரசியல் பொருளாதார பின்னணிகளை விளங்கிக் கொள்வதிலும் முடிவெடுப்பதிலும் செயல்படுவதிலும் தவறற்றவர்களாக காணப்பட்ட போதிலும் தமக்கு அடுத்த தலை முறையினர் எதிர்கொண்ட சமூக அரசியல் பொருளாதார பின்னணிகளை விளங்கிக் கொள்வதிலோ அல்லது இவ் இளம் தலைமுறையினர் தாம் எதிர்கொண்ட நிலைமைகளுக்கேற்ப - அவர்கள் தமிழ் இளைஞர்களாக இருக்கலாம் அல்லது சிங்கள இளைஞர்களாக இருக்கலாம் - அவர்கள் தமது அரசியல் பாதையைத் தேர்ந்தெடுத்த போது அதற்கான அகநிலைக் காரணிகளை விளங்கிக் கொள்ள மறுத்ததோடு அவ் இளம் தலைமுறையினரை எதிரிகளாகவே அடையாளம் கண்டனர். தோழர் சிவம், இவ்வாறான மரபுரீதியான இடதுசாரிகளைவிட வேறுபட்டவர் என்பதை அவரது நடவடிக்கைகளும் வளர்த்துக் கொண்ட உறவுகளும் எடுத்துக்காட்டின. நான் பழகிய பல இடதுசாரிகளிடம் காணப்பட்ட இன்னுமொரு குறைபாடு, தாம் ஏற்கனவே எடுத்துக் கொண்ட முடிவுகளை உறுதிப்படுத்துவதற்கு காரணங்களை தேடுவதையே பலர் வழக்கமாகக் கொண்டனர். காரணங்களை அல்லது விடயங்களை கிரகித்து அதற்கேற்ப முடிவுகளை எடுப்பதையோ அல்லது தாம் ஏற்கனவே கொண்ட முடிவுகளை மாற்றுவதோ பல இடதுசாரிகளிடம் நான் காணாத ஒன்றாகும். தோழர் சிவம் இதற்கு விதிவிலக்காக இருந்ததை என்னால் அவதானிக்க முடிந்தது.

நாம் இன்று இலங்கையில் மூன்று ஆயுதக் கிளர்ச்சிகளைத் தாண்டிப் பயணம் செய்துள்ளோம். 1971 தென்பகுதி வாலிபர்களது ஆயுதக்கிளர்ச்சி. சுமார் 8000க்கும் மேற்பட்ட தென்பகுதி இளைஞர்கள் படுகொலை செய்யப்பட்டதோடு சுமார் 20,000 இளைஞர்கள் சிறைப்பிடிக்கப்பட்டனர். மீண்டும் 1987 - 89இல், அதே தலைமையின் கீழ் இடம்பெற்ற ஆயுதக் கிளர்ச்சி. இது 1971 கிளர்ச்சியை விட வன்முறையில் பலமடங்கு அதிகரித்ததாகவும் முழுச் சமூகத்தையும் கோர நிலைமை நோக்கித் தள்ளியதாகவும் அமைந்தது. இக்கிளர்ச்சியின் விளைவாக எமது பெறுமதிமிக்க சுமார் 60,000 இளைஞர்களை இழந்தோம்.

மூன்றாவது 1980 ஆரம்ப பகுதியிலிருந்து கடந்த மே மாதம் வரை சுமார் மூன்று தசாப்த காலமாக நீடித்த தமிழ் வாலிபர் ஆயுதக் கிளர்ச்சி. ஆரம்பத்தில் இது கொரில்லா யுத்த சுபாபத்தை கொண்டிருந்த போதிலும் கடந்த இரு தசாப்தகாலமாக மரபு ரீதியான யுத்த வடிவத்தைக் கொண்டிருந்தது. ஆகக் குறைந்தது 1,25, 000 மக்கள் இக் கிளர்ச்சியின் போது தமது உயிரை விலையாக கொடுக்க நேரிட்டது.

முதல் இரு தென்பகுதி இளைஞர் கிளர்ச்சி தொடர்பாக மேலெழுந்த வாரியாக என்ன காரணம் கூறப்பட்ட போதிலும், நவகாலனித்துவம், கிராமியப் பொருளாதார நெருக்கடி, சர்வதேச நிதி நிறுவனங்களின் அழுத்தங்கள் காரணமாக இலங்கை முதலாளித்துவம் கடைப்படித்த பொரு ளாதாரக் கொள்கைகள் தோற்றுவித்த சமூக பொருளாதார நெருக்கடிகளின் தாக்குதல்களுக்குள்ளான இளைஞர்கள், அத்தாக்குதல்களிலிருந்து தம்மை மீட்பதற்கும் தமது விளக்கத்திற்கேற்ப சமுதாயத்தை மாற்றவும் எடுத்த முயற்சியே இவ் இரு இளைஞர் கிளர்ச்சியுமாகும்.

மூன்றாவதும் மிக நீண்காலமாக இடம்பெற்றதுமான தமிழ் வாலிபர்களின் ஆயுதக் கிளர்ச்சி, மேலெழுந்த வாரி யாக எதைக் கூறினாலும் தென்பகுதி வாலிபர்கள் எதிர்கொண்ட சமூக பொருளாதார அரசியல் நிலைமைகளுடன் கூடவே, இலங்கை முதலாளித்துவ ஆட்சியாளர் கடைப்பிடித்த இனப் பாரபட்ச கொள்கைகளும் இணைந்து தாக்கிய காரணத்தால் இதன் தாக்குதல்களுக்குள்ளான தமிழ்

இளைஞர்களின் கிளர்ச்சியேயாகும். மக்கள் விடுதலை முன்னணி, தமிழ் ஈழ விடுதலைப் புலிகள் ஆகிய இரு அமைப்புகளும் கடைப்பிடித்த அரசியல், மூல உபாயம் தொடர்பாக குறைபாடுகள் பல காணப்பட்ட போதிலும் இலங்கைச் சமூகத்தில் நிலவி வரும் அநீதி அடக்குமுறைகளின் தவிர்க்க முடியாத விளைவே இக்கிளர்ச்சிகளின் தோற்றம் என்பதையும் சமூகத்தில் நிலவிய அநீதிக்கும் அடக்கு முறைகளுக்கும் எதிராக தவறற்ற முற்பார்வையுடன் கூடிய

அரசியல் வேலைத் திட்டத்தையும், செயல்முறைகளையும், இயங்கி வந்த அரசியல் கட்சிகள் முன்வைக்காதது அல்லது முன்வைக்க முடியாதவாறு பிளவுபட்டு பெலவீனப்பட்டு இருந்ததும், இக்கட்சிகள் அமைப்புகள் தொடர்பாக உடடினத் தாக்கதல்களுக்குள்ளான இளைஞர்களுக்கு விரக்தியும் வெறுப்புமே காணப்பட்டது என்பதையும், இந்நிலைமையே இவ் இளைஞர்களை தமக்கே உரித்தான பாதையை நோக்கித் தள்ளிவிட்டது என்பதையும் இடதுசாரிகளாகிய நாம் விளங்கிக் கொள்ள வேண்டும்.

இலங்கைச் சமூகத்துக்கு இப்பாரிய அழிவுகளைத் தேடித்தந்த சமூக அநீதிகள் அரசியல் அடக்குமுறைகள் பொருளாதார நெருக்கடிகள் இன்னமும் அதிகரித்த வண்ணமே உள்ளன. இடது சாரிகளாகிய நாம் சமூக பொருளாதார அரசியல் நிலைமைகள் தொடர்பாக விளக்கம் அளிப்பதால் மட்டுமோ அல்லது சமூக அநீதி, அடக்கு முறைகள் காரணமாக வன்முறை அரசியலை நோக்கித் தள்ளப்பட்டுச் செல்லும் இவ் இளைஞர்களை விமர்சிப்பதாலோ மீண்டும் ஏற்படவிருக்கும் அழிவைத் தடுத்து நிறுத்த முடியாது. காலனித்துவம், நிலப்பிரபுத்துவம் முதலாளித்துவத்தினால் தோற்றுவிக்கப்பட்டுள்ள சமூக அநீதிக்கும் அரசியல் பொருளாதார இனத்துவ அடக்கு முறைகளுக்கும் எதிராக தாக்குதல்களுக்கு இலக்காகியுள்ள சமூக சக்திகளுடன் இணைந்து போராட்டத்தில் முன்னணியில் நின்று செயல்பட்டால் மட்டுமே மீண்டும் ஏற்படவிருக்கும் அழிவைத் தவிர்க்க முடியும் என உறுதியாக நம்புகிறேன். இறுதியாக Dubai பல்கலைக்கழகமொன்றில் பேராசிரியராயுள்ள எனது பாலஸ்தீன தோழரால் ஜூன் 02, 2009இல் அனுப்பட்ட நம்பிக்கையூட்டும் மின் அஞ்சலில் இருந்து ஒரு பகுதியை எடுத்துக் கூறி எனது பேச்சை நிறுத்துகிறேன்.

Hi Logan: I've been meaning to write for a while - but it's been hard to put the words on email given the horrible experience of the last period. I hope you are holding up well and know that you remain a strong and determined fighter for justice and socialism! One thing I would say though is that I feel that the current situation reminds me a lot of how I felt in 2002, when Israel invaded the West Bank. At that time, many people were saying that Israel has crushed the Palestinian people, it's all over and that we can't go on. But I felt that this was a turning point - Israel had revealed its true colours to the world and people would no longer buy the lie. It took a few years, but we can now truly say that we are winning the ideological battle for the first time ever. I feel the same thing has now happened in Sri Lanka. Even though the Tamil people have suffered a horrific loss, the true character of the Sri Lankan regime is revealed to the world. In the long run, this is a sure guarantee that their barbaric practices will be ended.

I remember you saying to me that you felt this would be a new period, and a chance to begin speaking of the importance of progressive Sinhalese and Tamil Unity. I think you are right.

எனக்கு இச் சந்தர்ப்பத்தை அளித்த அமைப்பாளர்களுக்கு நன்றி!
ஏகாதிபத்தியத்தின் தோல்வி மக்களின் வெற்றி!
முதலாளித்துவத்தின் தோல்வி சோஷலிசத்தின் வெற்றி!!

# தேடும் துளிர்ப்பு

எனக்கு தெரிந்த வரையில்
எல்லா தோல்விகளையும்
சந்தித்தாயிற்று.
முதுகெழும்பும் சிரசும்
இல்லாதவற்றின்
வழிகாட்டலினால்
வெட்கித்தே போனேன்.
நெஞ்சில் நிறைந்த
நரை மயிர்களை நீவி விட்டுக்
கண்களைக்
அகலத் திறந்த
அந்த மனிதர் எனது
முகத்தைப் பாராமலே
உறுதியாக
ஒன்று சொன்னார்
பாலைவனங்களில் எதை
விதைப்பாய்..?
மாரிவரை பொறு என்றார்
வெம்பு மணல்
வெறும் புழுதி
விதைத்த விதை
கோதுடைக் குருத்தாய்
எப்போது துளிர்க்கும்..?

- சாருமதி -
16.08.1987



# இலங்கையில் புறக்கணிக்கப்படும் மலையகத் தமிழர்கள்

- ACR ஜோன்

*" கடந்த காலங்களுடன் ஒப்பிடுகையில், மலையகத் தமிழர்கள் மத்தியில் கல்வி உட்படப் பல வாழ்வியல் அம்சங்களிற் சில முன்னேற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனாலும் ஒட்டுமொத்த இலங்கையிலும் பல்வேறு சமூக அபிவிருத்திக் குறிகாட்டிகளில் மலையகத் தமிழர்கள் — குறிப்பாகப் பெருந்தோட்டத் தொழிலாளர் சமூகம் — இன்றும் பின்னடைவாகவே இருப்பதனைக் காணக்கூடியதாக இருக்கின்றது. "*

இலங்கையில் பெருந்தோட்டத் தொழிற் துறையின் உழைப்புச் செயற்பாட்டுடன் பிரதானமாக தொடர்புபட்ட தமிழ் மக்களையே மலையகத் தமிழர்கள் என்று அழைக்கின்றோம். இவர்கள் 19ம் நூற்றாண்டின் ஆரம்ப காலம் தொட்டு 20ம் நூற்றாண்டின் ஆரம்ப காலம் வரையிலும் பிரித்தானியர்களின் கொலனி ஆட்சியின் போது தென்னிந்தியாவில் இருந்து — குறிப்பாகத் தமிழகத்தில் இருந்து — இலங்கைக்கு உழைப்பாளிகளாக அழைத்து வரப்பட்டனர். தமிழகத்தில் நிலவிய வறுமை, பஞ்சம், சாதிக் கொடுமைகள் ஆகிவற்றோடு நயவஞ்சகமாகப் பரப்பப்பட்ட பொய்ப் பிரசாரங்கள், போன்ற காரணிகளே அவர்கள் இலங்கைக்கு கூலிகளாய் வருவதற்குக் காரணமாக அமைந்தன. இலங்கைக்கு அந்நியச் செலாவணி வருமானத்தை பெற்றுத் தருவதில் முக்கிய பங்கு வகிக்கின்ற பெருந்தோட்டத் தொழிற் துறையிற் பெரும்பான்மையான தொழிலாளர்களாகப் பணிபுரிகின்ற இச் சமூகத்தினர், இந் நாட்டின் பொருளாதாரத்திற்கு முக்கிய சக்திகளாக இருக்கின்றனர். 1980கள் வரையிலும் இலங்கையினுடைய தேசிய ஏற்றுமதி வருமானத்தில் 60 சதவீதமான வருமானத்திற்கு மேல் தேயிலை, இறப்பர் போன்ற பெருந்தோட்டத் தொழிலில் இருந்தே கிடைத்து வந்தது. சமகாலத்தில் இலங்கையின் தேசிய வருமானத்தினைப் பெற்றுத் தருவதில் ஆடைத் தொழிற்சாலைகளும் வெளிநாட்டு வேலை வாய்ப்புக்களும் முன்னிலை வகிப்பதாக கூறப்பட்டாலும் இன்றும் ஏற்றுமதி வருமானத்தில் 13 சதவீதமான நிலையான பகுதி பெருந்தோட்டத் துறையில் இருந்து கிடைக்கின்றது என்பதனை மறுக்க முடியாது.

மலையகத் தமிழர்கள் மத்தியில் வளர்ந்து வந்த அரசியல், தொழிற்சங்க வளர்ச்சியையும் வர்க்க ரீதியான எழுச்சியையும் — குறிப்பாக வளர்ந்து




வந்த இடதுசாரி அரசியல் போன்றவற்றை — முடக்கும் நோக்குடனேயே 1948ம் ஆண்டு இலங்கையின் பேரின வாதிகளதும் முதலாளித்துவ ஆதிக்க சக்திகளதும் சதியின் காரணமாக மலையகத் தமிழர்களின் குடியு ரிமை பறிக்கப்பட்டு அவர்கள் அரசியல் அநாதைகளாக்கப்பட்டனர். இவ்வாறு இன்னும் பல்வேறு அடிப்படைகளில் ஒவ்வொரு வரலாற்றுக் காலகட்டத்திலும் மலையகத் தமிழர்களுக்கு எதிரான பல்வேறு அடக்குமுறைகள் நடந்திருக்கின்றன. மேலும் மலையகத் தமிழர்களின் சனத்தொகை விகிதாசாரத்தினைக் குறைப்பதிலும் பேரினவாதிகள் திட்டமிட்டு செயற்பட்டுவந்துள்ளதுடன் அதில் வெற்றியும் கண்டுள்ளனர். குறிப்பாக 1960கள் வரையிலும் 10 சதவீதத்திற்கு அதிகமாக இருந்த மலையகத் தமிழர்களின் சனத்தொகை விகிதம் இன்று (அரசாங்கப் புள்ளிவிபரப்படி) 5.6 சதவீதமாக குறைந்துள்ளது.

மலையகத் தமிழர்களின் இருப்பும் பொருளாதாரக் கட்டமைப்பும் வாழ்வியல் பண்பாட்டு அம்சங்களும் உட்பட்ட அனைத்தும் பெருந்தோட்டத் துறையுடனே-யே பின்னிப்பிணைந்து காணப்படுகின்றன. 90 சதவீதத்திற்கு அதிகமான தோட்டத் தொழிலாளர்கள் இந்தியாவிலிருந்து வஞ்சகமாக அழைத்துவரப்பட்ட மலையகத் தமிழர்களாகவே இருக்கின்றனர். உலகமயமாக்கலின் காரணமாக, உலகின் பல பாகங்களிலும் அரசுக்குச் சொந்தமான நிறுவனங்கள் தனியார்மயமாக்கப்படுகின்றன. அதே போன்று 1992ம் ஆண்டு அரசுக்கு சொந்தமாக இருந்த பெருந்தோட்டங்கள் 22 தனியார் கம்பனிகளுக்குக் குத்தகைக்கு வழங்கப்பட்டன. இதன் மூலம் பெருந்தோட்டங்களுடன் சேர்த்துத் தோட்டத் தொழிலாளர்களின் வாழ்வும் குத்தகையாகப்படடுள்ளது. இதன் மூலம் தோட்டத் தொழிலர்ளர்கள் தேசிய நீரோட்டத்தில் இருந்து புறக்கணிக்கப்படுகின்ற நிலை மேலும் அதிகரிக்கத் தொடங்கியது

கடந்த காலங்களுடன் ஒப்பிடுகையில், மலையகத் தமிழர்கள் மத்தியில் கல்வி உட்படப் பல வாழ்வியல் அம்சங்களிற் சில முன்னேற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனாலும் ஒட்டுமொத்த இலங்கையிலும் பல்வேறு சமூக அபிவிருத்திக் குறிகாட்டிகளில் மலையகத் தமிழர்கள் — குறிப்பாகப் பெருந்தோட்டத் தொழிலாளர் சமூகம் — இன்றும் பின்னடைவாகவே இருப்பதனைக் காணக்கூடியதாக இருக்கின்றது. இதனைப் பின்வரும் சில விவரங்கள் எமக்குத் தெளிவாக உணர்த்தும்.

## பொருளாதார நிலை

மலையகத் தமிழர்களிற் பெரும்பாலானவர்கள் பெருந்தோட்டத் தொழிலாளர்களாகவே இருக்கின்றனர். அவர்களுக்குக் கிடைக்கின்ற நாளாந்த வேதனத்தினைக் கொண்டுதான் வாழ்க்கையைக் கொண்டு நடத்த வேண்டியுள்ளது. ஒட்டு மொத்த இலங்கையிலும் பெருந்தோட்டப் பகுதிக-ளிலேயே வறுமைநிலை அதிகமாகக் காணப்படுவதாக அரசாங்கத்தின் புள்ளி விபரங்கள் கூறுகின்றன. 2006-2007ம் ஆண்டுக்கான இலங்கை குடிசனக் கணக்கீடு புள்ளிவிவரத் திணைக்கள (Department of Census and Statistics) அறிக்கையின் படி பெருந்தோட்டப் பகுதியில் 32 சதவீதமானவர்கள் வறுமைநிலையில் இருப்பதாக கூறுகின்றது. அதே நேரம் வறுமைநிலை நகரப்புறங்களில் 6.7 சதவீதமாகவும் கிராமங்களில் 15.7 சதவீதமாகவும் இருக்கின்றது. இதன் அடிப்படையில், நகரங்களை விடக் கிராமங்களில் வறுமைநிலை இரண்டு மடங்கு அதிகமாகவும் கிராமங்களை விடப் பெருந்தோட்டப் பகுதிகளில் வறுமைநிலை இரண்டு மடங்கு அதிகமாகவும் காணப்படுகின்றது. மேலும், ஒட்டுமொத்த இலங்கையிலும் 15.2 சதவீதமானவர்கள்

> ***"வறுமை ஒழிப்பிற்காக அரசாங்கத்தால் மேற்கொள்ளப்படுகின்ற செயற் திட்டங்கள் பெருந்தோட்டப் பகுதி மக்களைச் சென்றடையாத நிலையே தொடர்கின்றது. குறிப்பாக வறுமை ஒழிப்புச் செயற்திட்டமாகிய 'சமூர்தி' செயற் திட்டத்தில் இருந்து பெருந்தோட்டப் பகுதி முற்றாகவே புறக்கணிக்கப்படுகின்றது."***

வறுமைக்குட்பட்டவர்களாக இருக்கையில் பெருந்தோட்டப் பகுதியில் அதைப்போல இருமடங்கு வறுமைநிலை காணப்படுகின்றது. மந்தபோசனை, சிசு மரண விகிதம் போன்ற குறைபாடுகளும் பெருந்தோட்டப் பகுதியிலேயே அதிகமாக இருக்கின்றன.

ஆனால் வறுமை ஒழிப்பிற்காக அரசாங்கத்தால் மேற்கொள்ளப்படுகின்ற செயற் திட்டங்கள் பெருந்தோட்டப் பகுதி மக்களைச் சென்றடையாத நிலையே தொடர்கின்றது. குறிப்பாக வறுமை ஒழிப்புச் செயற்திட்டமாகிய 'சமூர்தி' செயற்திட்டத்தில் இருந்து பெருந்தோட்டப் பகுதி முற்றாகவே புறக்கணிக்கப்படுகின்றது. இதன் மூலம் கொடுக்கப்படுகின்ற உணவு மானியங்களையும் ஏனைய கொடுப்பனவுகளையும் பெருந்தோட்ட மக்கள் அனுபவிக்க முடியாத துர்ப்பர்க்கிய நிலை தொடர்கின்றது. ஆனாற் பெருந்தோட்டத் தொழிலாளர்கட்குப் போதியளவு வருமானம் கிடைப்பதாக நியாயப்படுத்தப்படுகின்றது. மேலும், பெருந்தோட்டத் தொழிலர்ளர்கட்கு, தேயிலை இறப்பர் தோட்டங்களில் இருந்து கிடைகின்ற ஊதியத்திற்கும் மேலதிகமான வருமானத்தைப்




தொழிலாகவே இருக்கிறது. இருந்தும், பொருளாதார இடர்ப்பாடுகளின் காரணமாக, இத் தொழில்களைச் செய்வதற்கு நிர்ப்பந்திக்கப் படுகின்றார்கள். மேலும் இலங்கையில் சிறுவர் தொழிலாளர்களும்

கொள்கின்றது. ஆனாற் பெருந்தோட்டத் தொழிலாளர்களாகிய மலையகத் தமிழர்கள் நாட்டின் ஏனைய குடிகள் அனுபவிக்கின்ற அரசு பொது சுகாதார வசதிகளை அனுபவிப்பதில் பல்வேறு தடைகள் காணப்படுகின்றன. உடனடி மருத்துவ சேவைகளை பெறுவதற்குத் தோட்ட நிர்வாகத்தையே நாடவேண்டியிருக்கின்றது. ஆனால் தோட்ட நிர்வாகம் முறையான மருத்துவ சேவைகளை வழங்குவதில்லை என்பது வெளிப்படையான உண்மை.

> **“ இரத்தச்சோகை, போசாக்கின்மை, வயிற்றோட்டம், மூளைக்காய்ச்சல் போன்ற நோய்கள் பெருந்தோட்டத் தொழிலாளர் சமூகத்தில் அதிகமாக இருப்பதுடன் கர்ப்பிணித் தாய்மார்களின் மரணமும் சிசு மரணமும் அதிகம் காணப்படுகின்றது. ”**

பொதுவாகப் பெருந்தோட்டப் பகுதி மக்கள் அரசாங்கத்தின் மருத்துவ வசதிகளைப் பெறுவதற்குப் பல கிலோமீட்டர்கள் பயணிக்க வேண்டியிருக்கின்றது. மேலும் தோட்டங்களில் காணப்படுகின்ற வைத்தியசாலைகள் முழுமையாகத் தேசியமயமாக்கப் படவில்லைசில மருத்துவமனைகள் அரசு பொறுப் பேற்றுள்ளபோதும், பல மருத்துவமனைகள் இன்னமும் தோட்ட நிர்வர்கத்தின் கண்காணிப்பிலேயே இருக்கின்றன. அத்துடன் பெருந்தோட்டப் பகுதிகளில் இருக்கின்ற மருத்துவ மனைகளில் முறையான வசதிகட்கும் தகுதிவாய்ந்த மருத்துவர்கட்கும் பற்றாக்குறை காணப்படுகின்றது. பெருந்தோட்டத் தொழிலாளர்கள் நோய்வாய்ப்படுகின்ற போது நோயாளிகளை வைத்தியசாலைக்கு கொண்டு

பெற்றுக்கொள்ள வாய்ப்புக்கள் இல்லை. குறிப்பாகத் தங்களுக்குத் தேவையான உணவை உற்பத்தி செய்வதற்குக் கூட நிலவுரிமை அற்றவர்களாகவே இருக்கின்றனர். இவ்வாறான பொருளாதாரப் பிரச்சினைகள் ஏனைய சமூக, பண்பாட்டு அம்சங்களின் வளர்ச்சியைத் தடுக்கிறது. இலங்கையின் நகரங்களில் வாழுகின்ற செல்வந்தர்களின் வீடுகளில் வீட்டுவேலை செய்பவர்களாக மலையகத் தமிழர்களே உள்ளனர். இத் துறை, தொழில் உரிமைகளோ சமூக அந்தஸ்தோ கௌரவமோ அற்ற

மலையகத் தமிழர்கள் மத்தியிலேய மிக அதிக எண்ணிக்கையில் இன்றும் இருந்து வருகின்றனர்.

## சுகாதார நிலை

இலங்கையைப் பொறுத்தவரை, அரச, மருத்துவ வசதிகளை ஓரளவேனும் பெற்றுக்கொள்ளும் வாய்ப்பு பொதுமக்களுக்கு உள்ளது. தெற்காசிய நாடுகளிலேயே சுகாதார வசதிகளில் இலங்கை சிறந்து விளங்குவதாக அரசாங்கம் பெருமைப்பட்டுக்




செல்வதற்கு அம்பியுலன்ஸ் வசதிகள் மிக அரிதாகவே காணப்படுகின்றன.

இவ்வாறன குறைபாடுகளின் காரணமாகப் பெருந்தோட்டப் மக்கள் பல்வேறு சிரமங்களை எதிர்நோக்குகின்றனர். இரத்தச்சோகை, போசாக்கின்மை, வயிற்றோட்டம், மூளைக்காய்ச்சல் போன்ற நோய்கள் பெருந்தோட்டத் தொழிலாளர் சமூகத்தில் அதிகமாக இருப்பதுடன் கர்ப்பிணித் தாய்மார்களின் மரணமும் சிசு மரணமும் அதிகம் காணப்படுகின்றது. கடந்த மாதம் கூட பிரசவத்திற்கான ஒரு கர்ப்பிணித் தாயினை மருத்துவமனைக்கு லொரியில் கொண்டு சென்ற வழியிலேயே பிரசவம் நிகழ்ந்து குழந்தை பிறந்த கணமே உயிரிழந்த சோகச் சம்பவம் கண்டிக்கு அண்மையில் உள்ள புசல்லாவ பகுதியில் நடந்தது.

## காணி நில உரிமையற்ற சமூகம்.

இலங்கையின் முக்கியமானதொரு இனமாகிய மலையகத் தமிழர்களை அடிப்படையாகக் கொண்ட தோட்டத் தொழிலாளர் சமூகத்தினர் நில உரிமை இல்லாதவர்களர்கவே இருக்கின்றனர். நாட்டின் பொருளாதாரத்தில் முக்கியப் பங்கு வகிக்கும் இவர்கள் நிலத்துக்கும் வீட்டுக்கும் உரிமையற்றவர்களாக இருப்பது மிகப் பெரிய மனித உரிமை மீறல் என்பதை இலங்கை அரசாங்கம் உணர்ந்துள்ளது. பிரித்தானியர் காலத்தில் தோட்டத் தொழிலாளர்களுக்கெனக் கட்டியமைக்கப்பட்ட லயன் அறைகளிலேயே கடந்த ஒன்றரை நூற்றாண்டுகளுக்குமேல் தொழிலாளர்கள் வசித்து வருகின்றனர். ஒரு வீட்டுக்குரிய அடிப்படை வசதிகள் இல்லாத 10' X 12' பரப்புடைய ஒரு அறையில்தான் அனைத்து வாழ்வியல் செயற்பாடுகளையும் செய்யவேண்டியுள்ளது. அதுவுங்கூடச் சட்டரீதியாகச் சொந்தமில்லாத நிலையே காணப்படுகின்றது. மேலும் அண்மைக் காலங்களில் தனி வீடுகள் கட்டிக்கொடுக்கப்பட வேண்டும் என்று அரசு கொள்கை ரீதியாக ஏற்றுக்கொண்டுள்ள போதும், அதை முழுமையாக அமுல்படுத்தவில்லை. சில இடங்களில் தனி வீடுகள் கட்டிக் கொடுக்கப்பட்டாலும் அவற்றுக்கும் காணி உறுதிபத்திரம் வழங்கப்படவில்லை.

ஒரு ஜனநாய நாட்டிலே உள்ளூராட்சி அமைப்புகளும் அதனுடன் தொடர்புடைய அரசு உறுப்புக்களுமே மக்களுடன் நேரடித் தொடர்புடையன. ஆனால் இந்த உள்ளூராட்சி அமைப்புகளின் சேவைகளைப் பெற முடியாத நிலையிலேயே தோட்டத் தொழிலர்ளர்கள் உள்ளனர். பெருந்தோட்டங்கள் அனைத்தும் கம்பனிகளின் கட்டுப்பட்டின் கீழ் இருப்பதனால் உள்ளூராட்சி அமைப்புகளின் சேவைகள் தோட்டத் தொழிலாளர்ளைச் சென்றடைவதில் சட்டரீதியான தடைகள் காணப்படுகின்றன. அண்மையில் தோட்டப் பகுதிகளில் சில அபிவிருத்தி திட்டங்களை முன்னெடுத்தன் காரணமாக 'உட பலாத்த' என்ற பிரதேச சபை கலைக்கப்பட்ட மோசமான சம்பவம் நடைபெற்றது.

## கல்வி

கல்வியைப் பொறுத்தவரை, கடந்த காலங்களுடன் ஒப்பிடுகையில் மலையகத் தமிழ்ச் சமூகத்தில் வளர்ச்சி ஏற்பட்டுள்ளது என்பதனை மறுப்பதற்கில்லை. இருந்த போதும் இலங்கையினுடைய ஏனைய இன மக்களுடன் ஒப்பிடுகையில் மலையகத் தமிழர்கள் இன்றும் பின்னடைந்தவர்களாகவே இருக்கின்றனர். இவ்வாறான பின்னடைவுக்கு வரலாற்று அடிப்படையிலான புறக்கணிப்பும் காரணமாக அமைகின்றது. 1944ம் ஆண்டு இலங்கையில் இலவசக் கல்வி அறிமுகப்படுத்தப்பட்ட போது, அத் திட்டத்தில் இருந்து தோட்டத் தொழிலாளர்களின் பிள்ளைகள்

> ***“ இன அடிப்படையிலும் வர்க்க அடிப்படையிலும் பல்வேறு ஒடுக்குமுறைகளுக்கு முகங்கொடுக்கின்ற மலையகத் தமிழர்களின் இருப்புக்கு உயிர்நாடியாக இருக்கக் கூடிய பெருந்தோட்டத் துறை இன்று புறக்கணிக்கப்படும் ஒன்றாகவே காணப்படுகின்றது. ”***

புறக்கணிக்கப்பட்டனர். 1970கள் வரையிலும் அவர்கள் கல்வி உரிமை மறுக்கப்பட்டவர்களாகவே இருந்தனர்.

மேலும், இன்று பாடசலைக் கட்டிடங்கள், சிரிபாத தேசிய கல்வியியற் கல்லூரி போன்ற கட்டமைப்பு வசதிகள் ஏற்படுவதற்கு சுவிடன் நாட்டின் சீடா, ஜெர்மன் நாட்டின் புவுணு போன்ற நிறுவனங்களின் நிதி பங்களிப்பு மிக முக்கியமானது. ஆசிரியர் தொழில் போன்ற அரசாங்க உத்தியோகங்களில் கணிசமானளவில் மலையகத் தமிழர்கள் சேவையாற்றுகிற போதும் அரசாங்கத் துறைத் தொழில் வாய்ப்புக்களும் ஏனைய இட ஒதுக்கீடுகளும் இன விகிதாசார அடிப்படையில் வழங்கப்படுவதில்லை.

இன அடிப்படையிலும் வர்க்க அடிப்படையிலும் பல்வேறு ஒடுக்குமுறைகளுக்கு முகங்கொடுக்கின்ற மலையகத் தமிழர்களின் இருப்புக்கு உயிர்நாடியாக இருக்கக் கூடிய பெருந்தோட்டத் துறை இன்று புறக்கணிக்கப்படும் ஒன்றாகவே காணப்படுகின்றது. பல தோட்டங்கள் மூடப்பட்டும் கைவிடப்பட்டும் இருப்பதன் காரணமாக அதனை நம்பிருந்த தொழிலாளர்களின் நிலை கேள்விக்குறியாகியுள்ளது தோட்டங்கள் முறையாக பராமரிக்கப்படாமையின் காரணமாக, உற்பத்தி பாதிக்கப் படுகின்றது. அதனால் தொழிலாளர்களே மிக மோசமாகப் பாதிக்கப்படுகின்றனர். அத்துடன் தொழிலாளர்கட்கான தொழிற் பாதுகாப்பும் தொழில் அந்தஸ்தும் அற்ற நிலையில் பழைய அடக்குமுறையே கையாளப் படுவதவதனால் இச் சமூகத்திற்கு வரலாற்று அடிப்படையில் காணப்படுகின்ற கௌரவமற்ற நிலை தொடர்ந்து கொண்டுதான் உள்ளது.

மாறிமாறி ஆட்சிக்கு வருகின்ற முதலாளித்துவபேரினவாத அரசாங்கங்கள் இச் சமூகத்தின் சமூக பொருளாதார அபிவிருத்தி குறித்துத் தொடர்ந்தும் அக்கறையற்றும் கண்டுகொள்ளாதும் உள்ள நிலையில் மலையத் தமிழர்களை பிரதிநிதித்துவப் படுத்துகின்ற அரசியல் பிரதிநிதிகள் போட்டி போட்டுக்கொண்டு அரசாங்கத்தை ஆதரிக்கின்றனர். உரிமைகளுக்காகக் குரல் கொடுப்பதற்கு மாறாக அமைச்சர் பதவிகளைப் பெற்றுத் தம்மையும் தாம்சார்ந்த குடும்பத்தையும், உறவுகளையும் வளர்த்துக்கொள்ளவே பார்க்கின்றனர். பல்வேறு உறுதி மொழிகளை முன்வைத்து வாக்குக் கேட்கின்றனர். வெற்றிபெற்ற பின் சுய நலன்களுக்காக அரசாங்கத்தினை ஆதரிக்கின்றனர்.

மக்கள் மத்தியில் அரசியல் விழிப்புணர்வு மிக மோசமாகக் குறைந்து வருவதை அவதானிக்க முடிகின்றது. உரிமைகளை வென்றெடுக்க வேண்டும் என்ற எதிர்பார்ப்புக்கு மாறாக அற்பச் சலுகைகளுக்காக வாக்களிக்கும் நிலை வளர்ந்து வருகின்றது. அத்துடன் தொழிலாளர்கள் மத்தியில் சலுகைகளை எதிர்பார்த்து வாழும் நிலை அதிகரித்து வருகின்றது. இம் மனநிலையை வளர்ப்பதில் அரசியல்வாதிகளும் என்.ஜீ. ஓக்களும் முக்கியப் பங்கு வகிக்கின்றனர். இந் நிலை வளர்வதற்கு இச் சமூகத்தில் இருந்து வளர்ந்து மேல் நிலைகண்ட சில கல்வியாளர்களும் முக்கிய காரணமாக இருக்கின்றனர். மேலும், கடந்த காலங்களில் இலங்கையில் உள்ள தொழிலாளர் வர்க்கத்திற்கே முன்னுதாரணமாக விளங்கக்கூடிய வகையில் மலையகத் தமிழர் மத்தியில் தொழிற்சங்கக் கட்டமைப்பும் பேராட்டக் குணமும் காணப்பட்டது. ஆனால் இன்று இந்நிலை சிதைக்கப்பட்டுத் தொழிலாளர்கள் உதிரிகளா-கும் நிலை வளர்ந்து வருகின்றது.

### 21ம் நூற்றாண்டிலும் அடிப்படை

உரிமைகள் மறுக்கப்பட்ட நிலையில், அரசாங்கத்தால் புறக்கணிக்கப்பட்டு, தோட்டக் கம்பனிகளின் அடக்கு முறைகளுக்கு உட்பட்டு வாழுகின்ற மலையகத் தமிழ்ச் சமூகத்தில் மாற்றங்கள் ஏற்படுவதற்குச் சலுகைகளை எதிர்பார்த்து வாழும் நிலைமைக்கு மாறாக உரிமைகளுக்காகக் குரல் எழுப்புகின்ற நிலை ஏற்படவேண்டும். நீண்டகால அடிப்படையில் தெளி-வான நோக்கமும் கருத்தியல் தெளிவும் செயற்பாட்டில் தீவிரமும் கொண்ட அமைப்புக்கள் வளர்த்தெடுக்கப்பட வேண்டும். தொழிலாளர்கள் மத்தியில் அரசியல், உரிமை அடிப்படையிலான கருத்துக்கள் பதிக்கப்படுவது அவசிய மானது.

மலையகத் தமிழ்ர்கள் ஒரு தனியான தேசிய இனமாக அங்கீகரிக்கப்படுவதுடன் அதன் மூலமாக அரசியல், பொருளா-தார, சமூக பண்பாட்டு அடிப்படையில் அனைத்து உரிமைகளையும் வென்றெடுப்பதற்கான போராட்டங்கள் முன்னெடுக்கப்பட வேண்டும். அத்துடன் இச்சமூகத்தின் இருப்புக்கு அடிப்படையாக இருக்கக்கூடிய பெருந்தோட்டத் துறை நவீனப்படுத்தப்படுவதுடன் தொழிலாளர்களின் தொழில் உரிமைகளும் கௌரவமும் உறுதிப்படுத்தப்படுவது உடனடித் தேவையாக இருக்கின்றது.

நீண்டகால அடிப்படையில் இச் சமூகத்தில் மாற்றங்கள் ஏற்படுவதற்குப் பண்பாட்டு அடிப்படையிலான வேலைத்திட்டங்கள் ஒரு இயக்கமாக முன்னெடுக்கப்படுவதும் உடனடித் தேவையாகும். குறிப்பாகக் கூட்டு உழைப்பு, விடயங்களை மனந்திறந்து கலந்துரையாடுதல், கூட்டுறவு மனபாங்கு, தொழிலாளர்களிடையிலான உறவைப் பலப்படுத்தி விஸ்தரித்தல், சுய உற்பத்திப் பரிமாற்றம், முட நம்பிக்கைகளை ஒழிப்பதுடன் மக்கள் கலைகளிலும் வழக்காறுகளிலும் காணப்படுகின்ற போராட்டக் குணங்களையும் எதிர்புணர்வுகளையும் வளர்த்தெடுத்தல் போன்ற செயற்பாடுகள் அவசியமானவை. இவ்வாறான பண்பாட்டு எழுச்சி உறுதிசெய்யப்படாவிடின் புதிய அரசியல் கட்டுமானத்தை உருவாக்குவது சாத்தியமற்றதாகி விடுவதுடன் அரசாங்கத்தால் இம் மக்கள் புறக்கணிக்கப்படும் நிலை மேலும் மோசமடைவது தவிர்க்க முடியாததா கிவிடும்..

●

# இலங்கையின் தேசிய இனச் சிக்கலும் மக்களுக்கான சுயநிர்ணய உரிமையும்

(இலங்கையின் தேசிய முரண்பாடுகளை முன்னிறுத்தி)

-அஸ்வத்தாமா-

## அறிமுகம்

தமிழீழ விடுதலைப்புலிகளின் படைத்துறையின் தோல்வியுடன் தமிழ் மக்களின் விடுதலைப் போராட்டம் பாரிய பின்னடைவை ஏதிர்நோக்கி இருக்கும் போரின் பின்னான இலங்கையின் அரசியற் போக்கு ஒரு புதிய திசையை நோக்கித் திரும்பியுள்ளது. இச் சூழலில் சிங்களப் பேரினவாத நாட்டுப்பற்றும் வேறுபாடான ஒரு உருவத்தை எடுத்து இலங்கையின் தேசியப் பிரச்சினைகளைச் சிக்கலறுப்பதில் புதிய முட்டுக்கட்டைகளையும் தடை-களையும் முன்வைக்கின்றது. இது பெரும்பாலும் உடனடித் தாக்கங்களாக வெளிப்படுகின்றது.

அண்மிய செயற்பாடுகளாக அரசசார்ப்பற்ற நிறுவனங்களும் (NGO) குடிசார் பேச்சாளர்களும் "அதிகாரப்பகிர்வற்ற அரசியலமைப்புச் சீர்த்திருத்தம்" (Non-Devolutionary Constitutional Reform) பற்றிய கருத்தாக்கங்களை முன் வைக்கின்றன. புதுப்புதுப் புனை பதங்களை முன்வைத்து அரசாங்கத்தை அரசியலமைப்பு மாற்றத்துக்கு இணங்க வைக்க முயற்சிகள் மேற்கொள்ளப்படுகின்றனவே ஒழிய, மக்களின் உரிமைகள் பற்றிப் பெரிதாக எந்த முக்கியத்துவமும் கொடுக்கப்படுவதாகக் காணோம். இதன் மறுபக்கத்தில் புலம் பெயர்ந்த குறுகிய தமிழ்த் தேசியவாதிகள் இன்னமும் தமது கற்பனைக் கருத்தாக்கமான தனித் தமிழீழ அரசுதான் இலங்கைத் தமிழர்களுக்கு தீர்வாக அமையும் என்ற வரட்டுத்தனமான வட்டுக்கோட்டை தீர்மானத்தை விடாப்பிடியாக வைத்துள்ளனர்.

இரு அணுகுமுறைகளும் குறுகிய வர்க்க நலன்களை பேணுவதில் அவரவர்களின் பங்கினை வெளிக் காட்டுகின்றன. முப்பதாண்டு உள்நாட்டுப் போர் முடிவுக்குக் கொண்டுவரப்பட்டாலும் அதற்கு ஏதுவாக இருந்த முரண்பாடுகளின் மூலங்கள் பற்றி இன்னமும் கணக்கிலோ கருத்திலோ எடுக்கப்படாமை நோக்கற்பாலது. இலங்கையின் முரண்பாடுகளில் முக்கியமானதான தேசியப் பிரச்சினை இன்னமும் தீர்க்கப்படாமலே இருக்கிறது. பேரினவாத ஒடுக்குமுறை, சிறுபான்மையினரின் அடிப்படை உரிமைகளின் மறுப்பு ஆதிய யாவும் இன்னமும் வலுவாக உள்ளன. இந்த ஒடுக்குமுறை இருநிலைப்பட்டது — அதாவது அரசியல், படைத்துறை வழிஏற்படுத்தப்பட்டது.

ஓர் அரசியல் தீர்வுக்கு ஏதுவாக அரசாங்கம் எதையும் முன்மொழியத் தயங்குவதோ விரும்பாமையோ ஆழமான நீண்டகாலச் சிக்கல்களை உருவாக்கும். தேசியப் பிரச்சினைக்கு நேர்மையான தீர்வு என்பது, இலங்கையின் அனைத்துத் தேசிய இனக்கூறுகளினதும் சுயநிர்ணய உரிமை (தன்னாட்சி உறுதிப்பண்புரிமை) கொண்ட ஒரு அமைப்பை உறுதிப்படுத்தும் அடித்தளத்தை கொண்டதாக அமையவேண்டும். "சுயநிர்ணய உரிமை" என்பது வெவ்வேறு அரசியல் அரங்காடிகளால் தங்கள் குழு சார்ந்த நலன்கட்கான செய்நிரல்களுக்கு ஏற்றவாறு காலத்துக்கு காலம் வெவ்வேறு விதங்களிற் விளங்கப்பட்டும் விளக்கப்படுத்தப்பட்டும் வருகின்றது. எனவே சுயநிர்ணய உரிமை என்ற கருத்துப்படிவம் இலங்கையின் தேசிய பிரச்சினைக்கு

தீர்வுக்கு எவ்வாறு பயன்படலாம் என்பது ஆராயப்பட வேண்டியதாகிறது.

## சுயநிர்ணய உரிமை

சுயநிர்ணய உரிமை என்ற கருத்துப்படிவம் ரஷ்யப் புரட்சியில் தன் தோற்றுவாயை உடையது. 1922இல் சோவியத் சோசலிசக் குடியரசுகளின் ஒன்றியத்தின் உருவாக்கம் மொழியாலும் பண்பாட்டாலும் வேறுபட்டோரும் ரஷ்யப் புரட்சியால் கவிழ்க்கப்பட்ட ரஷ்ய 'ஸார்' பேரரசினால் ஒடுக்கப்பட்டுவந்தோருமான 120க்கும் மேற்பட்ட இனப்பிரிவுகட்குரிய மக்களை ஒன்றிணைத்தது. இம் மாபெருஞ் சாதனை 1917 ஒக்டோபர் புரட்சியின் மூலம் இயலுமானது. அதைப் பற்றிப் பேசுகையில் லெனின், "தேசிய ஒடுக்குமுறையை அகற்றலும் தேசியப் பிரச்சினைக்கான சரியான நிலைப்பாட்டை அடைதலும் தேசிய இனங்களின் வீறார்ந்த போராட்டத்தின் வழியிலன்றி வேறு எவ்விதத்திலுமல்ல. சுயநிர்ணயம் பற்றி விளங்கிக்கொள்ள 'ஐரிஷ்' பிரச்சினை பற்றிய மார்க்ஸின் ஆய்வுத் தேற்றம் ஒரு முன்னோடிப் பங்களிப்பாகும். தொடக்கத்தில், ஐரிஷ் தேசம் தனது சுதந்திரத்தை தானே அடையும் ஆற்றல் உடையதோ அதற்காக தேவை உண்டோ என்பன பற்றி மார்க்ஸ் ஐயுறவு கொண்டார். ஆனாலும் ஐரிஷ் தேசமும் அதன் தொழிலாளி வர்க்கமும், ஆங்கிலத் தொழிலாளி வர்க்கமும் ஆங்கில முதலாளித்துவ அமைப்பைத் தூக்கி எறியும் போது விடுதலை பெறுவார்கள் என எதிர்பார்த்தார். அவரது எதிர்பார்ப்பு முன்னேற்றிய முதலாளித்துவ பிரித்தானியாவின் தொழிலாளர்கள் பிரித்தானியக் குடியேற்ற நாடுகளில் முதலாளித்துவத்தை கவிழ்த்து விடும் நிலையில் உள்ளார்கள் என்ற கருத்தின் அடிப்படையில் தோன்றியதாகும். 1860களின் இறுதிப்பகுதியில் ஆங்கில நாட்டின் தொழிலாளர் மத்தியில் ஐரிஷ் மக்கள் மீது காட்டப்பட்ட நச்சு இனத்துவேசமும் வெறித்தனமான ஒடுக்குமுறையும் பற்றிக் கண்டுணர்ந்து, ஐரிஷ் தேச விடுதலைக்கு ஐரிஷ் மக்கள் முதலாளித்துவத்துக்கு எதிராக போராடவேண்டும் என்பதை முன்னிறுத்தித் தன் ஆதரவை நல்கினார். அவர் ஆங்கிலத் தொழிலாளர்களை ஐரிஷ் விடுதலைக்காக முன்னிற்குமாறு தூண்டினார். மேலும் ஒடுக்கும் தேசத்தைப் பெயராண்மைப்படுத்தும் ஆங்கிலேயத் தொழிலாளர்கள் ஒடுக்கப்படும் தேசத்தின் விடுதலையை ஆதரிப்பது அவர்களுடைய தார்மீகக் கடப்பாடு என்று மார்க்ஸ் வாதிட்டார். இவ்வுளப்பாங்கு ஒடுக்கப்படும்ஃஒடுக்கப்பட்ட தேசங்கள் தொடர்பான தேசிய பிரச்சினை சார்ந்து லெனினது நிலைப்பாட்டின் மைய நோக்காகும். "மார்க்ஸ், ஏங்கல்ஸ் ஆகியோரின் ஐரிஷ் பிரச்சனை தொடர்பான கொள்கை ஒரு குறிப்பிட்ட எடுத்துக்காட்டாக, அதாவது ஒடுக்கப்படும் தேசத்தின் உழைக்கும் வர்க்கத்தின் உளப்பாங்கு தேசிய இயக்கச் செயற்பாட்டில் செலுத்தப்படவேண்டும். இவ்வகை நடைமுறை என்றும் தன் செயற்பாட்டு முக்கியத்துவத்தை இழந்ததில்லை" என லெனின் எழுதுகிறார். மார்க்ஸின் அணுகு முறையை முன்னிறுத்தித்,

தேசிய இனங்களின் சுயநிர்ணய உரிமையைக் கொள்கை வழியில் எதிர்ப்பவர்கட்கு மாறாகத் தொடர்ந்து மீண்டும் மீண்டும் போரட வேண்டும் என்பது அவரது நிலைப்பாடாகும்.

"தேசங்களின் சுய நிர்ணயத்துக்கான உரிமையானது, விடுதலைக்கான உரிமை, கட்டற்ற உரிமை ஒடுக்கும் தேசத்திலிருந்து அரசியல்ரீதியாகப் பிரிந்து செல்வதற்கு ஆதரவான கிளர்ச்சியை நடத்துவதற்கான கட்டற்றநிலை. பிரிந்து செல்வதா என்ற கேள்விக்கான தீர்வினை ஒப்பங்கோரல், குடியொப்பம் மூலம் முடிவுசெய்யவேண்டிய சுதந்திரம் இருக்கவேண்டிய அதே வேளை இந்தக் கோரிக்கை, பிரிந்துசெல்ல, கூறுபடுத்த, அல்லது சிறு அரசை உருவாக்க வேண்டும் என்ற கோரிக்கைகளை ஒத்ததல்ல. எந்த வடிவத்திலும் நடாத்தப்படும் தேசிய ஒடுக்குமுறைக்கு எதிரான போராட்டத்தை விளக்க வரும் நேர்மைப் பொருத்தமுடைய வெளிக்காட்டுகையே அது. அரசின் ஜனநாயக முறைமை பிரிந்து செல்வதற்கான முழுமையான நிலையை அண்மித்திருக்குமாயின், முழுமையாகப் பிரிந்து போகும் சுதந்திரத்தை வழங்கும் போது, மிக அருமையாக அல்லது வலுக்குறைந்த தேசிய இனக்கூறே செயல ளவில் பிரிந்துபோகும். பொரு ளாதார முன்னேற்றம், மக்கள் நலன்களின் நோக்கில் தேசிய சுயநிர்ணய உரிமைசால் ஜனநாயக முறையைப் பேணும் பேரரசுகளுக்கு பல நன்மைகளை வழங்கும் என்பது ஐயத்துக்கிடமானதற்று." சுயநிர்ணய உரிமையை ஏற்றுக்கொள்ளல், கூட்டிணைப்புக் கொள்கையை உருவாக்குவது போன்றதல்ல. ஒருவர் இந்தக் கொள்கையையும் மத்தியில் ஜனநாயகம் மையப்படத்தப்படுவதையும் சமரசமின்றி எதிர்க்கும் ஒருவர், தேசிய இனங்களின் சமனின்மைக்கு தீர்வு காண முழுமையாக ஒன்றித்த கொள்கையின் கீழ்க் கூட்டிணைப்பை விரும்பலாம் என விளக்குகிறார் லெனின்.

லெனின் சுயநிர்ணய உரிமையை விளக்கி வரைவிலக்கணப்படுத்திய பின்பே பிறர், குறிப்பாக வூட்றோ வில்சன், சுயநிர்ணய உரிமை என்பது மக்கள் தங்களை தாங்களே ஆள்வதற்கான உரிமை என வரையறை செய்கிறார். சுயநிர்ணய உரிமை என்பது மக்களின் இணக்கப்பாடின்றி சட்டரீதியாக எவரும் ஆளமுடியாது என்ற பொருள்கோடலை உள்ளடக்கும். வில்சன் தனது '14 அம்ச உரையில்' சுயநிர்ணய உரிமையை பறைசாற்றியிருப்பது நோக்கற்பாலதே. அடிப்படையில் வில்சன், லெனின் இருவரிடையிலும், பின்னவர் பிரிந்து போகும் உரிமையை ஏற்றுள்ளார்.

> **தேசிய ஒடுக்குமுறையை அகற்றலும் தேசியப் பிரச்சினைக்கான சரியான நிலைப்பாட்டை அடைதலும் தேசிய இனங்களின் வீறார்ந்த போராட்டத்தின் வழியிலன்றி வேறு எவ்விதத்திலுமல்ல.**

**தமிழர் சார்பாக முன்வைக்கப்படும் எத் தீர்மானமும் மற்றைய சிறுபான்மையினரின், குறிப்பாக முஸ்லிம்கள், மலையகத் தமிழர் போன்றோரின் உரிமைகளை முறையாக உள்வாங்கியதாக இருக்கவேண்டும்.**

ஒன்றாக இருப்பது முடியாமற் போனாற் சுயநிர்ணய உரிமையின்படி பிரிந்துபோக உரிமையுண்டே ஒழிய அதுவே பிரிவினையாக மாட்டாது. இதை லெனின் மணமுறிவு உரிமையை எடுத்துக்காட்டி ஒப்பிட்டு விளக்குகிறார். மண முறிவு உரிமை என்பது மண உறவை முறிப்பதல்ல. ஆனால் ஒவ்வோர் ஆளும் மண ஒப்பந்தத்தினை ஏற்படுத்தும்போது பின்பயன்கருதி மணமுறிவு உரிமை யையும் உறுதிசெய்வதுபோல மணமுறிவு உரிமை இல்லாமல் எந்த திருமணமும் நீடுநிலைப் பொறுப்புறுதி வழங்கமுடியாது. பிரிவதற்கான உரிமை உறவை சமமாக வைக்கவும் நிலைத்து நிற்கவும் செய்வதற்காகனது. ஆகவே ஓர் ஒன்றியத்தின் (union) தேசிய இனங்களும் இனக்கூறுகளும் பிரிந்துபோவதற்கான உரிமை என்பது இணைந்து வாழ்வதற்காக சாத்தியங்களை துருவித் தேடலே என்பது லெனின் முன்வைக்கும் கருத்தாகும்.

பின்னைக் காலங்களிற் சுயநிர்ணய உரிமை என்பது அரசியற்சட்டமுறை விளக்கங்களைப் பெற்றுக்கொண்டது. அரசியல் கோட்பாட்டுவழியின் நோக்கெல்லையும் பரப்பெல்லையும் சட்டவழி முறைக்கும் அப்பாற் பரந்துவிட்டன. சம உரிமையும் மக்களின் சுயநிர்ணய உரிமை யையும் மதிக்கும் ஐ.நா. கொள்கையின் அடிப்படையின் தேசங்களுக்கிடை நட்புறவை மேம்படுத்தவும் உலக அமை தியை வலுப்படுத்த நடவடிக்கைகள் எடுக்கவும் என 1945இல் எழுதப்பட்ட ஐக்கிய நாடுகளின் பட்டயத்தின் சட்டவாக்கம் (2)இற் கூறப்பட்டுள்ளது. மேலும் பன்னாட்டுக் குடிசார், அரசியல் உரிமைகள் அவைக் கூட்டு (ICCPR), 1966இல் ஏற்படுத்தப்பட்ட பன்னாட்டுப் பொருளாதார, சமூக பண்பாட்டுரிமை அவைக்கூட்டு (IC-ESOR) போன்றவற்றிலும் சுயநிர்ணய உரிமைக் கோட்பாடு பதியப்பட்டுள்ளது. இவ் அவைக் கூட்டுகள் சுயநிர்ணய உரிமை மக்களின் உரிமைகளில் ஒன்று என்று வலியுறுத்திக் கூறுவதுடன், பொருத்தனைச் சட்டங்கள் (Treaty) மூலம் பொறுப்புறுதி செய்துள்ளன. ஐ.நா. முறையேற்ற (UN Ratified) சுயநிர்ணய உரிமையின் தாக்கம், சட்டத்தினதை விட அதிகம். அரசி யற் பாங்காக மட்டுமல்லாமல் அரசி யற் காரணங்களுக்காகவும் சுயநிர்ணய உரிமை என்பதன் பொருள் பலவாறாக வேறுபட்ட விளக்கங்களுக்கு உட்படுகின்றது.

## இலங்கையில் சுயநிர்ணய உரிமை

இலங்கையிலோ வெறெங்குமோ தேசியப் பிரச்சினை பற்றி மார்க்சிய லெனினியவாதிகளின் நிலைப்பாடு இரட்டுறல் தன்மையற்றது. அது வரலாற்று ரீதியாக இலங்கையின் பேரினவாதத்தின் கூர்ப்பையும் அதன் தொடர்ச்சியாகத் தேசிய ஒடுக்குமுறையையும் இனங்கண்டு, இலங்கையின் பிரதான முரண்பாடாகத் தேசிய முரண்பாட்டின் கூர்ப்பையும் ஒப்புக் கொண்டுள்ளது. மார்க்சிய லெனியவாதிகள் எல்லாத் தேசிய இனக் கூறுகளினதும் சுயநிர்ணய உரிமையை உறுதிப்படுத்தும் வழியே தான் தேசியப் பிரச்சினைக்கு முடிவு காண இயலும் என்பதை விடாது வலியுறுத்தி வருகின்றனர். தேசிய இனக் கூறுகளின் சுயநிர்ணய உரிமைகளைப் புறந்தள்ளிய தீர்வுக்கான முன்மொழிவுகள் ஐயத்துக்குரியன.

இலங்கையின் தேசியப் பிரச்சினையின் தொடர்பில், அதனுள் அடங்கிய வர்க்க, வர்க்கஞ்சார் நலன்களின் உள்ளியல்புகள் நேரடியாக புலப்படுவதில்லை. தற்போதுள்ள அரசியற் சட்டகம், நாடாளுமன்றத்தின் நிறைவேற்றும் அதன் சட்டவாக்கம் ஆகியவற்றுள் தீர்வுக்காக ஆய்வினை மட்டுப்படுத்திக் கொள்ளும் ஒருவரால் தேசியப் பிரச்சினைகள், தேசிய இன, வர்க்கப் பண்புக்கூறுகள், தேசிய இனக்கூறுகளின் சுயநிர்ணய உரிமை போன்றவற்றை இனங்கண்டு கொள்ளும் தேவையைச் செவ்வையாகக் கணிப்பிடமுடியாது. ஆகவே, தற்போதுள்ள அரசியற் சட்டகத்துள் தீர்வைத் தேடும் முயற்சி, நிச்சயமாக, முரண்பாடுகளின் அரசியற் தொடர்விளைவுகட்கான அடிப்படைக் காரணங்களைக் கணக்கில் எடுக்கத் தவறிவிடும். கடந்த முப்பது ஆண்டுகளில் தேசிய இனங்களுக்கிடையிலான முரண்பாடுகள் பிரதான முரண்பாடாக வளர்ச்சி பெற்றமையையும் எல்லாச் சமூகங்களையும் திருப்திப்படுத்தக்கூடிய வழிவகைகளையும் இனங்கண்டு அவற்றை கணக்கிலெடுத்தல் அவசியம். ஆகவே அரசுசார், குடிசார் பேச்சாளர்களின் அதிகாரப்பகிர்வற்ற அரசியற் சீர்த்திருத்தங்களை பற்றி கதைப்பதன் உட்கிடை, மக்களின் உரிமை என்பது தீர்வின் ஆதாரநிலை என்பதை ஏற்றுக்கொள்ள விரும்பவில்லை என்பதே மார்க்சிய லெனினியவாதிக-ளின் நிலைப்பாடு. அது செம்மையானது என்பதை விளங்கிக்கொள்ள, உள்நாட்டு, வெளிநாட்டுச் சக்திகள் தேசிய ஒடுக்குமுறைக்குள் பங்கெடுத்துக் கொள்ளும் கட்டத்தில் நுழைந்துள்ளதையும் அதன் வழி தேசியப் பிரச்சினை எப்படி வளர்ச்சி பெறுகிறது என்பதையும் துல்லியமாக ஆராய வேண்டும். ஒரு தேசிய இனமோ ஒரு தேசிய இனக்கூறோ ஒரு சமுதாயமோ சமூகக்குழுவாக ஒடுக்கப்படும்போது, ஒடுக்குமுறைக் கெதிரான போராட்டம் அதன் அடையாளத்தைச் சார்ந்திருக்கும். போராட்டத்தை மறுப்பது சமூக ஒடுக்கு முறையை ஆதரிப்பதாகும் என்பது மார்க்சிய லெனினியவாத நிலைப்பாடாகும் அந்த அடிப்படையில் தான் அவர்கள் கொலனி ஆதிக்க மறுப்பு விடுதலைப் போராட்டத்தையும் ஒடுக்கப்பட்ட தேசிய இனக் கூறுகளினதும் சமூகக் குழுக்களின் போராட்டத்தையும் ஆதரித்தனர். தமிழ்த் தேசியவாதம் அதன் எல்லா

வடிவங்களிலும் அடையாளங்களிலும் ஓர் வரலாற்று ஆக்கப்பாடே. தமிழ் அடையாள மலர்ச்சி தமிழ் தேசிய அடையாளமாக மாறியதற்குப் பல்வேறு சமூக, பொருளாதார, வரலாற்றுக் காரணங்கள் உள்ளன. தமிழ்த் தேசிய அடையாளம் மாறிக் கொண்டே இருக்கிறது. இன்றையது அதற்கு முந்தையதைவிட குறிப்பிடுமளவுக்கு வேறுபட்டது. 1970களில் தமிழ்த் தேசியத் தலைவர்கள் "தனித் தமிழீழ அரசு" என்ற கருத்துப்பாங்கை முன்வைத்துக் கொள்கைப்பரப்புச் செய்தனர். 1976இல் சந்தர்ப்பவாத நாடளுமன்ற அரசியல் காரணங்களுக்காக வட்டுக்கோட்டைத் தீர்மானத்தை நிறைவேற்றினார்கள். தமிழர் முகங்கொடுக்கும் பிரச்சினைகளுக்காக தீர்வு இத் தீர்மானத்தின் அடிப்படையில் அமையாது. நேர்மையாக சொல்வதானால் தமிழர் சார்பாக முன்வைக்கப்படும் எத் தீர்மானமும் மற்றைய சிறுபான்மையினரின், குறிப்பாக முஸ்லிம்கள், மலையகத் தமிழர் போன்றோரின் உரிமைகளை முறையாக உள்வாங்கியதாக இருக்கவேண்டும். ஆனால் தனித்தமிழீழ அரசு என்ற வட்டுக்கோட்டைத் தீர்மானம், முஸ்லிம்களதும் மலையகத் தமிழர்களதும் அரசியற் பிரச்சனைகளைக் கருத்தில் கொள்ளவும் கணக்கெடுக்கவும் தவறியுள்ளது. குறிப்பிடும்படியாக, அண்மை வரை, தமிழ்த் தேசியக் கட்சிகள் எல்லா இனக்கூறுகளினதும் சுயநிர்ணய உரிமையை அடிப்படையாகக் கொண்ட தீர்வுகளை விரும்பாதிருந்தமை கண்கூடு, சுயநிர்ணய உரிமை என்ற கருத்தாக்கம் முதலாளித்துவ ஜனநாயகத்தின் ஆக்கமல்ல. அது புரட்சிகரச் சிந்தனைப் பாங்கினையுடைய தொழிலாளி வர்க்கத்தினுடையது.

கொலனித்துவத்துக்குப் பிந்திய தேசியப் பிரச்சினை பண்பளவில் கொலனித்துவ காலத்தினின்றும் வேறுபடுகிறது. சுயநிர்ணயம் என்பதை 20ம் நூற்றாண்டின் தொடக்கத்திற் காணப்பட்ட ஒடுக்கும் தேசத்துக்கும் ஒடுக்கப்படும் தேசத்துக்கும் இடையிலான ஒன்றாக நோக்காமல், அதினும் பரந்தளவில் நோக்க வேண்டும். ஏகாதிபத்தியவாதிகள் தமது மேலாதிக்க நலன்களை முன்னெடுக்கப் பிரித்தாளும் சூழ்ச்சியை எவ்வாறு பயன்படுத்தினர் என்பதை ஒருவர் வரலாற்றுரீதியாக நோக்கவேண்டும். வெறுமனே சுயநிர்ணய உரிமையின் அடிப்படையில் பிரிவினை கோருவது, மேட்டுக் குடித் தமிழ்த் தேசியவாதிகள் ஏகாதிபத்தியவாதிகளின் செய்நிரலை அரவணைத்துத் தங்கள் நலன்களை பேணுவதற்கே. பிரிந்து போகும் உரிமையை ஏற்றுக்கொள்ளும் மார்க்சிய லெனினியவாதிகள் தேசிய முரண்பாடுகளுக்குப் பிரிவினையே ஒரே அருமருந்தென ஏற்பதில்லை என்பதுடன் ஏகாதிபத்தியவாதிகள் பிரிவினையை தங்கள் நலன்களுக்குப் பயன்படுத்துவது குறித்தும்—எடுத்துக்காட்டாக அண்மையிற் கொசொவோ பிரிவினை —எச்சரித்து வந்தமை கவனிக்கத்தக்கது. (ஏகாதிபத்தியம் முதலில் யூகோஸ்லாவியாவைத் துண்டாக்கியது, பின்பு அதன் ஒரு துண்டாகிய சேர்பியாவில் இருந்து கொசொவோவைப் பிரித்தது). ஆகவே இலங்கையின் தேசியப் பிரச்சினைக்கு பிரிவினையே ஒரேவழி, அதுவே தீர்வைத் தரும் என்பது தேசிய இனக்கூறுகளின் நலனுக்கானதாகாது. (பிரிவினை மேலும் பிரிவினைக்கு இடமளிக்கலாம். இன்றய தமிழ்த் தேசியம் நாளைக்கு வடபுலத் தமிழ்த் தேசியம், கிழக்குத் தமிழ்த் தேசியம், வன்னித் தமிழ்த் தேசியம், மன்னார்த் தேசியம், யாழ்ப்பாணத் தேசியம், தீவுத் தேசியம், வடமராட்சித் தேசியம் எனவும் பின்னர் அது சாதிரீதியாக மேலும் பல கூறுகளாகவும் கிளைவிடலாம். இவை ஒவ்வொன்றுக்கும் தேவை, தமக்கானதோர் அடையாளத்தை தோற்றுவிப்பதாகும்).

தற்போதைய தேவை யாதெனில் இலங்கையின் எல்லாத் தேசிய இனக் கூறுகளினதும் சுயநிர்ணய உரிமையை உறுதிப்படுத்துவதே. புலம்பெயர்ந்த தமிழரில் ஒரு சாராரும் தமிழ் ஊடகங்களும் சுயநிர்ணய உரிமை என்பது ஒரு வெறும் பிரிவினைக்கான உரிமை தான் எனப் பரப்புரை செய்கின்றன. இது தவறான வழிநடத்தலும் தீங்கான போக்குமாகும். சுயநிர்ணய உரிமை என்பது பிரிவினைக்கும் மேலானதாகும். தமிழ்த்தேசியவாதிகளும் சிங்களப் பேரினவாதிகளும் தொடர்ந்தும் சுயநிர்ணய உரிமை பற்றி மக்களை தவறாக வழிநடத்துகிறார்கள். இவ்வேளை, சில தமிழ் நாடாளுமன்ற அரசியல்வாதிகள் புதிய புனைவொன்றாக "உள்ளக சுயநிர்ணய உரிமை" என்ற பசப்புப் பதத்தை முன்மொழிந்து அதைத் தேசியப் பிரச்சினையின் தீர்வாகப் பேசுகின்றனர். (இணைப்பாட்சியில் தொடங்கி பிராந்திய சபை, மாவட்ட அபிவிருத்திச் சபை, தனி நாடு, மாகாண சபை, தமிழீழம், சுயநிர்ணய உரிமை, உள்ளக சுயநிர்ணய உரிமை என்று இவர்கள் மாறி மாறி மக்களைக் குழப்பி ஏமாற்றுகிறார்கள்).

**உள்ளக சுயநிர்ணய உரிமை என்பது தேசிய இனக்கூறுகளின் சுயநிர்ணய உரிமையைச் சின்னாபின்னமாக்கி நாளடைவில் தேசிய இனக்கூறுகளின் உரிமைகளை ஒதுக்கிறதற்கான ஒரு முயற்சியே.**

உள்ளக சுயநிர்ணய உரிமை என்பது தேசிய இனக்கூறுகளின் சுயநிர்ணய உரிமையைச் சின்னாபின்னமாக்கி நாளடைவில் தேசிய இனக்கூறுகளின் உரிமைகளை ஒதுக்கிறதற்கான ஒரு முயற்சியே.

இந் நிலையில் மார்க்சிய லெனினியவாதிகள் பிரிவினைக்கெதிரான நிலைப்பாட்டை மீண்டும் அழுத்திச் சொல்வது முக்கியமாகிறது. பிரிவினை என்பது ஏகாதிபத்தியவாதிகள் பயன்படுத்தும் ஒரு கருவி. அது பிரிவினையை எதிர்ப்பதை உரிமையாக கொள்ளவில்லை. பிரிவினைக்கான உரிமை சுயநிர்ணய உரிமையின் பிரிக்கமுடியாத ஒரு பகுதியே அன்றி பிரிவினைக்கான உரிமம் அன்று.

அத்துடன் தேசிய இனக்கூறுகளிடையே உள்ள முரண்பாடுகளைத் தீர்க்கவும் பிரிவினையைத் தடுக்கவும் உதவும் ஓர் மார்க்கமுமாகும். சிங்களப் பேரினாதிகளும் குறுந் தமிழ்த் தேசியவாதிகளும் என்றுமே சமூகநீதிக்கான மக்களின் போராட்டத்தை கருத்தில் கொள்வதில்லை. இந் நடவடிக்கை, முன்புஞ் சரி தற்போதும் சரி, மக்களைப் பிரித்தும் தேசிய இனக்கூறுகளின் உரிமைகளை மறுத்தும் அரசியல் நடத்துவதற்கும் ஆட்சியை தக்கவைத்துக் கொள்ளவுமே என்பது உறுதியாகிறது.

நிறைவாக சுயநிர்ணய உரிமை என்பது கண்முடித்தனமாகவோ, தேச, தேசிய இனக் கூறுகளின்மேல் அல்லது இனக்குழுக்களின் மேல் அழுத்திச் சுமக்க வைக்கும் ஒன்றல்ல. ஒரு தேசிய இனக்கூற்றின் சுயநிர்ணய உரிமை என்பது, அதன் இருப்பும் உய்வும் அடையாளமும் அச்சுறுத்தப் படும்போது மட்டுமே, சுயநிர்ணய உரிமைக்கு அல்லது பிரிவினைக்கான போராட்டம் உருப்பெறுகிறது.

ஒடுக்கப்படும் ஒரு தேசிய இனம் தொடர் வளர்ச்சியுறுவதுமாகும். எந்த இரு போராட்டங்களும் ஒரே மாதிரி அமைய முடியாது. பல சந்தர்ப்ப் சூழ்நிலைகளில், இலங்கை உள்ளிட்ட நாடுகளில், மேலாண்மை உள் நோக்கத்தில் வழிநடத்தும் அந்நிய தலையீடுகளின் அரசியற் பின்விளைவுகள் மென்மேலும் சிக்கலான நிலைமைகட்கே வழி செய்துள்ளன. இலங்கையின் இன்றைய நிலை கவலையளிக்கக் கூடியதாகவே உள்ளது. தேசிய இனக் கூறுகளின் உரிமைகள் புதிய அச்சுறுத்தல்களுக்கு உள்ளகின்றன. சிறுபான்மையினரின் உரிமைகளை நிலைநிறுத்துவது முக்கியமான நடவடிக்கையாக உள்ளது. இது முற்போக்குச் சக்திகள் ஒன்றிணைந்து தேசிய இனக்கூறுகளின் சுயநிர்ணய உரிமைக்காகப் போராடவேண்டிய காலம் மட்டுமல்ல. இலங்கையின் தேசிய பிரச்சினைக்கு நீதியான தீர்வை உறுதிப்படுத்த வேண்டிய காலமுமாகும். •

## தேடல்-8 ஆசிரியர் தலையங்கத்திலிருந்து....

# இந்திய விஸ்தரிப்புவாதமும் பசப்பு நடவடிக்கைகளும்

இலங்கை தமிழ் மக்களின்மேல் அன்பும் பாசமும் கொண்டவர்கள்போல் பாசாங்கு செய்து முதலில் உணவுப் பொதிகளை வீசியும், இறுதியில் தமிழ் பிரதேசங்களை ஆக்கிரமித்து போராளிகளிடமிருந்து ஆயுதங்களை பறித்தெடுக்க யுத்தம் புரிந்த இந்திய இராணுவம் முக்காடு போட்டுக் கொண்டு வெளியேறி ஓர் ஆண்டு பூர்த்தியாகிவிட்டது.

பெரும்பான்மை தமிழ் மக்கள் நினைத்ததுபோல் நீதியை நிலைநாட்டவோ தமிழ் மக்களுக்கு உரிமைகளை பெற்றுத் தரவோ இந்திய இராணுவம் இலங்கைக்கு வரவில்லை.

இலங்கையை ஆக்கிரமிக்கவும் தமிழ் மக்களின் சுயநிர்ணய உரிமைப் போராட்டத்தை நசுக்கவும் வந்தது. இந்த ஆக்கிரமிப்பு இராணுவத்தின் வெறிச்செயலால் தமிழ் மக்கள் பட்ட துன்பங்கள், வேதனைகள் வரலாற்றிலிருந்து மறைந்துவிடப் போவதில்லை. ஆக்கிரமிப்பு இராணுவம் நடாத்திய அரசியல் வன்முறைகள், படுகொலைகள், மிருகத்தனமான பாலியல் வன்முறைகள், கொடுமையான அடக்குமுறை நடவடிக்கைகளை - தமிழ் துரோகக் குழுக்களும், புலிகள் போன்ற சந்தர்ப்பவாத தலைமைகள் மறந்தாலும் - போராளிகளும், தமிழ் மக்களும் மறந்துவிடப்போவதில்லை. இந்தக் கொலைகார இராணுவத்திற்கு ஆதரவு கொடுத்த தமிழ் குழுக்களையும் வரலாறு மன்னிக்கப்போவதில்லை.

இந்தியா தம் மண்ணில் போராடும் தேசிய இனங்களை ஒடுக்குவது, தேசியவெறி யுத்தவெறியை தூண்டுவது, பிராந்தியத்தில் உள்ள அண்டை நாடுகளின் உள் விவகாரங்களில் மூக்கை நுழைத்து ஆதிக்கத்தை நிலை நிறுத்த முற்படுவது என்ற கொள்கைகளையே தொடர்கிறது.

இலங்கையில் இருந்து இந்திய இராணுவம் வெளியேற்றப்பட்டாலும், தமிழ் மக்களின் சுய உரிமைப் போராட்டத்தை இந்திய எந்நேரமும் வரலாம் என்ற அபாயம் காத்திருக்கிறது.

தமிழ் மக்கள் மீதோ, அவர்களின் போராட்டத்தின் மீதோ இந்தியாவுக்கு என்றுமே அனுதாமோ ஆதரவோ இருந்ததில்லை. இந்தியாவுக்கு இருப்பதெல்லாம் பிராந்திய ஆதிக்கவெறி மட்டுமே.

- தமிழ் மக்களை தேசிய இனமாக அங்கீகரிக்காமல்
- தமிழ்மக்களின்பாரம்பரிய நில உரிமையை ஏற்றுக்கொள்ளாமல்
- தமிழ் மக்களின் சுயநிர்ணயத்தை அங்கீகரிக்காமல்

தமிழ் மக்கள் மீது அனுதாபம் இருப்பதாயும், தமிழ் மக்களின் போராட்டத்திற்கும், போராளிகளுக்கும் ஆதரவு காட்டுவதுபோல் இந்தியா நடந்துகொள்வது தனது விஸ்த்தரிப்பு நடவடிக்கைகளை மறைத்திடும் நடவடிக்கையே ஒழிய வேறொன்றுமில்லை.

**தேடல் - 8, வைகாசி 1991**





(1970 ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 20 ஆம் தேதி நியூயார்க்கிலுள்ள சிராக்யூஸ் பல்கலைக் கழகத்தில் ஆற்றிய **எடுவர்டோ மாண்ட்லேன்** நினைவுச் சொற்பொழிவு.)

- அமில்கார் கப்ரால்
Amilcar Cabral

தமிழில்: மு. வசந்தகுமார்

# தேசிய விடுதலையும் பண்பாடும்

போர்ச்சுகீசியக் காலனியாதிக்க வாதிகளாலும் அவர்களின் கூட்டாளிகளாலும் 1969, பிப்ரவரி 3 ஆம் தேதி தாருஸ்ஸலாமில் மிகவும் கோழைத்தனமான விதத்தில் படுகொலை செய்யப்பட்ட எமது போராட்டத் தோழரும் ஆப்பிரிக்காவின் மதிப்புக்குரிய புதல்வரும் மொசாம்பிக் விடுதலை முன்னணி (FRELIMO) யின் முன்னாள் தலைவரும் நம்மை மீளாத்துயரில் விட்டுச் சென்றவருமான டாக்டர். எடுவர்டோ மாண்ட்லேன் அவர்களுக்கு அஞ்சலி செலுத்தும் விதத்தில் நடைபெறும் இவ்விழாவில் பங்கெடுத்துக் கொள்வது மாபெரும் கௌரவமாகும்.

இந்த முன் முயற்சியை மேற்கொண்டமைக்காக நாம் சிராக்யூஸ் பல்கலைக் கழகத்திற்கும், குறிப்பாக ஆராய்ச்சியாளரும் ஆசிரியருமான மார்ஷல் ஸெகால் அவர்களால் வழிநடத்தப்படும் கிழக்கு ஆப்பிரிக்க ஆய்வுத்திட்டத்திற்கு நன்றி கூற வேண்டும்.

எமது மக்களுக்கும் எமது போராளிகளுக்கும் விடுக்கப்பட்ட அழைப்பாக நாங்கள் கருதுகின்ற உங்களுடைய அழைப்பை ஏற்றுக் கொள்வதன் மூலம், காலனியாதிக்கங்கள் அனைத்திலும் மிகவும் பிற்போக்கான போர்ச்சுகீசியக் காலனியாதிகத்திகிற்கு எதிரான பொதுவான போராட்டத்தில் நாங்கள் சகோதரத்துவ உறவின் மூலம் யாருடன் பிணைப்புக்கொண்டிருந்தோமோ அந்த மொசாம்பிக் மக்களின் நேசத்திற்குரிய தலைவர் டாக்டர். எடுவர்டோ மாண்ட்லேன் அவர்களுடன் மொசாம்பிக் மக்களுடனும் எமது போர்க்குணம் வாய்ந்த நட்புறவு மற்றும் எமது ஒற்றுமை ஆகியவற்றை மீண்டும் ஒருமுறை வெளிப்படுத்த விரும்பினோம். எமது தோழர் எடுவர்டோ மாண்ட்லேன்ட் அவர்களின் கருத்துக்களை சில சமயங்களில் நாங்கள் ஏற்றுக் கொள்ளாவிட்டாலும் கூட, எமது நட்புறவும் ஒற்றுமையும் எப்போதுமே மிகவும் உண்மையானவையாகும். மேலும், அவருடைய மரணம் எமது நாட்டு மக்களுக்கும் பேரிழப்பாகும்.

டாக்டர். எடுவர்டோ மாண்ட்லேனின்

சித்திரத்தைக் கொடுப்பதற்கும், அவரால் பெறத்தக்கவையான புகழுரைகளை வழங்குவதற்கும் பிற பேச்சாளர்களுக்கு ஏற்கனவே வாய்ப்புக் கிடைத்து விட்டது. ஆப்பிரிக்கத் தேசபக்தராகவும், மாபெரும் பண்பாட்டாளராகவும் விளங்கிய அவருக்கு எமது போற்றுதலை மீண்டும் உறுதிப்படுத்துவதற்கு மட்டுமே நாங்கள் விரும்புகிறோம். அதேபோல, தன்னுடைய நாட்டு மக்களின் விடுதலைக்காகப் போராடுவதென்ற அவருடைய உறுதியில் மட்டுமே எடுவர்டோ மாண்ட்லேன் அவர்களின் மாபெரும் தகுதி அமைந்திருக்கவில்லை என்பதையும் கூற விரும்புகிறோம். தன்னுடைய நாட்டின் யதார்த்தத்துடன் தன்னை ஒன்றுபடுத்திக் கொள்வதற்குத் தகுதி வாய்ந்தவராக இருந்தார் என்பதிலும், துணிவு, விவேகம் மற்றும் உறுதிப்பாடு ஆகியவற்றுடன் அவர் வழிநடத்திய போராட்டங்களின் மூலம் தன்னுடைய மக்களுடன் தன்னைஅடையாளப்படுத்திக் கொள்வதற்கும், அவர்களுடைய பண்பாட்டை உள்வாங்கிக் கொள்வதற்கும் தகுதி வாய்ந்தவராக இருந்தார் என்பதிலும் தான் அவருடைய மாபெரும் தகுதி அமைந்திருக்கிறது.

கிராமப்புறப் பின்னணியிலிருந்து வந்த ஆப்பிரிக்க மனிதரும், விவசாயிக-ளின் மகனும், பழங்குடித் தலைவர் ஒருவரின் மகனுமான, மிசனரிகளால் கல்வியளிக்கப்பட்ட குழந்தையான, காலனியாதிக்க மொசாம்பிக்கில் வெள்ளையர்களின் பள்ளிகளில் கறுப்பு மாணவராக இருந்த, இன வெறித் தென்னாப்பிரிக்காவில் பல்கலைக்கழக மாணவராக இருந்த, இளமைக் காலத்தில் ஒரு அமெரிக்க நிறுவனத்தின் உதவியைப் பெற்ற, ஒரு அமெரிக்கப் பல்கலைக்கழகத்தின் படிப்புதவித் தொகையைப் பெற்ற மாணவராக இருந்த, நார்த் வெஸ்டர்ன் பல்கலைக்கழகத்தில் டாக்டர் பட்டம் ஐக்கிய நாடுகள் சபையின் மூத்த அதிகாரியாக விளக்கிய, சிராக்யூஸ் பல்கலைக்கழகத்தில் பேராசிரியராகப் பணிபுரிந்த, மொசாம்பிக் விடுதலை முன்னணியின் தலைவரான எடுவர்டோ சிவாம்போ மாண்ட்லேன் தனது மக்களின் விடுதலைக்கான போராட்டத்தில் ஒரு போராளியாக இறந்தார்.

உண்மையில் எடுவர்டோ மாண்ட்லேனின் வாழ்க்கை ஏராளமான அனுபவங்களையுடையது. விவசாய நிலத்தில் குறுகிய காலத்துக்கு அவர் வேலை பழகும் கூலித் தொழிலாளியாக வேலை செய்ததையும் கணக்கிலெடுத்துக் கொண்டால், உண்மையில் காலனியாதிக்க ஆப்பிரிக்க சமூகத்தின் அனைத்து விதமான பதவிகளையும் அவருடைய வாழ்கையில் அவர் பெற்றதைக் காணமுடியும்: விவசாய வர்க்கத்திலிருந்து தன்வயமாக்கப்பட்ட குட்டி முதலாளியத்துவ வர்க்கம் வரையில்: பண்பாட்டுத் தளத்தில் கிராமப்புற உலகத்திலிருந்து, உலகம் முழுவதும் விரிந்த, உலகம் முழுவதும், உலகளாவிய பண்பாடு, அதன் பிரச்சினைகள், முரண்பாடுகள் மற்றும் பரிணாம வளர்ச்சிக்கான எதிர்கால வாய்ப்புக்கள் வரையில்.

இந்த நீண்ட பயணத்திற்குப் பிறகும், இன்றைய உலகின் பெருமளவிலான அனுபவங்களை பெற்று, தன்னுடைய மக்களின் விடுதலைக்காகவும் முன்னேற்றத்துக்காகவும் போராடுகின்ற ஒரு போராளியின் ஆளுமையுடன் தன்னுடைய கிராமத்திற்குத் திரும்புவதற்கு எடுவர்டோ மாண்ட்லேனால் முடிந்தது என்பதுதான் முக்கியமான விடய மாகும். இவ்விதமாக அவர் பயன்மிக்க ஒரு உதாரணத்தை வழங்கியிருக்கிறார்: அனைத்துச் சிரமங்களையும் கைவிட்டதன் மூலமும், பண்பாட்டு ரீதியான அந்நிய உணர்வு மற்றும் அரசியல் ரீதியான அந்நிய உணர்வு ஆகியவற்றுடனான சமரசங்கள் அல்லது ஈடுபாடுகள் போன்றவற்றிலிருந்து தன்னை விடுவித்துக் கொண்டதன் மூலமும் அவர் தனது சொந்த வேர்களை மறுபடியும் கண்டறிவதற்கும், தன்னுடைய மக்களுடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்வதற்கும், தேசிய மற்றும் சமூக விடுதலையின் இலட்சியத்திற்குத் தன்னை அர்ப்பணித்துக் கொள்வதற்கும் தகுதியுடையவராக இருந்தார். இந்தக் காரணத்தால் தான் ஏகாதிப்பத்தியவாதிகள் அவரை மன்னிக்கவில்லை.



**துணிவு, விவேகம் மற்றும் உறுதிப்பாடு ஆகியவற்றுடன் அவர் வழிநடத்திய போராட்டங்களின் மூலம் தன்னுடைய மக்களுடன் தன்னை அடையாளப்படுத்திக் கொள்வதற்கும், அவர்களுடைய பண்பாட்டை உள்வாங்கிக் கொள்வதற்கும் தகுதி வாய்ந்தவராக இருந்தார் என்பதில்தான் அவருடைய மாபெரும் தகுதி அமைந்திருக்கிறது.**

போர்ச்சுகீசியக் காலனியாதிக்க வாதிகளுக்கு எதிரான பொதுவான போராட்டத்தின் முக்கியமான பிரச்சினைகளை விவாதிப்பதற்கு மாறாக, ஒரு இன்றியமையாத பிரச்சினையின் மீது நமது உரையை ஒருமுகப்படுத்தலாம்: தேசிய விடுதலைப் போராட்டத்துக்கும் பண்பாட்டுக்கும் இடையிலான, ஒன்றையொன்று சார்ந்த, பரஸ்பர உறவுகள் என்பதுதான் அப்பிரச்சினை.

போராட்டத்தின் வளர்ச்சிப் போக்கில் இந்தப் பிரச்சினையின் தீர்மானகரமான முக்கியத்துவத்தைப் பற்றி ஆப்பிரிக்க விடுதலைப் போராட்ட வீரர்களுக்கும் ஆப்பிரிக்க மக்களின் விடுதலையிலும் முன்னேற்றத்திலும் அக்கறையுள்ள அனைவருக்கும் நம்மால் புரிய வைக்க முயுமானால், எடுவர்டோ மாண்ட்லேனுக்கு நாம் முக்கியத்துவம் வாய்ந்த அஞ்சலியைச் செலுத்தியவர்களாவோம்.

## அழித்தொழித்தலா அல்லது தன்வயமாக்கலா?

காலனியாதிக்கத்தின் குரூரமான இரண்டக நிலை. நாஜிப் பிரச்சாரத்தின் காரணகர்த்தாவாக விளங்கிய கோயபல்ஸ் 'பண்பாடு'' என்ற சொல்லைக் கேட்டதுமே தனது கைத்துப்பாக்கியை

பொருளாதார அம்சங்கள் எவையாக இருந்தபோதிலும், சம்மந்தப்பட்ட நாட்டு மக்களின் பண்பாட்டு வாழ்கையை நிரந்தரமாகவும் திட்டமிட்ட முறையிலும் ஒடுக்குவதன் மூலம் தான் இந்த ஆதிக்கத்தைப் பேணிப் பாதுகாக்க முடியும் என்றும் வரலாறு நமக்குக் கற்பிக்கிறது. ஆதிக்கத்திற்குட்படுத தப்பட்ட மக்களின் முக்கியத்துவம் வாய்ந்த பகுதியைக் கொன்றொழிப்பதன் மூலம் மட்டும் தான் அன்னிய ஆதிக்கம் நிலை நிறுத்தப்பட முடியும்.

உண்மையில், ஒரு நாட்டு மக்களை ஆதிக்கத்திற்குட் படுத்துவதற்காக ஆயுதங்களை எடுப்பது என்பது, எல்லாவற்றுக்கும் மேலாக, அம்மக்களின் பண்பாட்டு வாழ்கையை அழிப்பதற்கோ அல்லது குறைந்த பட்சம் வலிமையிழக்கச்

அரசியல் ரீதியான, பொருளாதார ரீதியான மற்றும் ஆயுதமேந்துகின்ற புதிய வடிவங்களை எடுக்கும்.

அன்னிய ஆதிக்கமானது, அது ஏகாதிபத்தியத்தின் ஆதிக்கமாக இருந்தாலும் சரி, அ) ஆதிக்கத்திற்கு உள்ளாக்கப்பட்ட நாட்டின் அனைத்து மக்களையும் அழித்து விடுவது, இதன் மூலம் பண்பாட்டுப் போராட்டத்திற்கான வாய்ப்புகளை அகற்றி விடுவது அல்லது, ஆ) ஆதிக்கத்திற்கு உள்ளாக்கப்பட்ட மக்களின் பண்பாட்டிற்குச் சேதம் ஏற்படாதவாறு தன்னைத்தானே நிலை நிறுத்திக் கொள்வது - அதாவது, பொருளாதார ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் இம்மக்களின் மீது செலுத்தப்படும் ஆதிக்கத்தையும் அவர்களுடைய பண்பாட்டு ஆளுமையையும் ஒத்திசைவானவையாக

**ஒரு குறிப்பிட்ட தருணத்தில், அழிக்க முடியாத பண்பாட்டுப் போராட்டம் அன்னிய ஆதிக்கத்தை எதிர்த்து முழுமூச்சுடன் போராடுவதற்காக அரசியல் ரீதியான, பொருளாதார ரீதியான மற்றும் ஆயுதமேந்துகின்ற புதிய வடிவங்களை எடுக்கும்.**



எடுத்துவிட்டான். ஏகாதிபத்தியம் மற்றும் அதன் ஆதிக்கவெறி ஆகியவற்றின் அவலமான வெளிப்பாடுகளாக அன்றும் இன்றும் விளங்குகின்ற நாஜிகள் அனைவரும் ஹிட்லரைப் போலவே சீரழிந்தவர்களாக இருந்தபோதிலும், அன்னிய ஆதிக்கத்திற்கு எதிரான போராட்டத்திற்கான காரணி என்ற விதத்தில் பண்பாட்டின் மதிப்பைப் பற்றி தெளிவான கருத்தைக் கொண்டிருந்தார்கள் என்பதையே இது காட்டுகிறது.

சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில், ஒரு நாட்டு மக்களின் மீது அன்னியன் தனது ஆதிக்கத்தைத் திணிப்பது மிகவும் சுலபமானது என்று வரலாறு நமக்குக் கற்பிக்கிறது. இந்த ஆதிக்கத்தின்

கெயவதற்கோ, முடமாக்குவதற்கோ ஆயுதங்களை எடுப்பதாகும், ஏனெனில், அம்மக்களின் ஒரு பகுதி எவ்வளவு காலத்துக்கு அன்னிய ஆதிக்கம் தனது நீடித்த ஆயுதங்களை எடுப்பதாகும். ஏனெனில், அம்மக்களின் ஒரு பகுதி எவ்வளவு காலத்துக்கு பண்பாட்டு வாழ்க்கையைக் கொண்டிருக்க முடியுமோ அவ்வளவு காலத்துக்கு அன்னிய ஆதிக்கம் தனது நீடித்த ஆயுளைப் பற்றி உறுதியாக நம்பிக்கைகொள்ள முடியாது. பிரச்சனைக்குரிய சமூகத்தின் பரிணாம வளர்ச்சியைத் தீர்மானிக்கக்கூடிய உள்ளார்ந்த மற்றும் புறக்காரணிகளைப் பொருத்து, ஒரு குறிப்பிட்ட தருணத்தில், அழிக்க முடியாத பண்பாட்டுப் போராட்டம் அன்னிய ஆதிக்கத்தை எதிர்த்து முழுமூச்சுடன் போராடுவதற்காக

மாற்றுவது ஆகிய இரு மாற்று வழிகளில் மட்டுமே நிலைகொண்டிருக்கிறது.

முதல் அனுமானமானது சுதேசி மக்களை இனப்படுகொலை செய்யவேண்டுமென்று கோருகிறதுளூ ஆகவே, அன்னிய ஆதிக்கத்தின் உள்ளடக்கமாகவும் அதன் நோக்கமாகவும் உள்ள அடிமைப்படுத்தப்பட்ட மக்களை ஒழித்து ஒரு வெற்றிடத்தை உருவாக்குகிறது. இரண்டாவது அனுமானமானது இன்று வரையில் வரலாற்றின் மூலம் உறுதிப்படுத்தப்படவில்லை. நடைமுறைப்பூர்வமான சாத்தியத் தன்மை இதற்குக் கிடையாது என்ற முடிவுக்கு நாம் வருவதற்கே மனித குலத்தின் விரிவான அனுபவம் நமக்குத் துணை புரிகிறது: ஆதிக்கத்திற்குள்ளாக்கப்பட்ட மக்களின் சமூக வளர்ச்சியின் மட்டம் எப்படிப்

பட்டதாக இருந்த போதிலும், அவர்கள் பொருளாதார மற்றும் அரசியல் ரீதியாக ஆதிக்கத்திற்கு உள்ளாக்கப்படுவதையும், அவர்களின் பண்பாட்டு ஆளுமை பேணிப் பாதுகாக்கப்படுவ தையும் ஒத்திசைவானவையாக மாற்றுவது சாத்தியமில்லை. பண்பாட்டுப் போராட்டத்தின் இரண்டக நிலை என்று அழைக்கப்படக்கூடிய இந்த இரு வழிகளிலிருந்தும் தப்பிப்பதற்காக ஏகாதிபத்தியக் உதாரணமாக, சுதேசி மக்களை முற்போக்கான விதத்தில் தன்வயப் படுத்துவதாகக் கருதப்படும் கொள்கை இப்படிப்பட்டது தான். இது பிரச்சினைக்குரிய மக்களின் பண்பாட்டை ஏறத்தாழ வன்முறையின் மூலம் மறுக்கும் முயற்சியே தவிர வேறல்ல. போர்ச்சுகல் உள்ளிட்ட பல்வேறு காலனியாதிக்க அரசுகளாலும் நடைமுறைப்படுத்தப்பட்ட இந்த கோட்பாடு அடைந்த சரியான தோல்வி அதன் மனிதத் தன்மையற்ற



காலனியாதிக்க ஒடுக்குமுறையானது சில கோட்பாடுகளை உருவாக்க முயற்சிக்கறது. அவையெல்லாம் இனவெறியின் கரடு முரடான உருவாக்கங்களாகவே உண்மையில் இருக்கின்றன. நடைமுறைப்படுத்தும் போது இக்கோட்பாடுகள் இன வெறிச் சர்வாதிகாரம் அல்லது இன வெறி ஜனநாயகத்தின் அடிப்படையில், உள்நாட்டுப் பூர்வீக மக்களின் மீதான நிரந்தரமான முற்றுகையாக மாறுகின்றன.

பண்புக்கு நிரூபணமாக இருக்கிறது. 'ஆப்பிரிக்கா என்று எதுவும் இல்லை" என்று சாலஸார் கூறுகின்ற, போர்ச்சுகீசிய உதாரணத்திலோ இது முட்டாள் தனத்தின் உச்சக்கட்டத்ததிற்கே சென்று விடுகிறது .

மனிதகுலத்திற்கெதிரான அனைத்துக் குற்றங்களையும் புரிவதன் மூலம், ஒரு இனவெறி பிடித்த சிறுபான்மை, தென்னாப்பிரிக்க மக்களை பொரு ளாதாரரீதியாகவும் அரசியல்தீதியாகவும் அடிமைப்படுத்துவதை அடிப்படை நோக்கமாகக் கொண்டு உருவாக்கப்பட்டு, பயன்படுத்தப்பட்டு, வளர்த்தெடுக்கப்பட்ட, இன ஒதுக்கதல் கொள்கையின் உதாரணத்தைப் போன்றதுதான் இது. மனிதகுலம் இது வரையில் கண்டவற்றிலேயே மிகப்பெரும் சித்திரவதை முகாம்களில் அடைத்து வைக்கப்பட்டு, வெறித்தனமாக ஒடுக்கப்படுகின்ற உழைக்கும் ஆப்பிரிக்க மக்களைக் கட்டுபாடின்றிச் சுரண்டும் வடிவமாக இன ஒதுக்கல் கொள்கை நடைமுறையில் மாறுகின்றது.

## தேசிய விடுதலை ஒரு பண்பாட்டுச் செயல்பாடு

அடிமைப்படுத்தப்பட்ட மக்களின் பண்பாட்டு யதார்த்தத்தை எதிர்கொண்ட நிலையில், அன்னிய ஆதிக்கம் செயல்பாட்டின் அளவை அறிந்து கொள்ள இந்த உதாரணங்கள் உதவுகின்றன. மனித சமூகங்களின் நடத்தையில் பணபாட்டுக் காரணிக்கும், பொருளா-தார (மற்றும் அரசியல்) காரணிக்கும் இடையிலான மூடிய, சார்புத் தன்மையுள்ள, பரஸ்பரப் பிணைப்பையும் இவை காட்டுகின்றன. உண்மையில், ஒரு திறந்த அல்லது மூடிய சமூகத்தின் வாழ்வின ஒவ்வொரு கணத்திலும், பொருளாதார மற்றும் அரசியல் நடவடிக்கைப் பற்றிய விழிப்புணர்வு, ஒருபுறம், தனிமனிதன் அல்லது மனித சமூகத்திற்கும் இயற்கைக்கும் இடையிலும், மறுபுறம் தனிநபர்களுக்கும் தனி நபர்களின் குழுக்களுக்கும் சமூகப்பிரிவுகள் அல்லது வர்க்கங்களுக்கும் இடையிலும் நிலவும் பல்வேறு வகைப்பட்ட உறவு-கள் ஆகியவற்றின் ஆற்றல் வாய்ந்த வெளிப்பாடுதான் பண்பாடாகும்.

கருத்தியல் தளத்திலோ அல்லது இலட்சிய ரீதியான தளத்திலோ, அடிமைப்படுத்தப்பட்ட அல்லது அடிமைப்படுத்தப்படப் போகின்ற சமூகத்தின் பொருளாயத மற்றும் வரலாற்று யதார்த்தத்தின் தீவிரமான வெளிப்பாடுதான் பண்பாடு என்ற உண்மையில்தான், அன்னிய ஆதிக்கத்திற்கெதிரான போராட்டத்தின் ஒரு அடிப்படைக் கூறு என்ற விதத்தில் பண்பாட்டின் மதிப்பு அடங்கியுள்ளது.

மனிதனுக்கும் அவனுடைய சூழலுக்கும் இடையிலும், பல்வேறு சமூகங்களுக்கு இடையிலும் நிலவும் உறவுகளின் பரிணாம வளர்ச்சியின் மீது பண்பாடு நேர்மறையான அல்லது எதிர் மறையான செல்வாக்கைச் செலுத்துவதால், பண்பாடானது ஒரே சமயத்தில் மக்களின் வரலாற்றின் விளைபொருளாகவும், வரலாற்றைத் தீர்மானிக்கூடியதாகவும் இருக்கிறது. அன்னிய ஆதிக்கத்திற்கான பல்வேறு முயற்சியகளும் அதேபோன்று சில தேசிய விடுதலை இயக்கங்களும் தோல்வியடைந்ததற்கு இந்த உண்மையைப் புறக்கணித்ததுதான் காரணமாகும்.

தேசிய விடுதலை என்பது என்ன என்று நாம் ஆராய்வோம். இந்த வரலாற்று நிகழ்வுப் போக்கை அதன் தற்காலச் சூழலில், அதாவது ஏகாதிபத்திய ஆதிக்கத்தை எதிர்கொண்ட நிலையில் தேசிய விடுதலையை நாம் காண்போம். ஏகாதிபத்திய ஒடுக்குமுறையானது அதற்கு முந்தைய அன்னிய ஆதிக்கத்தின் வகைகளிலிருந்தும் (பழங்குடி ரீதியான, இராணுவ - அதிகார வர்க்கரீதியான, நிலப்பிரபுத்துவரீதியான மற்றும் சுதந்திரமான போட்டி நிலவும் முதலாளித்துவக் காலத்தின் அன்னிய ஆதிக்கங்கள்) உருவத்திலும் உள்ளடக்கத்திலும் வித்தியாசமானதாகும்.

அனைத்து வகையான ஏகாதிபத்திய ஆதிக்கங்களுக்கும் பொதுவான முதன் மையான பண்பு என்னவென்றால், உற்பத்தி சக்திகளின் வளர்ச்சியினுடைய சுதந்திரமான தன்மையை வன்முறை சார்ந்த வழிமுறைகளை கொண்டு பிடுங்கிக் கொள்வதன் மூலம், அடிமைப்படுத்தப்பட்ட மக்களின் வரலாற்று வளர்ச்சியின் மட்டமும், இந்த உற்பத்தி சக்திகளைப் பயன்படுத்துவதற்கான சமூக அமைப்பும் (சொத்துரிமை அமைப்பு) உற்பத்தி முறையைத் தீர்மானிக்கின்றன. நமது பார்வையில், வர்க்கப் போராட்டத்தின் மூலமாகத் தீவிரமாக வெளிப்படும் முரண்பாடுகளைக் கொண்ட உற்பத்தி முறையானது எந்தவொரு மனித சமூகத்தின் வரலாற்றிலும் முதன்மையான காரணியாக விளங்குகின்றதுளூ உற்பத்தி சக்திகளின் வளர்ச்சி நிலையே வரலாற்றின் உண்மையான, நிரந்தரமான உந்து சக்தியாக விளங்குகிறது.

ஒவ்வொரு சமூகத்திலும், இயங்குகின்ற முழுமையாகக் கருதப்படுபின்ற ஒவ்வொரு மனிதக் குழுவிலும், உற்பத்தி சக்திகளின் வளர்ச்சி நிலையானது, இயற்கையை எதிர்கொண்ட நிலையில் சமூகமும் அதன் ஒவ்வொரு பிரிவும் அடைந்துள்ள வளர்ச்சியைக் காட்டுகிறது. இயற்கைக்கு விழிப்புணர்வோடு எதிர்வினை புரிவதற்கோ அல்லது இயற்கையின் மீது செயல்படுவதற்கோ அச்சமூகத்திற்கு உள்ள ஆற்றலையும் அது காட்டுகின்றது. மனிதனுக்கும் சமூகப் பயன்பாட்டு அமைப்பிற்கும் இடையிலான ஆற்றல் வாய்ந்த சமநிலைத் தன்மையை முடிவின்றித் தேடுவதன் விளைவை வரலாற்றின் ஒவ்வொரு கட்டத்திலும் பிரதிநிதித்துவப்படுத்தும் உற்பத்தி முறையானது, ஒரு சமூகமும் அதன் ஒவ்வொரு பிரிவும் உற்பத்தி முறையின் முன்பும் வரலாற்றின் முன்பும அடைந்துள்ள வளர்ச்சியைக் காட்டுகிறது. அத்துடன், சம்மந்தப்பட்ட சமூகத்தை உருவாக்குகின்ற பல்வேறு



கினி விடுதலைப் படையுடன்அமில்கார் கப்ரால்

அவனுடைய சூழலுக்கும் இடையில் நிலவுகின்ற, புறவயமாகவோ அல்லது அகவயமாகவோ வெளிப்படுகின்ற பொருளாயத உறவுகளின் வகையை உற்பத்தி சக்திகளின் வளர்ச்சி நிலை காட்டுவதுடன், அதன்மீது தாக்கமும் செலுத்துகிறது.

உற்பத்தி சக்திகளின் வளர்ச்சி நிலைக்கும், இவ்வுற்பத்தி சக்திகளின் அடிப்படைக்கூறுகள் அல்லது குழுக்களுக்குக்கிடையில் நிலவுகின்ற, புறவயமாகவோ அல்லது அக வயமாகவோ காட்டுவதுடன், அதன் மீது தாக்கமும் செலுத்துகிறது: மனிதனுக்கும் இயற்கைக்கும் இடையிலும், மனிதனுக்கும் அவனுடைய சூழலுக்கும் இடையிலும் நிலவும் உறவுகள் மற்றும் அவ்வுறவுகளின் வகைகள். இதைப் பற்றிப்

பேசுவது வரலாற்றைப் பற்றிப் பேசுவதாகும். அதேபோன்று, பண்பாட்டைப் பற்றிப் பேசுவதுமாகும்.

எனவே, பண்பாட்டு வெளிப்பாட்டின் கருத்தியல்ரீதியான அல்லது இலட்சிய ரீதியான பண்புகள் எவையாக இருந்தபோதிலும், பண்பாடு மக்களின் வரலாற்றில் இன்றியமையாத ஒரு அடிப்படைக் கூறாகும். ஒரு செடியில் பூ பூப்பதைப்போல வரலாற்றில் பண்பாடு உருவாகிறது. பண்பாடு வரலாற்றைப் போன்றது, அத்துடன் பண்பாடே வரலாறாகவும் இருக்கின்றன. எந்தச் சூழலில் பண்பாடு வளர்ச்சியடைகிறதோ அந்தச் சூழலின் பொருளாயத யதார்த்தம் என்னும் வளம் நிறைந்த மண்ணில்தான் பண்பாடு தனது வேர்களைப் பாய்ச்சுகின்றது. புறக்காரணிகளின் செல்வாக்கிற்கு ஆட்பட்ட சமூகத்தின் உள்ளார்ந்த இயல்பைப் பண்பாடு பிரதிபலிக்கிறது. ஒரு சமூகத்தின் பரிணாம வளர்ச்சிக்குக் காரணமான பொருளாதார, அரசியல் மற்றும் சமூக ரீதியான ஏற்றத்தாழ்வுகள் மற்றும் மோதல்களின் இயல்பையும் அளவையும் நாம் அறிவதற்கு வரலாறு நமக்குத் துணை புரிகிறது. உயிர்வாழ்வு மற்றும் முன்னேற்றம் ஆகியவற்றுக்கான தேடலில், அச் சமூகத்தின் பரிணாம வளர்ச்சியின் ஒவ்வொரு கட்டத்திலும் இந்த முரண்பாடுகளைத் தீர்ப்பதற்கு சமூக விழிப்புணர்வு எத்தகைய ஆற்றல் வாய்ந்த தொகுப்பாய்வுகளைச் செயதுள்ளது, நிறுவியுள்ளது என்று நாம் அறிவதற்குப் பண்பாடு நமக்குத் துணைபுரிகிறது.

செடியிலுள்ள பூவின் விடயத்தில் நடைபெறுவதைப் போலவே, வரலாற்றின் தொடர்ச்சியை உத்தரவாதப்படுத்துகின்ற வித்து உருவாவதும், உரம் பெறுவதும் பண்பாட்டில்தான். சம்மந்தப்பட்ட சமூகத்தின் பரிணாம வளர்ச்சிக்கும் முன்னேற்றத்துக்கும் உள்ள எதிர்கால வாய்ப்புகளை அந்த வித்து ஒரே சமயத்தில் உத்தரவாதப்படுத்தப்படுகிறது. எனவே அடிமைப்படுத்தப்பட்ட மக்களுக்கு அவர்களின் சொந்த வரலாற்று வளர்ச்சிப் போக்கை மறுக்கின்ற ஏகாதிபத்திய ஆதிக்கமானது தவிர்க்க இயலாத வகையில், அவர்களுடைய சொந்தப் பண்பாட்டு வளர்ச்சிப் போக்கையும் மறுக்கிறது என்று புரிந்து கொள்ளலாம். மற்ற அனைத்து அன்னிய ஆதிக்கங்களையும் போலவே, ஏகாதிபத்திய ஆதிக்கத்தின் நடைமுறையையும் தனது சொந்தப் பாதுகாப்பிற்காக, பண்பாட்டு ஒடுக்கு முறையையும், அடிமைப் படுத்தப்பட்ட மக்களின் பண்பாட்டின் இன்றியமையாத அடிப்படைக் கூறுகளை நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ அழிப்பதற்கான முயற்சியையும் மேற்கொள்ள வேண்டியிருப்பது ஏன் என்றும் புரிந்து கொள்ளலாம்.

விடுதலைப் போராட்டங்களின் வரலாற்றை ஆராயும்போது, பொதுவாக விடுதலைப் போராட்டங்களுக்கு முன்பே பண்பாட்டு வெளிப்பாடுகளின் எழுச்சிகள் நடைபெறுகின்றன என்பதையும் ஒடுக்குபவரின் பண்பாட்டை மறுக்கும் செயல்பாடாக, அடிமைப்படுத்தப்பட்ட மக்களின் பண்பாட்டு ஆளுமையை உறுதிப்படுத்துவதற்கான வெற்றிகரமான, அல்லது தோல்வியடையக் கூடிய முயற்சியாக முற்போக்கான விதத்தில் இவ்வெழுச்சிகள் உறுதிப்படுகின்றன என்பதையும் அறியலாம். மக்கள் அன்னிய ஆதிக்கத்தின் பொருளாதார, அரசியல் மற்றும் சமூகக் காரணிகளின் செல்வாக்கும் எப்படிப்பட்டவையாக இருந்தபோதிலும், விடுதலை இயக்கத்தின் தோற்றத்துக்கும் வளர்ச்சிக்கும் காரணமாக அமைகின்ற சவால் உணர்வின் வித்து பொதுவாகவே பண்பாட்டுக் காரணியில் இருப்பதை நாம் காண முடியும்.

நமது பார்வையில், சர்வதேசச் சட்டத்தால் ஏற்றுக் கொள்ளப்பட்ட கொள்கைகள் எவையாக இருந்தபோதிலும், ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும் தங்களுடைய சொந்த வரலாற்றின் மீது கொண்டுள்ள பிரிக்க முடியாத உரிமையில்தான் தேசிய விடுதலையின் அடிப்படை அமைந்திருக்கிறது. எனவே ஏகாதிபத்திய ஆதிக்கத்தால் பிடுங்கப்பட்ட, தேசிய உற்பத்திசக்திகளின் வளர்ச்சியினுடைய விடுதலை என்னும் இந்த உரிமையை மீட்பதுதான் தேசிய விடுதலையின் நோக்கமாகும். எனவே தேசிய உற்பத்தி சக்திகள் அனைத்துவிதமான அன்னிய ஆதிக்கங்களிலிருந்தும் முழுமையாக விடுவிக்கப்படும் போதுதான் தேசிய விடுதலை என்பது உருவாக முடியும். உற்பத்தி சக்திகளின் விடுதலையும், இதன் தொடர்ச்சியாக, விடுவிக்கப்பட்ட மக்களின் பரிணாம வளர்ச்சிக்கு மிகவும் பொருத்தமான உற்பத்தி முறையைச் சுதந்திரமாகத் தீர்மானிப்பதற்கான திறமையின் விடுதலையும், சம்மந்தப்பட்ட சமூகத்திற்கு முன்னேற்றத்தை அடைவதற்கான அனைத்து ஆற்றல்களையும் திருப்பிக் கொடுப்பதன் மூலம், அச்சமூகத்தின் பண்பாட்டு வளர்ச்சிப்போக்கிற்குப் புதிய எதிர் கால வாய்ப்புகளைத் தவிர்க்க இயலாத வகையில் வழங்குகின்றன.

ஒடுக்கபவரின் பண்பாடும் பிற பண்பாடுகளும் வழங்கிய நேர்மையான பங்களிப்புகளின் முக்கியத்துவத்தைக் குறைத்து மதிப்பிட்டு விடாமல், தங்களுடைய சொந்தப் பண்பாட்டின் மேல் நோக்கிய பாதைக்குத் திரும்பாவிட்டால், அன்னிய ஆதிக்கத்திலிருந்து விடுதலையடைய முடியாது. அவர்களுடைய சொந்தப் பண்பாடானது அன்னியப் பண்பாடுகளுக்கு அடிமையயாவது போன்ற எந்தவொரு தீய

**மக்களின் பண்பாட்டின் பிரதிநிதியாகவும் பாதுகாவலனாகவும் விளங்கும் விடுதலை இயக்கம், தான் பிரதிநிதித்துவப்படுத்தும் சமூகத்தின் பொருளாதார நிலைமைகள் எப்படிப்பட்டவையாக இருந்தபோதிலும், பண்பாட்டை உருவாக்குவதும் பேணிப்பாதுகாப்பதும் சமூகம்தான் என்ற உண்மையைக் கண்டிப்பாக நினைவிற்கொள்ளவேண்டும்.**

பாதிப்பையும் அப்பண்பாடு நிராகரிக்கிறது. ஆகவே, பண்பாட்டு ஒடுக்குமுறையை நடைமுறைப்படுத்த வேண்டிய முக்கியமான தேவை ஏகாதிபத்திய ஆதிக்கத்திற்கு இருக்கிறதெனில், தேசிய விடுதலையானதுதவிர்க்க இயலாத வகையில் ஒரு பண்பாட்டுச் செயல்பாடாகும்.

## பண்பாட்டின் வர்க்கத்தன்மை

இதுவரையிலும் கூறியவற்றின் அடிப்படையில், போராடுகின்ற மக்களின் பண்பாட்டின் ஒன்றுதிரண்ட அரசியல் வெளிப்பாடு தான் விடுதலை இயக்கம் என்று நாம் கருதலாம். எனவே, பொருளாதார வளர்ச்சி நிலை எப்படிப்பட்டதாக இருந்தபோதிலும், அவ்விடுதலை இயக்கத்தின் தலைமையானது போராட்டச் சூழலில் பண்பாட்டின் மதிப்பைப்பற்றித் தெளிவாக அறிந்திருக்க வேண்டும்ளூ தங்களுடைய மக்களின் பண்பாட்டைப்பற்றிய ஆழ்ந்த அறிவைக் கொண்டிருக்க வேண்டும்.

ஒவ்வொரு நாட்டு மக்களுக்கும் அவர்களுக்கேயுரிய பண்பாடு இருக்கிறது என்று கூறுவது இப்போது சாதாரண வி'யமாகி விட்டது. மக்களைத் தொடர்ச்சியாக அடிமைப்படுத்துவதற்கான முயற்சியில், சலுகைப்பெற்ற மக்களின் அல்லது நாடுகளின் இயற்பண்பாகப் பண்பாடு கருதப்பட்ட காலம் மறைந்துவிட்டது. அப்போதெல்லாம் பண்பாடு ஒருவ ரின் நிறத்துடனோ, அல்லது ஒருவ ரின் கண்களின் வடிவத்துடனோ சேர்த்துக் குழப்பப்படாவிட்டாலும்கூட, மோசமான நம்பிக்கையின், அறியாமையின் விளைவாக, தொழில்நுட்பத் திறமையுடன் சேர்த்துக் குழப்பப்பட்டது. மக்களின் பண்பாட்டின் பிரதிநிதியாகவும் பாதுகா வலனாகவும் விளங்கும் விடுதலை இயக்கம், தான் பிரதிநிதித்துவப்படுத்தும் சமூகத்தின் பொருளாதார நிலைமைகள் எப்படிப்பட்டவையாக இருந்தபோதிலும், பண்பாட்டை உருவாக்குவதும் பேணிப்பாதுகாப்பதும் சமூகம்தான் என்ற உண்மையைக் கண்டிப்பாக நினைவிற்கொள்ளவேண்டும். அத்துடன், சமூகத்தின் ஒரு பிரிவுக்கோ அல்லது சில பிரிவுகளுக்கோ மட்டும் இயற்பண்பாக விளங்க முடியாததாகிய பண்பாட்டின் மக்கட்பண்பை, வெகுஜனப் பண்பை விடுதலை இயக்கம் கண்டிப்பாகப் புரிந்துகொள்ள வேண்டும். ஒவ்வொரு விடுதலை இயக்கமும் அறிந்திருக்க வேண்டிய, சமூகக் கட்டமைப்பைப் பகுப்பாய்வு செய்யும் முறையில், போராட்டத்தின் நிர்ப்பந்தங்களின் விளைவாக, ஒவ்வொரு சமூகப் பிரிவின் பண்பாட்டுத் தன்மைகளும் முக்கியத்துவம் வாய்ந்த இடத்தைப் பெறுகின்றன. ஏனெனில், பண்பாடு மக்கட்பண்பைப் பெற்றிருந்த போதிலும், அது சமச்சீரானதல்லளூ சமூகத்தின் அனைத்துப் பிரிவுகளிலும் அது சமச்சீராக வளர்ச்சியடைவதுமில்லை. போராட்டத்தின் மீதான ஒவ்வொரு சமூகதத்தின் அணுகுமுறையும் அப்பிரிவின் பொருளாதார நலன்களால் தீர்மானிக்கப்படுகிறது. ஆனால் பெரும் அளவுக்குத் தனது பண்பாட்டின் செல்வாக்கிற்கும் உள்ளாகிறது. ஒரே சமூக - பொருளாதாரப் பிரிவிற்குள் உள்ள தனிநபர்கள் விடுதலை இயக்கத்தைப் பொருத்தவரையில் வெவ்வேறு விதமாக நடந்து கொள்வதற்கு, பண்பாட்டு வளர்ச்சி நிலைகளிலுள்ள வேறுபாடுகள்தான் காரணம் என்றும்கூட நாம் ஏற்றுக்கொள்ளலாம். இந்தக் கட்டத்தில் தான் ஒவ்வொரு தனிநபருக்கும் முழுமையான முக்கியத்துவம் வாய்ந்த வி'யமாகப் பண்பாடு மாறுகிறது: தனது சூழலைப் புரிந்து கொள்தலும் அதனுடன் பிணைந்திருத்தலும்ளூ சமூகத்தின் அடிப்படைப் பிரச்சினை களுடனும் விருப்பங்களுடனும் தன்னை அடையாளப்படுத்திக் கொள்தல் முன்னேற்றத்தின் திசை- வழியில் மாற்றத்திற்கான சாத்தியத் தன்மையை ஏற்றுக் கொள்தல்.

எமது நாட்டின் குறிப்பான நிலைமைகளில் - ஆப்பிரிககாவின் குறிப்பான நிலைமைகளிலும்கூட - பண்பாட்டின் செங்குத்தான மற்றும் படுகிடையான வளர்ச்சி நிலைகள் மிகவும் சிக்கலானவையாகும். உண்மையில், கிராமங்களிலிருந்து நகரங்கள் வரையில், ஒரு இனக்குழுவிலிருந்து இன்னொரு இனக்குழு வரையில், விவசாயியிடமிருந்து கைவினைஞன் வரையில் அல்லது தன்வயமாக்கப்பட்ட சுதேசி அறிவுஜீவி வரையில், ஒரு சமூக வர்க்கத்திலிருந்து இன்னொரு சமூக வர்க்கம் வரையில், நாம் ஏற்கனவே கூறியதைப் போல், ஒரே சமூகப் பிரிவைச் சேர்ந்த ஒரு தனிநபரிடமிருந்து இன்னொரு தனிநபர் வரையிலும்கூட, பண்பாட்டின் அளவுரீதியான மற்றும் பண்புரீதியானவளர்ச்சி நிலையில் முக்கியத்துவம் வாய்ந்த வேறுபாடுகள் நிலவுகின்றன. இந்த உண்மையைக் கணக்கிலெடுத்துக் கொள்ள வேண்டியது விடுதலை இயக்கங்களின் முதன்மையான முக்கியத்துவம் வாய்ந்த பிரச்சினையாகும்.

**மக்களின் ஒரு கணிசமான பகுதியாகிய நகர்ப்புற அல்லது விவசாயக் 'குட்டி முதலாளித்துவ வர்க்கம்" காலனீயப்படுத்துபவரின் மனோபாவத்தைத் தன்வயமாக்கிக் கொண்டு, தனது மக்களைவிட தான் பண்பாட்டு ரீதியாக மேலான வர்க்கம் என்று கருதுவதுடன், மக்களின் பண்பாட்டு மதிப்புக்களை அது புறக்கணிக்கிறது அல்லது இழிவாகக் கருதுகிறது.**

பாலண்டே சமூகத்தைப் போன்ற படுகிடையான கட்டமைப்புடைய சமூகங்களில், பண்பாட்டு வளர்ச்சி நிலை ஏறத்தாழ சீரானதாகும்ளூ தனி நபர்களின் பண்புகள், வயது வித்தியாசம் ஆகியவற்றுடன் மட்டுதான் வேறுபாடுகள் தொடர்புகொண்டுள்ளன. ஃப்யூலா சமூகத்தைப் போன்ற செங்குத்தான கட்டமைப்புயை சமூகங்களில் சமூகப் பிரமிடின் மேலிருந்து கீழ்வரையிலும் பல முக்கியமான வேறுபாடுகள் நிலவுகின்றன. பண்பாட்டுக் காரணிக்கும் பொருளாதாரக் காரணிக்கும் இடையிலான நெருக்கமான பிணைப்பை இது மீண்டும்

ஒருமுறை எடுத்துக் காட்டுவதுடன், விடுதலை இயக்கத்தைப் பொருத்த வரையில் இவ்விரு இனக்குழுக்களின் முழுமையான அல்லது ஓரளவேயான நடத்தை வேறுபாடுகளையும காட்டுகிறது.

சமூக மற்றும் இனக்குழு ரீதியான பிரிவு-கள் அதிகமாக இருந்தால், விடுதலை இயக்கத்தின் பண்பாட்டின் பாத்திரத்தை மதிப்பிடுவது சிக்கலானதாக இருக்கும் என்பது உண்மையாகும். ஒரு சமூகப் பிரிவு அதன் தொடக்க நிலையில் இருந்தாலும்,அல்லது தொடக்க நிலையில் இருப்பது போலத் தோன்றினாலும் கூட, விடுத லைப் போராட்டத்தின் வளர்ச்சியில் பண்பாட்டின் வர்க்கத்தன்மையின் மூலமாகவோ, ஒரு பகுதி மக்களின் பண்பாட்டு அந்நியமாதலைத் தூண்டி, வளர்க்கிறார் என்பதைக் காலனியாதிக்க ஒடுக்குமுறை அனுபவம் காட்டுகிறது. சமூகத்திற்குள் பிரிவினையை ஏற்படுத்துகின்ற அல்லது பிரிவினையை ஆழப்படுத்துகின்ற விளைவாக, மக்களின் ஒரு கணி சமான பகுதியாகிய நகர்ப்புற அல்லது விவசாயக் 'குட்டி முதலாளித்துவ வர்க்கம்' காலனீயப்படுத்துபவரின் மனோபாவத்தைத் தன்வயமாக்கிக் கொண்டு, தனது மக்களைவிட தான் பண்பாட்டு ரீதியாக மேலான வர்க்கம் என்று கருதுவதுடன், மக்களின் பண்பாட்டு மதிப்புக்களை அது புறக்கணிக்கிறது அல்லது இழிவாகக் கருதுகிறது.



தீர்மானகரமான முக்கியத்துவத்தைக் கவனிக்காமலிருந்துவிடக்கூடாது என்பது முக்கியமாகும்.

காலனீயப்படுத்துபவர் சுரண்டலை நீடிக்கச் செய்வதற்கான முயற்சியில், காலனீயப்படுத்தப்பட்ட மக்களின் பண்பாட்டு வாழ்க்கையை ஒடுக்குவதற்கான முழு அமைப்பையும் உருவாக்குவதுடன் மட்டுமின்றி, உள்நாட்டு மக்களைத் தன்வயமாக்குவதன் மூலமாகவோ அல்லது சுதேசி மேட்டுக்குடியினருக்கும் பெரும்பாலான மக்களுக்கும் இடையில் சமூக ஏற்றத்தாழ்வை உருவாக்குவதன் தன்வயமாக்கப்பட்ட அல்லது அந்நியமாக்கப்பட்ட குழுவின் சமூகச் சலுகைகள் அதிகப்படுத்தப்பட்ட அறிவுஜீவிகளுக்கேயுரிய இந்தச் சூழ்நிலையானது உறுதியான-தாக ஆக்கப்படுகிறது. விடுதலை இயக்கங்களைப் பொருத்தவரையில். இந்தக் குழுவிலுள்ள தனிநபர்களின் நடத்தையின் மீது அது நேரடியான தாக்கத்தை ஏற்படுத்துக்கிறது. எனவே ஒரு மனரீதியான மாற்றம் - அதாவது மனோபாவங்களில் ஏற்படும் மாற்றம், விடுதலை இயக்கத்ததில் மக்கள் உண்மையாக இணைவதற்கு மிகவும் அவசியமானதாக இருக்கிறது. அத்தகைய மனமாற்றம் - நம்மைப்பொருத்தரலையில் மறு ஆப்பிரிக்கமயமாதல் - போராட்டத்திற்கு முன்பு ஏற்படலாம். ஆனால் போராட்டத்தினூடாக, மக்களுடன் கொண்டுள்ள அன்றாடத் தொடர்பின் மூலமாகவும், போராட்டம் கோருகின்ற தியாகங்களைப் புரிவதன் மூலமாகவும் மட்டும்தான் இந்த மறு ஆப்பிரிக்கமயமாதல் என்னும் மனமாற்றம் முழுமையடைகிறது.

அரசியல்ரீதியான விடுதலையின் எதிர்கால வாய்ப்பை எதிர்கொண்ட நிலையில், விடுதலை இயக்கம் பொதுவாகவே வேதனையோடு அனுபவிக்கின்ற பேராசை மற்றும் சந்தர்ப்பவாதம் ஆகியவை கூட மனமாற்றமடையாத தனிநபர்களையும் போராட்டத்தை நோக்கி ஈர்க்கக்கூடும் என்ற உண்மையயை நாம் கணடிப்பாகக் கணக்கிலெடுத்துக் கொள்ளவேண்டும். மனமாற்றமடையாத இத்தனிநபர்கள் தங்களுடைய கல்வியின் மட்டம், தங்களுடைய விஞ்ஞானத் -தொழில்நுட்ப அறிவு ஆகியவற்றின் அடிக்கடையில், தங்களுடைய வர்க்கத்தின் பண்பாட்டு ரீதியான தப்பெண்ணங்களில் எதையும் இழக்காமலேகூட, விடுதலை இயக்கத்தின் மிகவும் உயர்ந்த இடங்களை அடையக்கூடும். எனவே பண்பாட்டுத் தளத்திலும் அரசியல் தளத்திலும் எச்சரிக்கையாக இருக்க வேண்டுமென்பது இன்றியமையாததாகும். ஏனெனில், விடுதலை இயக்கங்கள் என்னும் நிகழ்வுப் போக்கின் வளர்ச்சிக்கான குறிப்பான, மிகவும் சிக்கலான சூழ்நிலைகளில் மின்னுவதெல்லாம் பொன்னாக இருக்கவேண்டிய அவசியமில்லை: மிகவும் புகழ் பெற்ற அரசியல் தலைவர்களே கூட பண்பாட்டு ரீதியாக அந்நியமானவர்களாக இருக்கலாம்.

கிராமப்புறச் சூழலில் வாழும், சலுகை பெற்ற குழுக்களின் நடத்தையில், குறிப்பாக செங்குத்தான சமூகக் கட்டமைப்பைக் கொண்ட இனக்குழுக்கள் வாழும் பகுதிகளில், தன்வயமாக்கல் அல்லது பண்பாட்டுரீதியான அந்நியமாதல் கொஞ்சங்கூட இல்லாத பகுதிகளில் பண்பாட்டின் வர்க்கத்தன்மையைக் கூடுதலாகவே காண முடியும். ஃப்பூலா ஆளும்வர்க்கத்தைப் பொருத்தவரையிலும் இதுதான் நிலைமையாகும். காலனியாதிகக் ஒடுக்குமுறையின்

கீழ் இந்த வர்க்கத்தின் (மரபுரீதியான தலைவர்கள், மேட்டுக்குடிக் குடும்பங்கள். மதத் தலைவர்கள்) அரசியல் அதிகாரமானது வெறும் பெயரள விலானதாக இருந்தது. உண்மையான அதிகாரம் காலனீய ஆட்சியாளர்கள் வசம் இருந்ததுடன் அவர்களால் செயல்படுத்தப்பட்டது என்பதை மக்கள் நன்றாக அறிந்திருந்தார்கள். எனினும் சாரத்தில் ஆளும் வர்க்கம் மக்களின் மீதான தனது பண்பாட்டு அதிகாரத்தைப் பேணிப் பாதுகாப்பதுடன், மிகவும் முக்கியமான அரசியல் செல்வாக்கையும் கொண்டிருக்கிறது.

இந்த யதார்த்தத்தை அறிந்துள்ள காலனியாதிக்கம் மக்களின் முக்கியமான பண்பாட்டு வெளிப்பாடுகளை வேரோடு பிடுங்கியெறிவதுடன், உயர்வான நிலையில் உள்ள ஆளும் வர்க்கத்தின் பண்பாட்டின் செல்வாக்கையும் கௌரவத்தையும் ஆதரிக்கிறது, பாதுகாக்கிறது. தனது நம்பிக்கைக்குரியவர்களை அது சமூகத் தலைவர்களாக நியமிக்கிறது. அவர்களைப் பெரும்பாலும் மக்கள் ஏற்றுக்கொள்கிறார்கள். அச்சமூகத் தலைவர்களுக்கு, அவர்களின் மூத்த குழந்தைகளுக்குக் கல்வியளித்தல் உட்படப் பல சலுகைகளைக் காலனியாதிக்கம் வழங்குகிறது. சமூகத் தலைவர்களே இல்லாத இடங்களிலும்கூட அது தலைவர்களை உருவாக்கிறது. மதத் தலைவர்களுடன் ஆழமான உறவுகளை உருவாக்கி வளர்க்கிறது. மசூதிகளைக் கட்டுகிறது. மெக்காவுக்குப் பயணங்களை ஏற்பாடு செய்கிறது. எல்லாவற்றுக்கும் மேலாக, காலனியாதிக்க நிர்வாகத்தின் அடக்குமுறை இயந்திரங்களின் துணையுடன் அது ஆளும்வர்க்கத்தின் பொருளாதார, சமூகச் சலுகைகளை உறுதிப்படுத்தி. மக்களைவிட உயர்ந்த இடத்தில் அவர்களை வைக்கிறது. இந்த ஆளும் வர்க்கங்களிலிருந்தும் கூட சில தனிநபர்களோ அல்லது தனிநபர்களின் குழுக்களோ விடுதலை இயக்கத்தில் இணையக் கூடும். தன்வயமாக்கப்பட்ட குட்டி முதலாளித்துவ வர்க்கத்தைப் போலன்றி குறைவான எண்ணிக்கையில் தான் இவர்கள் என்றாலும் அவ்வாறு இணைவதற்கான வாய்ப்பே இல்லை என்று கூறமுடியாது. போராட்டத்தின் தொடக்கத்திலோ அல்லது இடையி-லோ பல சமூகத்தைவர்களும் மதத் தலைவர்களும் அதில் இணைந்து கொண்டு, விடுதலை என்னும் இலட்சியத்திற்கு உற்சாகத்துடன் பங்களிப்பார்கள். ஆனால் இவ்வி'யத்திலும் எச்சரிக்கையுணர்வு இன்றியமையாதது: இந்தச் சமூகப் பிரிவைச் சேர்ந்த தனிநபர்கள் பொ துவாகத் தங்களுடைய வர்க்கத்தின் பண்பாட்டு ரீதியான தப்பபெண்ணங்களை விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டு, தங்களுடைய சொந்த வர்க்கத்தின் மீதான காலனியாதிக்க ஒடுக்குமுறையை அகற்றுவதற்கு மக்களின் தியாகங்களைப் பயன்படுத்துவதற்கான பயனுள்ள வழிமுறைகளை மட்டுமே விடுதலை இயக்கத்தில் காண்பார்கள்ளூ இதன் மூலம் மக்களின் மீதான தங்களுடைய பண்பாட்டு, அரசியல் ஆதிக்கத்தை மீண்டும் முழுமையாக நிலைநாட்ட விழைவார்கள். ஏகாதிபத்திய காலனியாதிக்க ஒடுக்குமுறைக்கு எதிரான போராட்டத்தின் பொதுவான சூழலி லும், நாம் ஏற்கனவே குறிப்பிட்ட குறிப்பான சூழல்களிலும், சுதந்திரமான தொழில்புரியும் தன்வயமாக்கப்பட்ட அறிவுஜீவிகள் மற்றும் சில மூத்த சிவி ல் ஊழியர்களும் கிராமப்புறங்களிலுள்ள ஆளும் வர்க்கத்தின் பிரதிநிதிகளில் குறிப்பிட்ட சிலரும் ஒடுக்குபவரின் மிகவும் விசுவாசமாக கூட்டாளிகளாக இருக்கிறார்கள் என்பதைக் காணமுடியும். விடுதலை இயக்கத்தைப் பொருத்தளவில் அரசியல் தேர்வு என்னும் பிரச்சினையின் பண்பாடும், பண்பாட்டுத்தப் பெண்ணங்களும் நேர்மையாகவோ அல்லது எதிர் மறையாகவோ வகிக்கும் செல்வாக்கின் அளவு என்ன எனபதை இந்த உண்மை காட்டுகிறது. பல்வேறு சமூகப்பிரிவுகளின் நடத்தையில் வர்க்கக் காரணியின் இந்த செல்வாக்கு, மேலாதிக்கம் ஆகியவற்றின் வரம்புகளையும் இது காட்டுகிறது. பண்பாட்டு ரீதியான முழுமையான அந்நியமாதலுக்கு ஆளான மூத்த சிவில் ஊழியரோ அல்லது தன்வயமாக்கப்பட்ட அறிவுஜீவியோ அரசியல் தேர்வின் வி'யத்தில் சமூக அல்லது பண்பாட்டின் செல்வாக்கையும் அனுபவித்தவர்களல்ல. இது ஏன் நிகழ்கிறது? இவ்விரு சமூகப்பிரிவுகளும் பண்பாட்டுத் தன்மையுள்ள அனைத்துக் காரணிகளுக்கும் மேலாகவும், மக்களின் விருப்பங்களுக்கு எதிராகவும் தங்யளுடைய சொந்தப் பொரு ளாதார மற்றும் சமூகச் சலுகைகளை, தங்களுடைய வர்க்க நலன்களை முன்னிறுத்துகிறார்கள் என்பதால் தான் இது நிகழ்கிறது. விடுதலை இயக்கம் இந்த உண்மையைப் புறக்கணிக்குமானால் போராட்டத்தின் பொருளாதார. அரசியல், சமூக மற்றும் பண்பாட்டு நோக்கங்களுக்குத்



துரோகம் இழைக்கப்படுவதைத் தவிர்க்க முடிவதில்லை.

## தேசியப் பண்பாட்டின வரையறையை நோக்கி

சலுகை பெற்ற வர்க்கங்கள் போராட்டத்திற்கு வழங்கக்கூடிய நேர்மறையான பங்களிப்புகளைக் குறைத்து மதிப்பிடாமல், விடுதலை இயக்கமானது அரசியல் தளத்தில் வெகுஜனங்களிடம் செயல்படுவதைப் போலவே, பண்பாட்டுத் தளத்திலும், தன்னுடைய செயல்பாடுகளை வெகுஜனப் பண்பாட்டின் அடித்தளத்தின்மீதே மேற்கொள்ள வேண்டும் -நாட்டின் பண்பாட்டு வளர்ச்சி நிலைகளின் பன்முகத் தன்மை எப்படிப்பட்டதாக இருந்தாலும் வேண்டும். அப்பபோதுதான் தேசியப் பண்பாடு என்பதன் முற்போக்கான வரையறையின் முக்கியமான பகுதியைத் தீர்மானிக்க முடியும்.

விடுதலை இயக்கத்தின் வளர்ச்சி என்னும் எல்லைக்குள் தனக்குக் கொடுக்கப்பட்டுள்ள முக்கியமான பாத்திரத்தைப் பண்பாடு வகிக்க வேண்டுமானால், நன்கு வரையறுக்கப்பட்ட ஒவ்வொரு சமூகக் குழுவினுடைய, ஒவ்வொரு பிரிவி-னுடைய நேர்மறையான பண்பாட்டு மதிப்புக்களைப் பாதுகாப்பதற்கும், போராட்ட வெள்ளத்தில் இந்த மதிப்புகள் சங்கமமாவதைச் சாத்தியமாக்குவதற்கும், இம்மதிப்புகளுக்குத் தேசிய பரிமாணம் என்னும் புதிய பரிமாணத்தை வழங்குதற்கும் விடுதலை இயக்கம் திறன் பெற்றிருக்க யதார்த்த நிலைமையுடனும் மக்களின் அடிப்படையான பிரச்சினைகள் மற்றும் விருப்பங்களுடனும் விடுதலை இயக்கம் தன்னை முழுமையாக அடையாளப்படுத்திக் கொள்வதன் மூலமும், மறுபுறம் போராட்டத்தில் பங்கெடுத்துக்கொள்ளும் பல்வேறு சமூகப் பிரிவுகள் முற்போக்கான விதத்தில் தங்களின் பண்பாட்டு அடையாளங்களை ஒத்திசைவுக்குள்ளாக்குதல், முரண் பாடுகளைத் தீர்த்தல், பொதுவான நோக்கங்களை வரையறுத்தல் போன்ற பணிகளை நிறைவேற்ற வேண்டும். இத்தகைய நோக்கங்களைப் பற்றிய விழிப்புணர்வைப் பெரும்பாலான மக்கள் பெற்று விட்டால், அனைத்து விதமான கடினமான நிலைமைக ளையும் எதிர்கொள்ளும் நிலையில், அனைத்து விதமான தியாகங்களையும் புரிய வேண்டிய நிலையில் அம்மக்கள் காட்டும் உறுதிப்பாட்டில் இந்த விழிப்புணர்வு வெளிப்படுமானால், அரசி யல் ரீதியாகவும் தார்மீகரீதியாகவும் இது மாபெரும் வெற்றியாக விளங்கும். விடுதலை இயக்கத்தின் அடுத்தக்கட்ட வளர்ச்சிக்கும் வெற்றிக்கும் அவசியமான தீர்மானகரமான பண்பாட்டுச் சாதனையாகவும் இவ்வெற்றி விளங்கும்.

**போராட்டத்தில் பங்கெடுத்துக்கொள்ளும் பல்வேறு சமூகப் பிரிவுகள் முற்போக்கான விதத்தில் தங்களின் பண்பாட்டு அடையாளங்களை ஒத்திசைவுக்குள்ளாக்குதல், முரண்பாடுகளைத் தீர்த்தல், பொதுவான நோக்கங்களை வரையறுத்தல் போன்ற பணிகளை நிறைவேற்ற வேண்டும்.**

சரி. மறு - ஆப்பிரிக்க மயமாகிவிட்ட அல்லது பண்பாட்டு மனமாற்றமடையும்படி தள்ளப்பட்ட புரட்சிகரமான தேசிய வாதக் குட்டி முதலாளித்துவ வர்க்கம் உள்ளிட்ட நகர்ப்புற மற்றும் கிராமப்புற உழைக்கும் மக்களின் பண்பாட்டின் அடிப்படையில் மட்டும் தான் விடுதலை இயக்கதத்தின் முதன்மைக் கட்டமான, காலனியாதிக்க ஒடுக்குமுறைக்கெதிரான பண்பாட்டுப் போராட்டத்தை உறுதியாக மேற்கொள்ள முடியும். அடித்தளமான இந்தப் பண்பாட்டுக் காட்சியின் சிக்கலான தன்மை எப்படிப்பட்டதாக இருந்தபோதிலும், அதனுள்ளே இருக்கும் இன்றியமையாதவற்றை இரண்டாம் பட்சமானவற்றிடமிருந்தும், நேர்மறையானவற்றை எதிமறைய ானவற்றிடமிருந்தும், முற்போக்கான வற்றைப் பிற்போக்கானவற்றிடமிருந்து வேறு படுத்திக்காணும் ஆற்றல் மிக்கதாகத் தேசிய இயக்கம் விளங்க வேண்டும். இத்தகைய அவசியத்தை எதிர்கொண்ட நிலையில், விடுதலைப் போராட்டமானது, எல்லாவற்றுக்கும் மேலாக, மக்களின் பண்பாட்டு மதிப்புகள் உயிர்வாழ்வதற்காகவும் பாதுகாக்கப்படுவதற்காகவும் நடைபெறும் போராட்டமாகவும், தேசிய எல்லைக்குள் இந்த மதிப்புகளின் ஒத்திசைவு மற்றும் வளர்ச்சி ஆகியவற்றுக்கான போராட்டமாகவும் விளங்குகிறது.

மக்களுக்கும், அவர்களின் பிரதிநிதியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கும் விடுதலை இயக்கத்துக்கும் இடையிலான அரசியல் ரீதியான மற்றும் தார்மீகரீதியான ஒற்றுமையானது, போராட்டத்தில் தீர்மானகரமான பாத்திரம் வகிக்கும் சமூகப்பிரிவுகளின் பண்பாட்டு ஒற்றுமை நிறவேறப்போவதை மறை முகமாக உணர்த்துகிறது. இத்தகைய ஒற்றுமையானது, ஒருபுறம் சூழலின்

## ஒருமைப்பாடு மற்றும் பண்பாட்டு முன்னேற்றத்தின் கருவியாக ஆயுதப் போராட்டம்

காலனியாதிக்க ஒடுக்குமுறையாளரின் அடக்குமுறைகளுக்குப்பதிலளிப்பதற்காக மேற்கொள்ளப்பட்ட, ஆயுதமேந்திய விடுதலைப் போராட்டமானது, விடுதலை இயக்கத்திற்குத் தலைமை தாங்கும் பிரிவினர் மற்றும் போராட்டத்தில் ஈடுபடும் பல்வேறு சமூகப் பிரிவுகள் ஆகியவற்றின் பண்பாட்டு வளர்ச்சி நிலையை மேம்படுத்துவதற்கான, துன்பங்கள் நிறைந்த ஆனால் திறன் வாய்ந்த கருவி யாக மாறுகிறது.

அறிவுஜீவிகள், ஊழியர்கள் போன்ற, குட்டி முதலாளித்து வர்க்கப் பின்னணியிலிருந்து வந்தவர்களையும், கூலித் தொழிலாளர்கள், வாகன

ஓட்டுனர்கள், பொதுவாக சம்பளம் பெறும் தொழிலாளர்கள் போன்ற நகர்ப்புறத் தொழிலாளி வர்க்கப் பின்னணியிலிருந்து வந்தவர்களையும் கொண்ட விடுதலை இயக்கத் தலைமையானது கிராமப்புற மக்களின் நடுவில், பல்வேறு விவசாய வர்க்கப் பிரிவினருடன் தினமும் வாழவேண்டியிருப்பதால் அவர்கள் மக்களை நன்றாக அறிந்து கொள்கிறார்கள். அவர்கள் அம்மக்களின் தத்துவரீதியான அரசியல் ரீதியான, கலா ரீதியான, சமூகரீதியான மற்றும் தார் மீக ரீதியான பண்பாட்டு மதிப்புக்கள் என்னும் செல்வத்தின் வேர்களைக் கண்டறிகிறார். கள்ளூ நாட்டின் பொருளாதார யதார்த்தங்களைப் பற்றிய தெளிவான அறிவைப் பெறுகிறார். கள்ளூ மக்களின் சிரமங்கள், துயரங்கள் மற்றும் விருப்பங்பளைப் பற்றிய தெளிவான அறிவையும் பெறுகிறார்கள். நேற்று வரையிலும் காலனீயப்படுத்துவர்களாலும் சில தேசியவாதிகளாலும் கூட, போராடும் திறன் அற்றவர்களாகக் கருதப்பட்ட மக்கள், நேற்று வரையில் இழிவாகக் கருதப்படாவிட்டாலும் மறக்கப்பட்டிருந்த மக்கள், உண்மையில் மனவலிமை மிக்கவர்களாகவும், கருத்துக்களைப் புரிந்துகொள்ளவும் அவற்றை ஏற்றுக்கொள்ளவும் திறனுடையவர்களாகவும், சிந்திக்கவும் தமது சிந்தனைகளைத் தெளிவாக வெளிப்படுத்தவும் ஆற்றல் மிக்கவர்களாகவும் இருப்பதை இத்தலைவர்கள் உணர்கிறார்கள். ஆகவே அத்தலைவர்கள் தங்கள் பண்பாட்டை வளப்படுத்திக் கொண்டு, தங்கள் மனத்தைப் பண்படுத்தி, தங்களுடைய மனச்சிக்கல்களிலிருந்து விடுபட்டு, மக்களுக்கான பணிக்குத் தன்னை அர்ப்பணித்துக் கொண்ட இயக்கத்திற்குப் பணியாற்றுவதற்கான தங்களுடைய ஆற்றலைப் பெருக்கிக் கொள்கிறார்கள்.

உழைக்கும் மக்கள், குறிப்பாக, தங்களுடைய கிராமம் அல்லது வட்டாரத்திலிருந்து அப்பால் சென்றிருக்காத, பொதுவாகவே கல்வியறிவற்ற விவசாயிகள், பிற இனக்குழுக்கள் மற்றும் சமூகப்பிரிவுகளுடன் கொள்ளும் உறவுகளில் ஏற்கனவே கொண்டிருக்கும் மனச்சிக்கல்களை இப்போது பிற சமூகப் பிரிவுகளுடன் கொள்ளும் உறவுகளின் விளைவாகத் தீர்த்துக் கொள்கிறார்கள். போராட்டத்தின் அடிப்படைக் கூறுகளைத் தீர்மானிக்கக்கூடியது தங்களின் நிலைமை என்பதை அவர்கள் புரிந்து கொள்கிறார்கள். தங்களுடைய நாட்டுடனும், உலகத்துடனும் தங்களுடைய கிராமப்புறப் பிரபஞ்சம் படிப்படியாக ஒன்றிணைவதற்குத் தடையாக இருக்கும் அனைத்தையும் அவர்கள் நொறுக்கிறார்கள். போராட்டத்தின் எல்லைப்பரப்பில், அவர்களுடைய உடனடியான மற்றும் எதிர்காலச் செயல்பாடுகளுக்குப் பயன்படக்கூடிய புதிய அறிவை அவர்கள் ஏராளமாகப் பெறுகிறார்கள் போராட்டத்தின் அடிப்படைகளான தேசிய மற்றும் சமூகப் புரட்சியின் கொள்கைகளைப் புரிந்துகொள்வதன் மூலம் அவர்கள் தங்களுடைய அரசியல் வழிப்புணர்வைப் பலப்படுத்திக் கொள்கிறார்கள். இவ்வாறாக அவர்கள் விடுதலை இயக்கத்தின் முதன்மையான சக்திகள் என்ற வகையில் தீர்மானகரமான பாத்திரத்தை வகிப்பதற்குத் தகுதியானவர்களாக மாறுகிறார்கள்.

பெரும்பாலான மக்கள் அணிதிரட்டப்பட்டு அமைப்பாக்கப்படுதல், பல்வேறு சமூகப் பிரிவுகளின் அரசியல் மற்றும் தார்மீக ரீதியான ஒற்றுமை, நவீன ஆயுதங்களையும் போரின் பிற வழிமுறைகளையும் திறமையாகப் பயன்படுத்துதல், போராட்டத்தின் வளர்ச்சிக்கு எதிரான சமூகத் தலைவரின் ஆட்சிமுறை, இரத்த உறவுகளின் மீதான பற்று, சமூகரீதியாகப் பெண்களைத் திறமையாகப் பயன்படுத்துதல், போராட்டத்தின் வளர்ச்சிக்கு எதிரான சமூகத் தலைவரின் ஆட்சிமுறை, இரத்த உறவுகளின் மீதான பற்று, சமூகரீதியாகப் பெண்களைத் தாழ்த்துதல், போராட்டத்தின் பகுத்தறிவுத் தன்மையுடனும் தேசியத் தன்மையுடனும் பொருந்திப் போகாத சடங்குகள், பழக்க வழக்கங்கள் போன்ற சமூக மற்றும் மத நியதிகளையும் தடைகளையும் நிராகரித்தல் ஆகியவை ஆயுதமேந்திய விடுதலைப் போராட்டத்திற்கு இன்றியமையாதவையாகும் என்று நாம் அறிவோம். மக்களின் வாழ்க்கையில் மற்ற பல மிகச் சிறந்த மாற்றங்களையும் போராட்டம் கொண்டு வருகிறது. எனவே ஆயுதமேந்திய விடுதலைப் போராட்டமானது பண்பாட்டு முன்னேற்றத்திற்கான பாதையில் கட்டாயமாக நிகழும் மெய்யான முன்னேற்றத்தை மறை முகமாகச் சுட்டுகிறது.

**ஆயுதமேந்திய விடுதலைப் போராட்டமானது பண்பாட்டின் விளைபொருள் மட்டுமல்ல, பண்பாட்டின் காரணியுமாகும் என்பதை நாம் புரிந்து கொள்ள தியாகங்களுக்கும் இது முதன்மையான கைம்மாறு என்பதில் சந்தேகமில்லை.**

ஆயுத ஏந்திய விடுதலைப் போராட்டத்தின் உள்ளார்ந்த அம்சங்களுடன் பின்வருவனவற்றையும் நாம் சேர்க்க வேண்டும்: ஜனாயக நடைமுறைப்படுத்துதல், விமர்சனத்தையும் சுயவிமர்சனத்தையும் நடைமுறைப்படுத்துதல், தங்களுடைய வாழ்க்கையை நிர்வகிப்பதற்கான மக்களின் பொறுப்புணர்வை வளர்த்தல், பள்ளிகளையும் உடல் நல மையங்களையும் உருவாக்குதல், விவசாய வர்க்க மற்றும் தொழிலாளி வர்க்கப் பின்னணியைக் கொண்ட ஊழியர்களுக்குப் பயிற்சியளித்தல் மற்றும் பிற சாதனைகள். ஆகவே ஆயுதமேந்திய விடுதலைப் போராட்டமானது பண்பாட்டின் விளைபொருள் மட்டுமல்ல, பண்பாட்டின் காரணியுமாகும் என்பதை நாம் புரிந்து கொள்ள தியாகங்களுக்கும் இது முதன்மையான கைம்மாறு என்பதில் சந்தேகமில்லை. இந்தக் காட்சிப் பரப்பின் ஒளியில், போராட்டத்தின் ஒரு பிரிக்க முடியாத, தீர்மானகரமான பகுதியாக பண்பாட்டுப் போராட்டத்தின் நோக்கங்களைத் தெளிவாக வரையறுக்க வேண்டியது விடுதலை இயக்கத்தின் கடமையாகும். ●

> முதலாளித்துவத்திற்காக வக்காலத்து வாங்குபவர்கள் மனித நாகரிகத்தின் பரிணாமத்தோடு அரசாங்கம் இருந்து வந்ததாகவும் அது சமுதாயத்திற்கு மேலே, வர்க்கங்களுக்கு மேலே உள்ள ஒரு நடுநிலைப் பொருளெனவும், பக்கம் சாராததெனவும் எம்மை நம்பச் சொல்கின்றனர்.

# அரசு பற்றிய மார்க்சிச கோட்பாடு

- சண்முகதாசன் -

மார்க்சிசம் - லெனிசம் - மாசேதுங் சிந்தனையால் முன்வைக்கப்பட்ட பொது உண்மைகள் எல்லாவற்றிலும் அரசைப் பற்றிய கோட்பாடே மிகவும் அடிப்படையானதாகும். மிகவும் முக்கியமான கோட்பாடுகளில் ஒன்றான இது முதலில் கார்ள் மார்க்ஸினால் முன்வைக்கப்பட்டது. சமுதாயத்தில் ஒரு புரட்சியாளனும் இதைக் கட்டாயமாகக் கிரகித்துக் கொள்ள வேண்டுமென பின்னர் லெனினும் மாசேதுங்கும் மீண்டும் உறுதிப்படுத்தினர்.

'அரசு" என்ற எண்ணத்தினால் நாம் என்ன விளங்கிக் கொள்கிறோம் என்பதற்கு முதலில் வரைவிலக்கணம் கூறுவோம். ஆயுதப் படைகள் என்ற பிரதான உருவிலுள்ள அரசு இயந்திரத்தையே அரசாங்கம் என நாம் விளங்கிக் கொள்கின்றோம். நீதி பரிபாலனம், சிறைச்சாலைகள், கொழுத்த சம்பளம் பெறும் அதிகாரத்துவம் ஆகியனவே அரசு இயந்திரத்தின் மற்றைய வடிவங்களாகும். இவற்றையெல்லாம் ஒன்று சேர்த்தே அரசு அல்லது அரசு இயந்திரம் எனக் கூறுகின்றோம்.

அரசு எவ்வாறு தோன்றியது? அதன் தன்மையென்ன? நினைவிற்கெட்டாத காலமாக அது இருந்து வந்ததா? இது வர்க்கப் போராட்டத்தில், பக்கம் சாராமல் சமுதாயத்திற்கு மேலேயுள்ள ஒரு நடுநிலை பொருளா? அல்லது அது சமுதாயத்திற்கு மேலேயுள்ள ஒரு சேவகனா? அரசின் குறிப்பான தன்மையை அறிந்து கொள்ளவேண்டுமானால், இவை நாம் கட்டாயமாக விடைகாண வேண்டிய கேள்விகளில் சிலவாகும்.

முதலாளித்துவத்திற்காக வக்காலத்து வாங்குபவர்கள் மனித நாகரிகத்தின் பரிணாமத்தோடு அரசாங்கம் இருந்து வந்ததாகவும் அது சமுதாயத்திற்கு மேலே, வர்க்கங்களுக்கு மேலே உள்ள ஒரு நடுநிலைப் பொருளெனவும், பக்கம் சாராததெனவும் எம்மை நம்பச் சொல்கின்றனர். ஓர் உதைப்பந்தாட்டத்தின் அல்லது குத்துச் சண்டைப் போட்டியின் மத்தியஸ்தரைப் போட்டியாளர்கள் அதாவது வர்க்கங்கள் தமது பலத்தைப் பரீட்சிப்பதற்கான வளையத்தை அரசாங்கம் கொண்டுள்ளதாகவும் மேலும் அவர்கள் கூறுகின்றனர்.

அரசாங்கத்திடம் ஒப்படைக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் ஒரு குறிப்பிட்ட நேரத்தில் அல்லது வேறொரு நேரத்தில் சமுதாயத்தினால் சுயமாகவே அரசாங்கத்திடம் சரண்வைக்கப்பட்டதெனக் கூடச் சிலர் வாதிக்கின்றனர். ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் சகல மனிதர்களும் ஒன்றுகூடி தத்தம் உரிமைகளில் ஒரு பகுதியைச் சுயமாகவே சரண்வைத்து அந்த அதிகாரங்களுடன் அரசாங்கத்தை அமைத்ததாகக் கூட அவர்கள் கூறுகின்றார்கள். இந்தத் திரிக்கப்பட்ட தாக்கத்தை விளங்கிக்கொள்ள வேண்டியவர்களுக்கு வாகனப் போக்குவரத்து பொலீசாரின் உதாரணம் சிறந்ததொன்றாகும். ஒரு காலக்கட்டத்தில் நாம் வீதியின் இருபக்கத்தாலும், அதாவது வலது பக்கத்தாலும் இடது பக்கத்தாலும் செல்லும் உரிமையைப் பெற்றிருந்தோமென வாதிக்கலாம். ஆனால், இது விபத்துகளுக்கு ஏதுவாகலாம் என்பதை உணர்ந்து நாம் சுயமாகவே வலது பக்கத்தால் போகும் உரிமையைக் கைவிட்டு இடது பக்கத்தால் மட்டுமே செல்வதற்கு நம்மை மட்டுப்படுத்திக் கொண்டோம். மேலும் நாம் ஒரு பொலிஸ்காரனை நிறுத்தி சட்டத்தை மீறும் போது எம்மைத் தண்டிக்குமாறு அவனுக்கு அதிகாரத்தையும் கொடுத்தோம்.

முதலாளித்துவத்திற்காக வக்காலத்து வாங்குபவர்கள் இவ்வாறே

அரசாங்கம் அதன் அதிகாரங்களைப் பெற்றதென விவாதிக்க விரும்புகின்றனர்.

இந்த வாதத்தை முறியடிப்பதற்கு அதிக நேரம் பிடிக்காது. முதலில், இவ்வாறன கூட்டமொன்றை மக்கள் கூட்டவில்லை. இரண்டாவதாக, சமுதாயத்தின் வளர்ச்சிப் போக்கில் ஒரு குறிப்பிட்ட கட்டத்திலேயே அரசாங்கம் வளர்ந்தது. இதைச் சுலபமாக நிரூபித்துவிடலாம். இன்றைய இரண்டு முக்கிய அங்கங்களாக விளங்குவது நிலையான இராணுவமும் பொலீசு மாகும். இந்த அமைப்புக்கள் எப்போது தோன்றியதென்பதை பார்ப்போம். உலகில் முதலாளித்துவத்ததிற்கு மாறிய முதலாவது நாடாகிய இங்கிலாத்திலேயே இரண்டும் முதலிற் தோன்றின.

நோமண்டியிலிருந்து இங்கிலாந்திலிருந்து 3 வது வில்லியம் திரும்பிய பின்னர் இங்கிலாந்தில் நிலையான இராணுவம் ஸ்தாபிக்கப்பட்டது. அதற்கு முன் உலகில் எந்தப் பகுதியிலாவது நிலையான இராணுவம் இருக்கவில்லை. அரசர்களும், பிரதானிகளும் யுத்தத்திற்குச் சென்றபோதெல்லாம் கூலிப் படையினரை திரட்டினர். யுத்தத்தின் முடிவில் படைவீரர்கள் தமது முன்னைய தொழிலுக்கு் திரும்பினர். இவ்வாறு இங்கிலாந்திற்கும் பிரான்சுக்கும் இடையியேயான நூற்றாண்டு யுத்தம் அல்லது புனித யுத்தம் நடத்தப்பட்டது. இலங்கைச் சரித்திரத்தைப் பார்த்தால் இதே போலவே மொகல்லானன் தனது சகோதரனான சிகிரியா புகழ் கசியப்பாவுக்கு எதிராக இந்தியாவிலிருந்து கூலிப் படையினருடன் அணிவகுத்தான் என்பதைக் காண்கின்றோம். படைக்கு ஆள் திரட்டும் அதிகாரி முரசுடன் சந்தைகளில் போர் வீரர்களைத் திரட்டும் காட்சிகளை திரைப்படம் பார்ப்பவர்கள் கண்டிருப்பார்கள். மூன்றாவது வில்லியத்திற்கு முந்திய காலத்தில் நிரந்தர இராணுவம் இல்லையென்பதை இது திட்டவட்டமாக நிரூபிக்கின்றது. இன்று நிலையான இராணுவம் இல்லாத நாடே கிடையாது.

அவ்வாறே பொலீஸ் படை இல்லாத நாடே இல்லை. அப்படியானால் எப்பொழுது இது முதன் முதலில் தோன்றியது? சென்ற நூற்றாண்டில் முன் அரைப் பகுதியில் பிற்காலத்தில் இங்கிலாந்தில், சேர் றொபேர்ட் பீல் உள்நாட்டு மந்திரியாக இருந்தபோது தோன்றியது. ஒரு பொலீஸ் படையை ஸ்தாபிப்பதற்கான மசோதாவைப் பாராளுமன்றத்தில் சமர்ப்பித்தது அவரேயாகும். றொபேட் என்பதற்கு சுருக்கமாக 'பொபி" என இன்று இங்கிலாந்தின் பொலீஸ்காரர்கள் அழைப்பதற்கு இதுவே காரணமாகும். இதனால் நாம் சென்ற நூற்றாண்டின் நடுப்பகுதிக்கு முன்னர் உலகில் பொலீஸ் படை இருக்கவில்லை என்றும் மூன்றாவது வில்லியத்திற்கு முன்னர் உலகில் நிலையான இராணுவம் இருக்கவில்லை எனவும் தெளிவாகக் காண்கிறோம். நாம் இன்று காணும் அரசானது நினைவிற்கு முன்னர் உலகில் நினையான இராணுவம் இருக்கவில்லை எனவும் தெளிவாகக் காண்கின்றோம். நாம் இன்று காணும் அரசானது நினைவிற்கு எட்டாத காலத்திற்கு முன்னர் இருக்கவில்லை என்பதை இது தெளிவாக நிருபிக்கின்றது.

சாதனங்களைத் தனி நபர் உடமை கொள்ளும் நிலை ஏற்படவில்லை.

அதே நேரத்தில் சிறு உணவைப் பெற்றுக் கொள்வதற்குச் சகலரும் கூட்டாக உழைக்க வேண்டி இருந்தது. உதாரணத்திற்கு, பெண்கள் வீட்டு வேலைகளை கவனித்தபோது சகல ஆண்களும் காட்டு மிருகங்களை வேட்டையாடச் சென்றனர். அப்படிச் செய்யாவிடில் காட்டு மிருகங்கள் மனிதரை வேட்டையாடிவிடுமாதலினால் இது அத்தியாவசியமாயிற்று. இப்படி இருந்தும் இந்த வேட்டையாடுவோரின் கூட்டு உழைப்பு அந்த பூர்வீகக் குடியினர் சகலரும் உண்பதற்கு மட்டுமட்டான உண-வையே கொடுத்தது. இது பெரும்பாலும் போதாதிருந்தது. இந்தச் சூழ்நிலைகளில் உற்பத்திச் சாதனங்களின் வளர்ச்சி மிக அடித்தளத்தில் இருந்தபோது

**இன்றைய இரண்டு முக்கிய அங்கங்களாக விளங்குவது நிலையான இராணுவமும் பொலீசுமாகும். உலகில் முதலாளித்துவத்ததிற்கு மாறிய முதலாவது நாடாகிய இங்கிலாத்திலேயே இரண்டும் முதலிற் தோன்றின.**

இதை தெரிந்து கொண்ட பின்னர் சமுதாய ஆரம்பத்தின் முன் நாட்களை அல்லது குறைந்தது ஆரம்பகால மனித நாகரீகத்தை பின்னோக்கிப் பார்ப்போம். இன்றுவரை உலகம் புராதனப் பொது உடமை, அடிமை, நிலப்பிரபுத்துவ, முதலாளித்துவ, சோசலிஸ சமுதாயங்கள் ஆகிய ஐந்து வகைச் சமுதாயங்களைக் கண்டிருக்கிறதென இயக்கவியல் சரித்திரம் நமக்குப் போதிக்கின்றது. நாகரிகத்தின் மிக ஆரம்பக் காலத்தில் புராதனப் பொதுவுடமைச் சமுதாயம் இருந்தது. உற்பத்திச் சாதனங்கள் சீராக வளர்ச்சி அடையாதிருந்த காலத்தில் இந்த அமைப்பு இருந்தது. வேட்டையதடுதல், மீன் பிடித்தல் ஆகியவறிறிலேயே சீவித்து வந்தனர். இதற்காக அவர்கள் உபயோகித்த உபகரணங்கள் அம்பு, வில்லு போன்ற புராதனமானவை. இவை யாவும் எவராலும் செய்து கொள்ளக் கூடியவையாக இருந்ததால் உற்பத்திச்

மக்களை எதிர் எதிர் வர்க்கங்களாகப் பிரிக்கும் அடிப்படை ஏற்படவில்லை. தான் உண்பதற்கு வேண்டிய உணவை மட்டுமே உற்பத்தி செய்யக் கூடிய நிலையில் உள்ள ஒருவன் வேறு சக மனிதனை அடிமைப்படுத்துவதில் எதுவித அர்த்தமுமிலிலை. அன்று நிலவிய வர்க்கங்களற்ற சமுதாயத்திற்கு இதுதான் அடிப்படையாகும்.

சில குறிப்பிட்ட ஆறுகளில் மீன் பிடிக்கும் உரிமைக்காகவும், சில குறிப்பிட்ட காடுகளில் வேட்டையாடுவதற்கான உரிமைக்காகவும் வெவ்வேறு பூர்வீகக் குடிகளுக்கிடையே யுத்தங்கள் இடம் பெற்றன. அவ்வாறான யுத்தங்களில் தோல்வியுற்ற பூர்வீகக் குடிமக்கள் சிறைப்பிடிக்கப்படவில்லை. அவர்கள் சிரச்சேதம் செய்யப்பட்டனர். இது காட்டுமிராண்டித்தனமாக எமக்குப் படக்கூடும். தலையை வெட்டி விடுவது

அதற்கு சாப்பாடு போடும் தேவையை இல்லாமல் செய்துவிடுகிறதென்பதை நாம் விளங்கிக் கொள்ள வேண்டும். ஒரு மனிதன் தனக்குப் போதிய உணவை உற்பத்தி செய்யக் கூடிய நிலை ஏற்பட்டதோடு அல்லாமல் மற்றையோருக்கும் உற்பத்தி செய்யக்கூடிய நிலை ஏற்பட்டதுமே வர்க்கங்களாக சமுதாயத்தைப் பிரிப்பதற்கான அடிப்படை தோன்றும் கட்டத்தை அடைகின்றோம். இப்பொழுது தோற்கடிக்கப்பட்ட பூர்வீகக் குடியினர் வாளுக்கிரையாக்கப் படுவதில்லை. செல்வத்தை உற்பத்தி செய்வதற்காக அவர்கள் அடிமைகளாக்கப்பட்டனர். அடிமையை வைத்திருப்போன் - அடிமை என்ற பிரபுத்துவத்திற்கு முந்திய அடிமைச் சமுதாயத்தின் மூலம் வர்க்கச் சமுதாயம் முதன் முதலாகத் தோன்றுகிறது.

உற்பத்திச் சாதனங்களின் வளர்ச்சிதான் புராதன பொது உடமைச் சமுதாயத்திலிருந்து அடிமைச் சமுதாயமாக மாறுவதற்கு ஏதுவாக இருந்தது என்பதை நாம் குறித்துக் கொள்வோம். ஒரு அடிமை தனக்கும் தனது எசமானுக்கும் வேண்டியதை உற்பத்தி செய்யக்கூடிய நிலைக்கு உற்பத்திச் சாதனங்கள் வளர்ச்சியடையும் வரை அடிமைத்தனத்திற்கான அடிப்படை தோன்றியிருக்க முடியாது. ஒரு வர்க்க சமுதாயத்தின் வருகை-யோடு ஒரு வர்க்கம் மற்ற வர்க்கத்தை அடக்குவதற்கு ஒரு வர்க்கம் சாதனம் தேவைப்பட்டது. இதுதான் பிற்காலத்தில் அரசாங்கமாக வளர்ச்சியடைய இருந்தது.

வர்க்கங்களற்ற புராதன பொதுவுடைமைச் சமுதாயத்தில் அரசாங்க இயந்திரம் இருக்கவில்லை. அப்பொழுது வர்க்கங்களற்ற சமுதாயம் இருந்தமையால் ஒரு வர்க்கத்தை வேறொரு வர்க்கம் அடக்கி வைத்திருப்பதற்குத் தேவையான காரணம் ஏற்படாததேயாகும். அவ்வாறானால் ஒழுங்கு எவ்வாறு நிலை நாட்டப்பட்டது? ஒவ்வொரு பூர்வீகக்குடியும் தம்முள் ஒருவரைத் தலைவராக அல்லது முக்கியஸ்தராகத் தெரிவுசெய்தனர். பொதுவாக அவன் வேட்டையாடுவதற்கும், யுத்தத்திற்கும், அவர்களைத் தலைமை தாங்கும் உடல் வலிமை பெற்றவனாயிருந்தான். ஆனால், அவன் தனது அதிகாரத்தை நிலைநாட்டுவதற்கு அவனிடம் அரசாங்க இயந்திரமான ஓர் இராணுவத்தையோ அல்லது பொலீஸ் படையையோ கொண்டிருக்கவில்லை. சுயமாகவே மக்கள் அவனுக்குக் கீழ்ப்படிந்தனர். ஒவ்வொருவரும் அவனது சொல்லை ஏற்றுக் கொண்டனர். ஒரு பூர்வீகக்குடியில் தலைவனுக்குக் கிடைத்த மனப்பூர்வனமான மரியா தையும் கீழ்ப்படிவம், முதலாளித்துவ சமுதாயத்தில் எந்தவொரு சக்திவாய்ந்த தலைவனுக்கும் கிடைத்ததில்லை.

புராதன பொதுவுடைமைச் சமுதாய த்தின் கால கட்டத்தில் அரசாங்க இயந்திரத்தைச் சிறிதளவாவது ஒத்ததாக ஏதும் இருக்கவில்லையென்பது மிகவும் தெளிவாகின்றது. எதிர் வர்க்கங்கள் ஒரு வர்க்கம் தனக்குக் கீழ் கொண்டுவரும் நிலைக்கு வளர்ச்சியடையும் போதே ஓர் அடக்குமுறை அரசு இயந்திரத்தின் தேவை ஏற்படுகின்றது. அவ்வாறான முதற் சமுதாயம் அடிமைச் சமுதாய மாகும். அதன் சிறந்த உதாரணங்களை கிரேக்கத்திலும் உரோம சாம்ராஜ்யத்தின் காலப்பகுதியிலும் காணலாம். இந்த சமுதாயம் அடிமையை வைத்திருப்போன் - அடிமை என்ற எதிர் எதிர்வர்க்கங்களாகப் பிளவுபட்டிருந்தது. வல்லமை மிக்க உரோம சாம்ராஜ்யத்திற்கு எதிராக ஸ்பார்ட்டகஸ் தலைமை தாங்கிய மிகப் பிரபல்யம் வாய்ந்த கிளர்ச்சிகள் உட்பட பல அடிமைக் கிளர்ச்சிகளை இந்த சமுதாயம் கண்டது.

இக்கட்டத்தில் அடக்குமுறை இயந்திரம் பெரிய அளவில் வளர்ச்சியடையவில்லை. அடிமைகள் மிகக் கடுமையான கசையடி மூலமும், பிரமாண்டமான சுதந்திர மனிதர்களின் படையுடனும் கோரமாக அடக்கியாளப்பட்டனர். ஆனால், வர்க்க முரண்பாடுகள் கூர்மையடைந்து சமுதாயமம் அடுத்த கட்டமான பிரபுத்துவத்திற்கு வளர்ச்சியடைந்ததும் மேலும் மோசமான அடக்குமுறை அரசு இயந்திரத்தின் தேவை உணரப்பட்டது. நிலையான இராணுவம் ஸ்தாபிக்கப்பட்டது. ஒரு நீதித்துறையும் சிறைச்சாலைகளும் தோன்றின. சிறிது சிறிதாக அரசு இயந்திரம் வளர்ந்து வர்க்க முரண்பாடு மிக உச்சக் கட்டத்தில் கூர்மையடைந்துள்ள முதலாளித்துவ சமுதாயத்தில் உயர் இராணுவ மயமாக்கப்பட்ட இன்றைய அரசாங்கம் தோன்றியது. இதிலிருந்து வர்க்க முரண்பாடுகளின் வளர்ச்சிப் போக்கின் விளைவுகளால் அரசாங்கம் தோன்றியது என்பதைத் தெளிவாகப் புரிந்துகொள்ளலாம்.

**அரசாங்கமென்றால் ஒரு வர்க்கம் வேறு ஒரு வர்க்கத்தை அடக்குவதற்கான ஒரு சாதனமாகும். அது வர்க்கங்களுக்கு மேலே, சமுதாயத்திற்கு மேலே உள்ள ஒரு நடுநிலை அமைப்பல்ல. சுரண்டும் வர்க்கங்கள், சுரண்டப்படும் வர்க்கங்களை கீழே வைத்திருப்பதற்காய் படிப்படியாகக் கட்டப்பட்ட சாதனமே அது.**

மார்க்ஸ் விளக்கியது போன்று அரசாங்கமென்றால் ஒரு வர்க்கம் வேறு ஒரு வர்க்கத்தை அடக்குவதற்கான ஒரு சாதனமாகும். அது வர்க்கங்களுக்கு மேலே, சமுதாயத்திற்கு மேலே உள்ள ஒரு நடுநிலை அமைப்பல்ல. சுரண்டும் வர்க்கங்கள், சுரண்டப்படும் வர்க்கங்களை கீழே வைத்திருப்பதற்காய் படிப்படியாகக் கட்டப்பட்ட சாதனமே அது. வர்க்க சமுதாயத்தில் ஆட்சி செலுத்துவது உண்மையில் அதுவே. கட்சிகள் வரலாம் போகலாம். ஆனால் சுரண்டும் அமைப்புமுறை இருக்கும் வரை அரசு இயற்திரம் அவ்வாறே இருக்கும்.

இலங்கையைப் பொறுத்தவரையிரும் இந்த விடயத்தைச் சில உதாரணங்களுடன் விளக்கலாம். 1965-70 வரையிலான ஐந்து வருட பிரதம மந்திரிப் பதவிக் காலத்தில் டட்லி சேனநாயக்காவின் நிரந்தரக் காரியதரிசியாக இருந்தவர்

முன்னைய ஆட்சிக் காலத்தில் மைத்திரிபால சேனநாயக்காவின் நிரந்தர காரியதரிசியேயாகும். 1962 இல் ஸ்ரீமாவோ நியமித்த கடற் படை தளபதியை அதே ஸ்தானத்தில் 1970 இல் டட்லி ஊர்ஜிதம் செய்தார். உண்மையில் முகங்கள் மாறுகின்றன. ஓர் அதிகாரி மாத்தறையிலிருந்து கொழும்புக்கும், அல்லது கணடியிலிருந்து பதுளைக்கும் மாற்றப்படுகின்றார்கள். ஆனால, கொழுத்த சம்பளம் பெறும் நியூஸ்கொட்லண்ட் யார்ட்டிலும் பிரித்தானிய ஏகாதிப்பத்தியத்தால் பயிற்றுவிக்கப்படும் இராணுவ, பொலீஸ் அதிகாரிகளுக்கும் அடிப்படையில் அவ்வாறே இருக்கின்றனர். அவர்கள் அதே எஜமானர்களுக்கு, அதே நலன்களுக்குச் சேவை செய்கின்றனர். அந்த மனிதர்கள் தான் உண்மையில் ஆட்சி செய்கிறார்கள்.

இவ்வாறான ஓர் ஒடுக்குமுறை முதலாளித்து அரசாங்க இயந்திரம் இல்லாமல் சுரண்டல் ஒரு நிமிடத்திறகுமேல் நிலைக்காதென்பது நிச்சயமாகத் தெளிவாகின்றது. ஆயுதப் படையின ரதும், பொலீஸ் படையினரதும் கரங்களில் துப்பாக்கியில்லாவிட்டால் சுரண்டும் வர்க்கங்கள் சுரண்டப்படுவோரைக் கீழே போட்டு மிதிக்க முடியாது. ஒரு வேலை நிறுத்தத்தில் பங்குபற்றிய எவருக்கும் இது தெரியும். ஒரு வேலை நிறுத்தம் ஆரம்பமானவுடன் முதலாளி தொலை பேசியை எடுத்தது தான் தாமதம் வேலைநிறுத்தம் நடைபெறும் தொழிற்சாலையை நோக்கி ஒரு வான் நிறையப் பொலீஸ்காரர்கள் வருவார்கள்.

அவர்கள் முதலாளியின் உயி ரையும், உடமையையும் பாதுகாக்க வந்துள்ளார்கள். அத்துடன் அவர்கள் ஆயுதந்தாங்கியவர்களாக வந்திருக்கின்றார்கள். அவர்களின் கரங்களில் உள்ள துப்பாக்கிகளே முதலா-ளியையும், அவனது வர்க்கத்தையும் பாதுகாக்கின்றது. அந்தத் துப்பாக்கிகள் இல்லாவிட்டால் தொழிலாளர்கள் சுரண்டலுக்கு ஒரு நாள் கூட இடங் கொடுக்கமாட்டார்கள். எவ்வாறாயினும், பெரும்பாலான தொழிலாளர்கள் முதலாளிகளுக்கு நூறுக்கு ஒன்று என்ற விகிதாசாரத்தில் இருக்கிறார்கள். இந்த நிலைமைகளில் எவ்வாறு அவர்களால் இவ்வளவு பெரிய எண்ணிக்கையில் உள்ளவர்களைப் பலவந்தப்படுத்திச் சுரண்ட முடிகின்றது. அவர்களின் காவல் நாய்களான இராணுவம், பொலீஸின் கரங்களில் உள்ள துப்பாக்கிகளின் சக்தியே அது. அதனாலேயே தோழர் மாசேதுங், அரசியல் அதிகாரம் துப்பாக்கிக் குழலிலிருந்து பிறக்கின்றது என்பதை ஒவ்வொரு கம்யூனிஸ்ட்டும் உணர்ந்துகொள்ள வேண்டும் என நமக்குக் கற்றுத்தந்தது நூறுவீதம் சரியாகின்றது. அரசாங்கத்தைப் பற்றிய மார்க்சிசக் கோட்பாட்டை இது இரத்தினச் சுருக்கமாகத் தருகின்றது. மார்க்ஸிச - லெனினிசத்தின் சாரம் அதுவே.

இந்த துப்பாக்கிகள் கைமாறும் போதே, சுரண்டப்பட்ட வர்க்கங்கள் புரட்சிகரப் பலாத்காரத்தினால் இந்தத் துப்பாக்கிகளைப் பறித்துத் தொழிலாளர் களினதும் அவர்களினது நேச அணி களினதும் கைகளில் அவற்றை ஒப்படைக்கும் போதே அவர்கள் தம்மை விடுதலை செய்து கொள்வார்கள். வேறு எந்த மார்க்கமும் இல்லை. மற்றவை யாவும் தொழிலாளி வர்க்கத்தை ஏமாற்றும் ஒரு திட்டமிட்ட முயற்சி அல்லது போலியாகும்.

இந்த உண்மையை மறைப்பதற்கும், மக்களைக் குழம்பச் செய்து அவர்களின் கவனத்தைத் திசை திருப்புவதற்காகவுமே முதலாளிகளும் மற்றைய பிற்போக்குச்சக்திகளும் பாராளுமன்றம் என்ற ஏமாற்று வித்தையை கண்டுபிடித்தனர். பாராளுமன்றம் வெறுமனே கதைக்கும் கதை யைத் தவிர வேறொன்றும் இல்லை. அது மூலதனத்தின் வெளிப்படையான சர்வதிகாரத்தை மறைப்பதற்கான ஒரு திரை ஒரு அணிகலனுமாகும். அது மக்களை மடையர்களாக்குமவதற்கும், பிளவுபடுவதற்கும், பாராளுமன்றம் மூலம் சோசலிசத்தை அடையலாம் என்ற மாயையைப் பரப்புவதன் மூலம் அவர்களின் வர்க்க உணர்வுகளை மழுங்கடிப்பதற்கும், ஆயுதப் படையிற்தான் உண்மையான அதிகாரம் இருக்கிறதென்பதை மக்களிடமிருந்து திசைதிருப்புவதற்கும் முயற்சிக்கின்றது. ஆயுதம் தாங்கிய போராட்டத்திற்கும் பதில் வெறும் சொற்களால் போராட்டம் நடத்தும் மாற்று யோசனையை கூறமுயற்சிக்கின்றது.

1931 இல் இருந்து 40 வருட காலமாக இலங்கை அனுபவித்து வந்த சர்ஜன வாக்குரிமையால் பெற்ற நற்பலன்கள் சந்தேகத்திற்குரியதே. பிரெஞ்சுப் பெண்கள் வாக்களிக்கும் உரிமையைப் பெற்றிராதபோது எமது பெண்கள் அந்த உரிமையைப பெற்றனர். ஆனால், எமது பெண்கள் 1931 இலேயே அந்த உரிமையைப் பெற்றிருந்தனர். நாம் கேட்காதிருந்ததும் எமக்கு இந்த உரிமை எனப்பட்டதைப் பெற்றோம். ஏ. ஈ. குணசிங்காவைத் தவிர எந்த ஒரு கட்சியோ, தலைவரோ சர்வஜன வாக்குரிமையை கேட்கவில்லை எனினும் டொனமூர் விசாரனைக் குழு எமக்கு இதை வழங்கியது. இது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் எம்மீது கொண்டிருந்த பெரும் அன்பினால் வழங்கப்பட்டதா? இல்லை. தாம் என்ன செய்கின்றனர் என்பதை அவர்கள் தெரிந்து வைத்திருந்தனர். சர்வஜன வாக்குரிமையைக் கொடுப்பதன் மூலம் வளர்ந்து வரும் ஏகாதிபத்திய எதிர்ப்பு ஐக்கியத்தை இன ரீதியிலும், சாதிய ரீதியிலும், வேறு வழிகளிலும் பிளவுபடுத்த அவர்கள் எண்ணினர். அவர்களின எண்ணங்கள் பொய்ப்பிக்கப்படவில்லை.

**முதலாளிகளும் மற்றைய பிற்போக்குச்சக்திகளும் பாராளுமன்றம் என்ற ஏமாற்று வித்தையை கண்டுபிடித்தனர். பாராளுமன்றம் வெறுமனே கதைக்கும் கதையைத் தவிர வேறொன்றும் இல்லை. அது மூலதனத்தின் வெளிப்படையான சர்வதிகாரத்தை மறைப்பதற்கான ஒரு திரை ஒரு அணிகலனுமாகும்.**

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமும் அவர்களது அடிவருடிகளும் சகல மக்களையும் ஆட்சி செய்து வருகையில் அவர்களோ சாதி, மத இன ரீதிகளிற் பிளவுபட்டிருந்தனர்.

எமது நாட்டு மக்கள் மொத்தம் ஒன்பது தடவைகள் அதாவது 1931, 1947, 1956, 1960 (இரு தடவைகள்), 1965, 1970 ஆகிய ஆண்டுகளில் வாக்களித்தனர். இந்த முறைமூலம் சட்டமியற்றும் ஒக்ஸ்போர்ட், கேம்பிரிட்ஜ், இலண்டன் முதலான சர்வகலா சாலைகளில் கற்ற திறமைமிக்கோரைப் பாராளுமன்றம் அனுப்பினர். இந்த மனிதர்களும் பாராளுமன்றத்திற் குள்ளேயும் வெளியேயும் கெட்டித்தனமான சொற்பொழிவுகளை நிகழ்த்தினர்.

ஆனால், இறுதி முடிவுதான் என்ன? 1931 இல் பாராளுமன்றத்திற்கு வெளியே வருட காலங்கள் சேனநாயக்காக்கள் ஆட்சி செலுத்தினர். 1970 இலிருந்து லங்கா சம சமாஜக் கட்சியுடனும், கெனமன் கும்பலுடனும் சேர்ந்து மீண்டும் பண்டாரநாயக்காக்கள் பொறுப்பேற்றுவிட்டனர். ஆனால், சொத்து உறவில் என்றாலும் அல்லது சுரண்டலின் தரத்திலென்றாலும் ஏதாவது மாற்றம் ஏற்பட்டதா? இல்லை. அதே சுரண்டல் தொடர்கின்றது. செல்வந்தார்கள் மேலும் செல்வந்தார்களாகின்ற அதே வேளை ஏழைகள் மேலும் ஏழைகள் ஆகின்றனர். ஏனெனில், முதலாளித்துவப் பாராளுமன்ற ஜனநாயகத்தின் மூலம் ஏற்படுத்தப்பட்ட அரசாங்க மாற்றங்கள் பொருளாதாரக் கட்டுக்கோப்பில் அல்லது அதைப் பாதுகாக்கின்ற முதலாளிததுவ அரசாங்க இயந்திரத்திலோ எந்தவித அடிப்படைமாற்றமெதுவையும் கொண்டுவரவில்லை. அதனால்

**அரசாங்கமென்றால் ஒரு வர்க்கம் வேறு ஒரு வர்க்கத்தை அடக்குவதற்கான ஒரு சாதனமாகும். அது வர்க்கங்களுக்கு மேலே, சமுதாயத்திற்கு மேலே உள்ள ஒரு நடுநிலை அமைப்பல்ல. சுரண்டும் வர்க்கங்கள், சுரண்டப்படும் வர்க்கங்களை கீழே வைத்திருப்பதற்காய் படிப்படியாகக் கட்டப்பட்ட சாதனமே அது.**

நிலவிய உழைக்கும் மக்களைச் சுரண்டும் முறையானது எந்த அளவிலாவது குறைக்கப்பட்டுள்ளதா? திட்டவட்டமான பதில் இல்லை என்பதேயாதுகும். ஏனெனில் சுரண்டலைப் பாராளுமன்றம் பாதுகாக்கவில்லை. பாராளுமன்றத்திற்கு வெளியே சுயேச்சையாக இயங்கும் முதராளித்துவ அரசாங்க இயந்திரமே சுரண்டலைப் பாதுகாக்கின்றது. பாராளுமன்றத்தில் நடைபெறும் நாமடக மானது சேனநாயக்கா - பண்டாரநாயக்கா குடும்பங்களுக்கிடையே நடை பெறும் சங்கீத நாற்காலி வியையாட்டை ஒத்திருக்கின்றது. 1947 - 56 வரையி லான ஒன்பது வருடங்கள் சேனநாயக்கா குடும்பம் ஆட்சி செலுத்தியது. 1956-65 வரையிலான அடுத்த ஒன்பது வருடங்கள் பண்டாரநாயக்கா குடும்பம் ஆட்சி செலுத்தியது. 1965 இலிருந்து மீண்டும் ஐந்து

தான் ஒவ்வொரு புரட்சியாளனும் இப்பொழுதுள்ள ஏகாதிபத்திய - பிரபுத்துவ - பெரும் முதலாளித்துவ பொருளா- தாரக் கட்டுக்கோப்பை நொருக்காமலும், அத்துடன் அதன் காவல்நாயாக விளங்கும் ஒடுக்குடுறை அரசாங்க இயந்திரத்தைப் பலாத்காரத்தினால் உடைக்காமலும். முதலாளித்துவ பாராளுமன்ற ஜனநாயக நாடகத்தின் மூலம் பதவிக்கு வரும் எந்த அரசாங்கமும் மக்களின் அடிப்படைப் பிரச்சினைகளைத் தீர்த்து வைக்கமாட்டாது என்ற உண்மையை கவனத்தில் கொள்ள வேண்டும்.

அதனால் தான் ஏகாதிப்பத்தியம் முழு அழிவை நோக்கிச் செல்லும் சகாப்தத்தில் சோசலிசம் பரந்த ரீதியில் உலகில் வெற்றி பெறும்போது தோழர் மாசேதுங் குறிப்பிட்டது போல உலகின் பிரதான போக்கு புரட்சிதான். அத்துடன் விசேடமாக புரட்சிப்புயல் ஆசிய, ஆபிரிக்க, லத்தின் அமெரிக்க நாடுகளைத் தாக்குகின்ற போது, பங்கலோட்டுத் தனமான பாராளுமன்றப் பாதையை நிராகரித்து, மாசேதுங் சிந்தனையால் ஒளியூட்டப்பட்ட புரட்சிப் பாதையை ஏற்றுக்கொள்வது உண்மையான புரட்சியாளன் ஒவ்வொருவரினதும் திட்டவட்டமான முன் தேவையாகும்.

தொழிலாளி வர்க்கமும் அதன் நேச அணிகளும் தற்போதுள்ள முதலாளித்துவ அரசாங்க இயந்திரத்தை உள்ளவாறே எடுத்துத் தமது நலன்களுக்காக உபயோகிப்பதும் சாத்தியமில்லை. அரச இயந்திரம் முதலாளித்துவத்தின் நலன்களைப பாதுகாக்கப் பாவிக்க இயலாது. அதனால் தான் மார்க்ஸ், லெனின், மாசேதுங் ஆகியோர் முதலாளித்துவ அரசாங்க இயந்திரம் நிச்சயமாக நொருக்கப்படல் வேண்டும் என வலியுறுத்திக் கூறினர். அதனைச் சீர்திருத்தம் செய்யவோ அல்லது அதன் வரையறைக்குள் அமைப்பில் சீர்த்திருத்தம் செய்யவோ முடியாது. முதலாளித்துவ அரசு இயந்திரம் இருக்கவேண்டும் அல்லது இடைப்பட்டதாக ஒன்றும் இருக்க முடியாது. அதனால் தான் முதலாளித்துவ அரசு இயந்திரத்தை பலாத்காரத்தினால் நொருக்கி அதனிடத்தில் பாட்டாளிகளின் அரசு இயந்திரத்தை தொழிலாளர் வர்க்கமும் அதன் நேச அணிகளும் ஏற்படுத்தவேண்டியது பொறுப்பென மார்க்கிசம் - லெனினிசம் - மாசேதுங் சிந்தனை போதிக்கின்றது. பாட்டாளிகளின் அரசாங்க இயந்திரத்தை மார்க்ஸ் பாட்டாளி வர்க்க சர்வாதிகாரம் என விபரித்தார்.

இந்தக் கடமையைச் சரிவரச் செய்த புரட்சிகள் வெற்றி பெற்றன. ஒக்டோபர் புரட்சியும் சீனப் புரட்சியும் அதற்கு உதாரணங்களாகும். இந்த இரண்டிலும் பழைய அரசியல் அதிகாரத்தின் அழிவில் புதியது பெறப்பட்டது. பழைய அரசு இயந்திரத்தை அல்லது அதன் ஒரு பகுதியையாவது உபயோகிக்கும் முயற்சி நடைபெறவில்லை. ஜேர்மன் ஏகாதிபத்தியவாதிகளின் ஆக்கிரமிப்புக்கெதிராகப் போராடி நகரத்தைக் காப்பாற்றுமாறு லெனின் அறைகூவல் விடுத்து துப்பாக்கிகளை அவர்களுக்கு வழங்கியதன் மூலமே சோவியத் செஞ்சேனை உருவாக்கியது. அவர்கள் பழைய நீதி பரிபாலனத்தைத்

தொடர்ந்தும் வைத்திருக்கவோ அல்லது நீதி பரிபாலனத்தின் சுதந்திரத்தைப் பற்றியோ அதிகம் புலம்பிக் கொணடிருக்கவில்லை. சோசலிச சட்டத்தைப் பரிபாலிக்கப் புதிய நீதிபதிகள் நியமிக்கப்பட்டனர்.

சீனாவைப் பொறுத்தமட்டில் விடயம் சந்தேகத்திற்கிடமின்றி தெளிவாகவுள்ளது. சீனாவை முழுமையாக விடுதலை செய்யுமுன்னர் சீனக் கம்யுனிஸ்டுகள் சீனப் புரட்சியின் தொட்டில் என இன்று அழைக்கப்படும் யெனானில் 13 வருடங்கள் தோழர் மாசேதுங் தலைமையில் இருந்தனர். புதிதாக விடுதலை செய்யப்பமடட பிரதேசங்களின் பரிபாலனத்தை மேற்கொள்ளும் பொருட்டு மக்கள் விடுதலைச் சேனையின் பின்னால் செல்வற்காக ஒரு புதிய பட்டாளி வர்க்க பரிபாலன அமைப்பை இங்கே பயிற்றுவித்துக் கட்டி அமைத்தனர். இது ஒரு முழுமையான புதிய பரிபாலன அமைப்பு. அது பழைய அமைப்புடன் எதுவித தொடர்பையோ, உறவையோ வைத்துக்கொள்ளாதது மட்டுமல்ல, பழைய ஒடுக்குமுறை அரசாங்க இயந்திரத்தை அடித்து நொருக்குவது என்ற அடிப்படையில் அமைக்கப்பட்டது.

இது நடைபெறாத பட்சத்தில், 1919இன் ஆரம்பத்தில் ஜேர்மனியப் புரட்சியை எதிர்ப்புரட்சி சுலபாக அடக்கிவிடும். அதனால் தான் சம சமாஜக் கட்சி, கெனமன் திரிபுவாத கும்பல்களின் போலி மார்க்சிஸ்டுகள் ஏகாதிப்பத்தியவாதிகளால் உரு அமைத்து ஐக்கிய முன்னணி அரசாங்கத்தினால் வாரிசாகப் பெறப்பட்ட முதலாளித்துவ அரசாங்க இயந்திரத்தின் உதவியுடன் சோசலிசத்தை கட்டி எழுப்புவோமென பிரகடனம் செய்வது அவர்களின் முதல்தர பிதற்றலைக் குறிக்கின்றது.

புரட்சியின் வெற்றிக்கு முதலாளித்துவ ஒடுக்குமுறை அரசாங்க இயந்திரம் அடித்து நொருக்கப்படுவது எவ்வளவு அவசியமோ, அதே போல புதிய பாட்டாளி வர்க்க அரசதிகாரம் நிலைத்து நிற்பதற்கு பாட்டாளி வர்க்க சர்வதி காரம் அவசியமாகும். லெனின் காலத்தில் அராஜக வாதிகள் எனப்பட்ட ஒரு பகுதியினர் முதலாளித்துவ ஒடுக்குமுறை அரசு அதிகாரத்தை புரட்சிமூலம் நிர்மூலமாக்கியபின் ஒரு பாட்டாளி வர்க்க அரசதிகாரம் வேண்டியதில்லை எனக் கூறினர். இந்தக் கோட்பாட்டை விமர்சித்திருக்கின்றார். சந்தேகத்திற்கு உரிய வகையில் இந்தக் கோட்பாட்டை ஆதரிப்பவர்கள் கிட்டதட்ட ஒருவருமே இல்லையெனக் கூறலாம். ஆனால், நாம் பாட்டாளி வர்க்க அரசியல் அதிகாரம் பாட்டாளி வர்க்க சர்வாதிகார உருவத்தில் முதலாளித்துவ சர்வாதிகாரத்தின் இடத்திற்கு வர வேண்டும் என்பதை விளங்கிக் கொள்ள வேண்டும்.

லெனின் குறிப்பிட்டது போல. வெற்றியடைந்த சகல புரட்சிகளும் சர்வதிகாரத்தால் பின் தொடரப்பட்டன. ஏனெனில் தோற்கடிக்கப்பட்ட வர்க்கம் தனது தோல்வியை ஒப்புக்கொண்டதும் இல்லை அல்லது இசைந்து போனது இல்லை. அது எப்பொழுதும் அதிகாரத்தை மீண்டும் பெறுவதற்காக சூழ்ச்சிகளில் ஈடுபட்டுக்கொண்டும் இருக்கும். இம்மாதிரியான சகல முயற்சிகளும் ஓர் உருக்குப் போன்ற சர்வாதிகாரத்தினால் மட்டும் அடக்கப்பட முடியும். அதனால் தான் தொழிலாளி வர்க்கமும் அதன் நேச அணிகளும் முதலாளித்துவ அரசாங்க இயந்திரத்தை அழித்ததும் அதைத் தொடர்ந்து பாட்டாளி வர்க்க அரசியல் அதிகாரத்தை நிறுவுதன் மூலம் தோற்கடிக்கப்பட்ட வர்க்கங்களினால் தூக்கியெறியப்பட்டாமல் இருக்கவும், புரட்சியைப் பாதுகாக்கவும் முடியும். இதைச் செய்யத் தவறினால் புரட்சியின் வெற்றி குந்தகமடையும்.

1848 இல் கம்னியூஸ்ட் அறிக்கையை எழுதியபோது மார்க்கம், எங்கெல்சும் கூட முதலாளித்துவ அரசியல் அதிகாரத்தின் இடத்தை எவ்வாறு நிரப்புவது என்பதில் ஓர் இறுதி முடிவை எடுக்கமுடியாதிருந்தனர். 1871 இல் பாரிஸ் கம்யூன் தோல்வியடைந்து இரண்டு நாட்களுக்குள் ‘பிரான்சில் உள்நாட்டு யுத்தம்” என்ற தலைப்பையுடைய அவரது பிரசித்தி பெற்ற நூலில் மார்க்ஸ், இதனை ஆராய்ந்த அனுபவங்களைக் கொண்டே, அவரால் ஒரு தீர்மானத்திற்கு வரக்கூடியதாயிருந்தது. மார்க்ஸ் இறப்பதற்கு முன் இறுதிக்கூட்டு முன்னுரையாக கம்யூனிஸ்ட் அறிக்கைக்கு செய்யப்பட்ட ஒரேயொரு திருத்தத்தை அவர் சேர்த்துக் கொண்டார்.

வேறு ஒரு கேள்வியெழுகின்றது. அரசாங்கம் எந்தக் காலத்திலும் இருந்து வருமா? வர்க்கங்களும், வர்க்க முரண்பாடுகளும் தோன்றியதன் விளைவாக அரசாங்கம் தோன்றியது போல வர்க்கங்களையும் வர்க்க முரண்பாடுகளையும் அழிப்பதோடு உருவாகும் வர்க்கங்களற்ற சமுதாயத்தில் அரசாங்கம் இறுதியில் உதிர்த்து விடும் என ஏங்கெலஸ் கூறுகிறார். அதாவது ஒடுக்கு முறை என்ற செயல் தேவையற்றது ஆகிவிடும்போது அது இல்லாமல் போய்விடும்.

இதிலிருந்து நமக்கு தெரிந்த அரசாங்கமானது ஒரு குறிப்பிட்ட சரித்திர சூழலில் தோன்றி அந்தச் சூழல் அற்றதும் மறைந்ததுவிடுகிறது. அரசாங்கமென்பது எப்பொழுதும் இருந்ததுமல்ல அல்லாவிடில் முடிவில்லாததுமல்ல. சரித்திரத்தில் ஒரு குறிப்பிட்ட கட்டத்தில் ஒரு வர்க்கத்தைப் பிறிதொரு வர்க்கம் அடக்குவதற்கான கருவியாகுமென்று குறிப்பிட்டால் அது சரியானதே. அவ்வாறான ஒரு அரசு இயந்திரம் இல்லாவிடில் இக்காவல் நாய்களின் கரங்களில் துப்பாக்கிகள் இல்லாமல் எந்த ஒரு சுரண்டும் வர்க்கமாவது சுரண்டப்படும் மக்களைத் தொடர்ந்தும் சுரண்டமுடியாது.

அதனால் தான் சுரண்டப்படும் வர்க்கங்களின் விடுதலைக்கான ஒரேயொரு மார்க்கம் சுரண்டும் வர்க்கங்களின் ஒடுக்குமுறை அரசு இயந்திரத்தை நொருக்கிவிட்டு அதனிடத்தில் தொழிலாளி வர்க்கத்தினதும் அதன் நேச அணிகளினதும் அரசு இயந்திரமான, மார்க்சின் வார்த்தைகளில் கூறுவதனால், பாட்டாளி வர்க்க சர்வாகாரத்தனால் நிரப்படுவது ஒன்றேயாகும். அரசாங்கத்தைப் பற்றிய மார்க்சியக் கோட்பாடு இதுவாகும். இதை ஏற்றுக்கொள்பவர் மார்க்சிச - லெனினிச புரட்சிவாதிகளாவர்.

•



# தோழமை என்றொரு சொல்

**- நந்தினி சேவியர் -**

தொடுப்பு - 1

20.03.2010 சனி காலை 9:30 மணி
:- ஹலோ
:- ஹலோ சேவியர் நான் கனடாவிலை இருந்து அருள்
:- சொல்லுங்கோ
:- எப்பிடி சுகமாய் இருக்கிறியளோ?
:- அருள், நான் பஸ்ஸிலை ஒருடத்துக்குப் போறன் கதைக்கிறது விளங்கயில்லை
:- அப்பசரி நான் பிறகு எடுக்கிறன்

தொடுப்பு - 2

24.03.2010 புதன் இரவு 9:00 மணி
:- ஹலோ
:- ஹலோ நான் அருள் கனடாவிலை இருந்து
:- சொல்லுங்கோ
:- எப்படி இருக்கிறியள்
:- ஏதோ இருக்கிறம்
:- சிலர் நினைக்கிறது போல நாங்களும் இஞ்சை வசதியாய் வாழிறது இல்லை.... எல்லோருக்கும் கஷ்டம் தான்
:- அது எனக்கு விளங்குத்தானே என்ன விஷயம்
:- நாங்கள் சிவத்துக்கு ஒரு மலர் வெளியிட இருக்கிறம். அவரைப்பற்றி நீங்கள் எழுதவேணும்
:- அருள் நான் இன்னும் தேறவில்லை. இந்த மாதம் 31ம் திகதி மகன்ர 1ம் ஆண்டு நினைவு வருகுது அதுக்குப்பிறகு பாப்பம்
:- அவசரமில்லை ஆறுதலாய் எழுதுங்கோ. என்ரை E மெயில் அட்ரஸ் தெரியுந்தானே. இப்ப கனக்க கதைக்கேலாது பிறகு கதைக்கிறன்.

தொடுப்பு - 3

12.04.2010 திங்கள் மாலை 6:00 மணி
:- ஹலோ
:- ஹலோ நான் அருள் கனடாவிலை இருந்து
:- சொல்லுங்கோ
:- எப்பிடி இருக்கிறியள். பவானந்தத்திட்டையும் சொல்லி இருக்கிறன்.
:- பவானந்தம் எனக்குச் சொன்னவர்
:- சிவம் டானியலின்ரை புத்தகத்துக்கு ஒரு முன்னுரை எழுதியிருக்குது, சிலபேர் சிவத்துக்கு இங்கை அஞ்சலி நோட்டீஸ் அடிச்சவை சிவஞானத்தின்ரை நினைவு மலரைப் பார்த்திருப்பியள். எனவே நல்ல ஒரு கட்டுரை எதிர்பார்க்கிறன்
:- அருள் சிவத்தைப் பற்றி என்ன எழுதவேணும் எப்படி எழுதவேணும் எண்ணிற சிந்தனையோடைதான் நான் இருக்கிறன். மனநிலை குழம்பிப்போயிருக்கு எதையும் கோர்வையாக்க முடியேல்லை. விரும்பினால் அந்த அஞ்சலிகளை எனக்கு அனுப்புங்கோ ஒரு உசாத்துணையாக அதை நான் பார்க்கிறன்.
:- இண்டைக்கே உங்கடை அட்ரசுக்கு அனுப்புறன் என்.சி.றோட் தானே.....
:- ஓம்

தொடுப்பு - 4

23.04.2010 வெள்ளி மாலை 4:30 மணி

:- ஹலோ
:- ஹலோ நான் அருள் கனடாவிலை இருந்து
:- சொல்லுங்கோ
:- எப்படி இருக்கிறியள்
:- ஏதோ இருக்கிறம், வாழ்வு கடந்து போகிறது
:- நாங்களும் இங்கை கஸ்டத்தோடதானே இருக்கிறம். அது சரி நான் அனுப்பினதுகள் கிடைச்சுதே
:- கிடைக்கேல்லை. ஐஸ்லாந்து எரி-மலை குமுறலாலை பிளேன்களும் ஓடேல்லை வருந்தானே....

:- தங்கவடிவேல் மாஸ்டரிட்டையும் கேட்டிருக்கிறம்..... சிவஞானத்தின்ரை மலரை ஒருக்கால் பாரும்..... உம்மட கட்டுரை மே 15ம் திகதிக்குள்ள கிடைச்சால் நல்லது.

:- அருள்.... சிவத்தைப் பற்றி அவர் கனடாவுக்கு வந்த பிறகு அவரது நடவடிக்கைகளைப் பற்றி உங்களுக்குச் சகலதும் தெரியும். அதுகள் எனக்குத் தெரியாது. நான் இலங்கையிலிருந்த சிவத்தைப் பற்றி என்னுடைய தொண்டை அடைச்ச சிவத்தைப் பற்றி எழுதுவன். அது சிலருக்கும் பிடிக்காமல் போகலாம். என்னால் ஒன்றையும் சரியாகக் கோர்க்க முடியேல்ல.... ஆனாலும் சிவத்தைப் பற்றிக் கண்டிப்பாக எழுதுவன்.

:- இப்ப கதைக்க முடியேல்லை. பிறகு கதைக்கிறன். ழுமு....

24.04.2010 சனி மு.ப. 11:00 மணி

சிவபுராணம் 43 வருடங்களுக்கு முன் வடமராட்சியின் கம்யூனிஸ்ட் கட்சி வாலிபர் சங்க சம்மேளன அல்வாய்க்கிளையின் மாநாட்டில் நானும் சிவமும் அறிமுகமாகினோம். நெல்லியடி வாலிபர் சங்கத்தைச் சேர்ந்த தோழர் அவர், 1967 ன் பிற்கூற்று செ. கணேசலிங்கனின் நாவல்கள் பற்றிய காரசாரமான விவாதத்துடன் எமது சந்திப்பு நிகழ்ந்தது. பாராளுமன்றத் தேர்தலைப் பகிஸ்கரிக்கும் முடிவை எமது கட்சி எடுத்திருந்த காலம். "செவ்வானம்" நாவல் பற்றிய விமர்சனத்தோடு பேராசிரியர் க. கைலாசபதியின் முன்னுரை பற்றியும் விமர்சனபூர்வமாக அணுகினோம். பின்வரும் நாட்களில் "தரையும் தாரகையும்", "போர்க்கோலம், "மண்ணும் மக்களும்" நாவல்களை நாம் விமர்சித்தமையின் முதற்படியாக அவ்விமர்சனத்தை நான் குறிப்பிடுவேன். நமது உறவு தோழமை என்றொரு சொல்லால் அளவிட முடியாதது. சின்னாம்பியின் பேக்கறி வாசலில் எத்தனை தடவைகள் அது உயிர்ப்புற்றது என்பதை நான் சொல்லாது விட்டால் கொடுமைக்காரனாவேன்.

தீண்டாமை ஒழிப்பு வெகுசன இயக்கப் போராட்டங்களின் கள பூமியாக நிச்சாமம் விளங்கிய அதே கால கட்டத்தில் நெல்லியடி - கன்பொல்லை, வடமராட்சியின் தளப்பிரதேசம் சாதி வெறியர்களின் அட்டகாசத்திற்கு பதிலடியாக கன்பொல்லை கொதித்தொழுத்தமைக்கு நெல்லியடி கம்யூனிஸ்ட் (சீனசார்பு) கட்சி தோழர்களின் பங்களிப்பும் ஒரு காரணம். சிவராசா, சிவஞானம், சிவம் - அயராத சலியாத தீவிர நடவடிக்கை அம்பலத்தாடிகளின் "கந்தன் கருணை" காத்தான் கூத்துப் பாணியில் அமைந்த நாடகம் கிராமம் கிராமமாக மேடையேறி போராட்டத் தீயை வளர்த்த காலம். சிவமும் அம்பலத்தாடிகளோடு கிராமம் கிராமமாக சென்றமை மறக்கற்பாலது. ஆனந்தனின் "ஐயா மேடைக்கு வருகிறார்" நாடகத்தினை ஊக்குவிப்பாளன் சிவம். கலை இலக்கியத்தின் பங்களிப்பு பற்றி "மாஓவின்" ஜெனான் கருத்தரங்கு உரையினை வைத்துக் கொண்டு நீண்ட கருத்தாடல்கள் "தாயகம்" தேசிய கலை இலக்கியப் பேரவையின் வெளியீடாக வருவதற்கு முன்னரே பலவித வாதப் பிரதிவாதங்கள்.



**நெல்லியடி - கன்பொல்லை, வடமராட்சியின் தளப்பிரதேசம் சாதி வெறியர்களின் அட்டகாசத்திற்கு பதிலடியாக கன்பொல்லை கொதித்தொழுத்தமைக்கு நெல்லியடி கம்யூனிஸ்ட் (சீனசார்பு) கட்சி தோழர்களின் பங்களிப்பும் ஒரு காரணம்.**

ரோகண விஜயவீரவின் ஏப்ரல் கிளர்ச்சியின் பின்னர் தோழர் சண்முகதாசன் கைது. வட பிரதேசத்தில் டானியல், தீ.ஓ.வெ. இயக்கத்தலைவர் எஸ்.ரி.என் ஆகியோரும் சிறையில். "சண்" வெளியால் வருவதற்கு முன்னரே திட்டமிட்ட முறையில் வீ.ஏ. கந்தசாமி, மு. கார்த்திகேசன், வாட்சன் பெர்னாண்டோ, நீர்வை பொன்னையன், இளங்கீரன் குமாரசாமி போன்றவர்கள் கட்சியைப் பிளவு படுத்த முனைந்தனர். கே.ஏ. சுப்பிரமணியம், காந்திஒபயசேகரா, ரத்னாயக்கா, சீ.கா. செந்திவேல், சிவராசா, சிவஞானம் ஆகியோ-ரின் அயராத முயற்சியால் நிச்சாமம், நெல்லியடி, கன்பொல்லை, பொலிகண்டி, அல்வாய், இருபாலை போன்ற கிளைகள் உடைக்கப்படவில்லை. கிராமம் எங்கும் சிறுசிறு இரகசியக் கூட்டங்கள் அவற்றில் ஒரு அங்கமாக சிவமும்.

தோழர் சண்முகதாசனின் கட்சி தனது பணியைத் தொடர்ந்தது. கலை இலக்கியத்துறையில் தேசிய கலை இலக்கியப்பேரவை உருவா கியது. அதன் வெளியீடாக "தாயகம்" 1974 இல் முதல் இதழ். போராட்ட உணர்வுடன் கூடிய எழுச்சிமிகு படைப்பாளர்கள் இணைந்து திருகோண மலையில் நடாத்திய இலக்கிய மாநாட்டில் புதிய ஜனநாயகத்தை முன்னிறுத்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அதில் முன்னணித் தோழராக எங்கள் சிவம். "ஆற்றல் மிகு கரத்தில் ஆயுதங்கள் ஏந்துதலே மாற்றத்திற்கான வழி மாற்றுவழி ஏதுமில்லை" என்ற எஸ்.ஜி. கணேசவேலின் கவி வரிகளுடன் எத்தனையோ கவியரங்குகள்,

சுபத்திரன், எஸ்.ஜி.கணேசவேல் புதுவை இரத்தினதுரை, முருகுகந்தராசா, நந்தினி சேவியர் ஆகியோர் படித்த கவிதைகள் எல்லாம் வீறுடன் ஒலித்தகாலம் நெல்லியடியில் சித்திரைப்புத்தாண்டு தினத்தில் நடக்கும் இலக்கிய நிகழ்வுகளில் இயல், இசை, நாடகங்கள் என புரட்சிகர அறை கூவல்களை முன்னெடுத்தோம். அதிலும் சிவராசா சிவஞானம் ஆகியோருடன் எங்கள் தோழர் சிவமும்.

வட்டுக்கோட்டைத் தீர்மானம் தனிநாடு எனத் தமிழரசுக்கட்சி தீர்மானித்த காலம் தனிநாடு சாத்தியமா? சாத்தியமில்லையா? என பகிரங்க விவாதம். தனிநாடு சாத்தியமில்லை எனும் அணியில் சி.கா. செந்திவேல் தலைமையில் நானும் வன்னியசிங்கமும் சாத்தியம் எனும் அணியில் ஈழவேந்தன் தலைமையில் மாவை சேனாதிராஜா மற்றும் ஒருவர் தனிநாடு சாத்தியமில்லை எனும் எமது அணி ஈழவேந்தன் அணியை ஆனைக்கோட்டையில் நடந்த அந்த விவாதத்தில் வென்றது. எனது வாதத்திற்கு பல தரவுகளைத் தந்து பின்னின்று ஊக்குவித்தவர் தோழர் சிவம்.

எழுதுவதில் மிகவும் சோம்பலானவனான என்னை பலவந்தமாக எழுதப்பண்ணிய பெரும் பொறுப்பு சிவத்தைச் சார்ந்தது. "ஒரு நாள் பொழுது", "நீண்ட இரவுக்குப் பின்" ஆகிய கதைகளின் உருவாக்கத்தில் சிவத்தின் விமர்சனம் கூடிய பங்களிப்பைச் செய்துள்ளது. தாயகத்தில் "மானுடன்", "பாமரன்" எனும் பெயரில் சிவம் சில கவிதைகள் எழுதியமைக்கு எனது தூண்டுதலும் ஒரு காரணமாக இருக்கலாம். "ஏதோ எழுதுகிறேன், ஒருக்கால் பாரும்" என தான் எழுதிய கவிதையை என்னிடம் காட்டுவார். சிலநேரம் எனது விமர்சனம் அவரை எழுதாமல் பண்ணியதோ என்று நான் பலதடவை யோசித்திருக்கின்றேன். பின்னாளில் அவர் "மானிடம்" எனும் பெயரில் கட்டுரைகள் எழுதியதாக அறிகிறேன்.

ஏலவே "பாராளுமன்றம் கள்வர்குகை" என்ற எஸ்.டி. பண்டாரநாயக்காவின் பேச்சுடன் தேர்தலைப் பகிஸ்கரிக்கும் இயக்கமாக நாம் மாறியிருந்தோம். அக்காலத்தில் தொழிலாளர் தினத்தில் (மே தினம்) வெசாக் தினம் வந்த போது நமது உறுதியான நிலைப்பாட்டுடன் மேதினத்தை முன்னெடுத்து முன் மாதிரிகையை நாம் காட்டினோம்.

இன்று தேர்தல் பகிஸ்கரிப்பையும், மேதின நிகழ்வையும் தவறானவை-யென பேசக்கூடிய அளவுக்கு முன் வந்துள்ளவர்கள் நமது கட்சியை உடைத்து பின்னாளில் "புதிய ஜனநாயகக் கட்சியை" உருவாக்கியதோடு கடந்த தேர்தலில் பங்குபற்றி படுதோல்வியைத் தழுவி மக்களால் நிராகரிக்கப்பட்டதும் கூட வேடிக்கை அல்ல மூன்று உலகக்கோட்பாடு தவறானது. சீனா முதலாளித்துவப் பாதைக்குச் செல்கிறது என்ற எமது கட்சியின் கூற்றை நிராகரித்தவர்கள், சகல குற்றச்சாட்டுக்களையும் புத்தகவாத சண்முகதாசன் தான் செய்தார் என்று பகிரங்கமாக எழுதியும் பேசியும் வந்தவர்கள், இன்று தவிர்க்க முடியாதபடி சண்முகதாசனைக் கூறி தமது கட்சிக் கொள்கைகளை விளக்க வேண்டிய நிலைக்கு பரிதாபமாகத் தள்ளப்பட்டுள்ளனர். கே. ஏ. சுப்பிரமணியம், சி.கா. செந்திவேல், சிவசேகரம் (இவர் தான் சண்முகதாசன் பற்றி வி.ஏ. கந்தசாமியடன் சேர்ந்து முழு விமர்சனம் செய்தவர். யாழ்ப்பாணத்தில் வி.ஏ. கந்தசாமிக்கு விசுவாசமான இயக்கச்சி மணியம் போன்றோருடன் சேர்ந்து பிரசாரம் செய்தவர்). இன்று இவர்கள் சண்முகதாசனை ஒரு விட்டுக் கொடுக்காத விலைபோகாத தலைவராகக் காட்ட வேண்டிய தேவை எழுந்துள்ளது.



**TELO வெளியிட்ட துண்டுப் பிரசரத்தில் சிவம், சிவராசா, இரத்தினம் ஆகியோருடன் சேர்ந்து தமிழீழ போராட்டத்துக்கு துரோகமிழைத்தமைக்காக தாஸ் தண்டிக்கப்பட்டதாக குறிப்பிடப்பட்டிருந்தது.**

கிளிநொச்சியில் சண்முகதாசனின் ஒரு பகிரங்க சொற்பொழிவு நடைபெற்ற போது சிவமும் நானும் இன்னும் சில தோழர்களும் கைது செய்யப்பட்டு லொக்கப்பில் வைக்கப்பட்ட போது தோழர் சிவஞானம் எங்களைப் பிணையில் எடுத்த சம்பவம் எனக்கு நினைவு வருகிறது. அச்சம்பவத்திற்குப் பின்னர் எம்மால் சிலரை அடையாளம் காண முடிந்தது நாம் "சண்"ணின் கொள்கையில் அசையாத நம்பிக்கையுடன் இருந்தோம். உரும்பிராய் சிவகுமாரனின் மரணத்தின் பின் தமிழ் இளைஞர் பேரவையில் இருந்து வரதராஜப்பெருமாளை விலக வைத்தமையிலும் நானும் சிவமும் கூடிய பங்கு வகித்தமையை நான் நினைவு கூருகிறேன். இன்று சுயவிமர்சனம் செய்து சண்ணை ஏற்றுக்கொள்பவர்கள் அன்று இந்த நிலையை எடுத்திருந்தால் கட்சியை பாதுகாத்திருக்க முடியும். இந்த ஆதங்கம் சிவத்திடமும் இருந்தது.

தமிழ் இயக்கங்கள் தலையெடுத்த காலத்தில் கம்யூனிஸ்ட் இயக்கம் பாரிய பின்னடைவுகளைக் கண்டது கம்யூனிஸ்டுக்கள் மாற்று இயக்கங்களின் பக்கம் சரியத் தொடங்கினர்.

வி.ஏ. கந்தசாமி E.P.R.L.F<br>
சிவதாசன் E.P.R.L.F - E.P.D.P<br>
மட்டுவில் சுப்பையா E.P.R.L.F- E.P.D.P<br>
கரவைக் கந்தசாமி PLOTE<br>
கிளிநொச்சி மூர்த்தி L.T.T.E.<br>
யோகேந்திரன் L.T.T.E.<br>
M.A.C. இக்பால் முஸ்லிம் காங்கிரஸ்<br>
ஆனால் நாங்களோ மாறவில்லை.

L.T.T.E வடமராட்சியில் மிகவும் பின்நிற்க TELO இயக்கம் வடமராட்சியில் துரித வளர்ச்சி கண்டது. துரோகிகளுக்கு தண்டனை வழங்குவதில் TELO தீவிரமாக இருந்தது. வடமராட்சியின் "தாஸ்" கொஞ்சம் கொஞ்சமாக சிவம், சிவராசா, இரத்தினம் போன்றோரின்

கொள்கையைப் புரிந்துணர்வுடன் ஏற்றுக் கொள்ளும் நிலை தோன்றி வந்தது. யாழ்ப்பாணப் பிரதேசத்தில் "பொபியும்" வடமராட்சியில் "தாசும்" தீர்க்கமான சக்திகளாகப் பரிணமித்திருந்தனர்.

தமிழகத்திலிருந்த ஸ்ரீசபாரத்தினத்தின் கட்டளைகளை பொபியும், தாசும் நிறைவேற்ற வேண்டும். தமிழ் விடுதலைக் கூட்டணியைச் சேர்ந்த உடுவில் தர்மலிங்கம், ஆலாலசுந்தரம், க. துரைரத்தினம், இராசலிங்கம் ஆகியோரைப் போட்டுத் தள்ளும்படி பொபிக்கும் தாசுக்கும் சுபாரத்தினத்தால் உத்தரவு பிறப்பிக்கப்பட்டு மேற்படி நால்வரும் சுடப்பட்டதாக இந்திய வானொலிச் செய்தியிலும் அறிவிக்கப்பட்டிருந்தது. ஆனால் பொபி தனது உத்தரவை நிறைவேற்றியது போல் தாஸ் நிறைவேற்றவில்லை. பின்னர் தாஸ் துரோகத்தனமாக யாழ் மருத்துவமனைக்கு அழைக்கப்பட்டு கொடூரமாகக் கொலை செய்யப்பட்ட பின்னர் TELO வெளியிட்ட துண்டுப் பிரசரத்தில் சிவம், சிவராசா, இரத்தினம் ஆகியோ ருடன் சேர்ந்து தமிழீழ போராட்டத் துக்கு துரோகமிழைத்தமைக்காக தாஸ் தண்டிக்கப்பட்டதாக குறிப்பிடப்பட்டிருந்தது.

சிவம் இறக்கும் வரை தமிழ் பேசும் மக்களின் சுயநிர்ணய உரிமைக்காக குரல் கொடுத்தடுன் L.T.T.E இன் தவாறன நடவடிக்கைகளை வன்மையாகக் கண்டித்து வந்துள்ளார். பேரினவாத அரசின் போர் நடவடிக்கை முற்போக்கானதல்ல. சிறுபான்மை இனம் மீதான ஒடுக்கு முறையே இப்போர். இதற்கெதிராக சிறுபான்மை இனம் போராட வேண்டும். அதற்கான தேவை இப்போது உள்ளது. உலகளவில் இதனை மையமாக வைத்து போராட்டங்கள் தெடர வேண்டும் என்ற கருத்தை வெளிப்படுத்தியவர் இதன் மூலம் தேடகத்தின் மீது L.T.T.E. முத்திரை குத்தப்பட்டது. முஸ்லிம் மக்கள் L.T.T.E. யால் வடபிரதேசத்தில் இருந்து வெளியேற்றப்பட்ட போது முஸ்லிம்களுக்காக குரல் கொடுத்ததும் தேடகம் தான்.

தவறானவை எங்கிருந்து வந்தாலும் எதிர்ப்பதும், சரியானதிற்காக விட்டுக்கொடுக்காத போராட்டத்தை நிகழ்த்துவதும் ஓர் உண்மையான மார்க்சிஸ்டின் கடமை. சிவம் ஓர் உண்மையான மார்க்சிஸ்ட்.

சுயபுராணம்

தோழா, நான் இழப்பினால் சோர்ந்து போயுள்ளேன். உன் இழப்பு என்னை பலவிதத்திலும் பாதித்துள்ளது. பல தடவைகளில் என் பசிக்கு உணவு இட்டவன் நீ. உனது கிட்னி இரண்டும் பாதிக்கப்பட்ட போதும் கலங்காதவன் நீ. எனது பைபாஸ் சத்திரசிகிச்சைக்கு நிதி உதவியவன் நீ. உன்னை நீண்ட நெடுவருடங்களின்பின் அஞ்சலித் துண்டுப் பிரசுரத்தில் தான் கண்டேன். தொண்டை அடைத்த சிவமென அன்போடு என்னால் அழைக்கப்படும் தோழனே உனது குரல் தொலைபேசியில் கடைசியாக ஒலித்த போது தேடலுக்கு படைப்புக்கள் அனுப்பும் படி கூறினாய். செ. கதிர்காமநாதனின் படைப்புக்களை முழுமையாக வெளியிட வேண்டுமென்றாய். ஏதேதோ எதிர்பார்ப்புக்கள், விருப்புக்கள். ஆயினும் பெரும் இழப்புக்கள் அடுத்தடுத்து நிகழ்ந்துவிட்டன. உன் மனைவி பிள்ளைகளை நான் அறியேன். உன் இழப்பினால் அவர்கள் அடையும் துயரினை நான் உணர்ந்தேன். உன்னை என் மகன் அறிவான். சிவம் மாமாவின் முகத்தை அவன் அறியான். உன் குடும்பத்தாருக்கு ஆழ்ந்த அனுதாபங்களை நான் கண்ணீருடன் சமர்ப்பிக்கின்றேன். என்னால் எதையும் தொகுத்து எழுத முடியவில்லை தோழா. உனது ஆறுதல் வார்த்தைக்காக 24 நாட்கள் நான் காத்திருந்தேன். உன் இழப்பே செய்தியாகக் கிடைத்தது.

தோழா, எதை எழுத,
எதை எழுதாமல் விட
போய் வா தோழா

அன்றும் இன்றும் என்றும்
தோழமையுடன்
உன்
நந்தினி சேவியர்

முடிப்பு-01.05.2010 சனி 11:30 மு.ப. மேதினம்

# பிரார்த்தனை

குழந்தைகள்
காணாமற் போகின்றார்கள்
கடத்தப்படுகின்றார்கள்
காவும் கொள்ளப்படுகிறார்கள்

87களில்
கொடுமிருளாய் துரத்திய
சம்பவங்களில்
எனது பிரார்த்தனை
என்றுமே வளர்ந்துவிடக் கூடாது
என்பதாய் இருந்தது

இன்றும்
எத்தனை குழந்தைகள்
பாயில் மூத்திரம் பெய்தபடி
இரவுகளை வெறித்துப்
பார்க்கின்றனவோ...?

-இளங்கோ-
2006

# இலங்கையின் இன முரண்பாட்டை தீவிரமாக்கியதில் வெளிநாட்டு உதவி!

ரோஸ் மல்லிக்
Ross Mallick 1998
தமிழில் - திருவேணிசங்கமம்

மகாவெலி நீர்பாசனத் திட்டம் போல் சர்வதேச உதவியைப் பெற்றுக்கொண்ட திட்டம் வேறொன்றுமில்லை எனலாம். ஐதாக சனம் வாழும் இலங்கையின் உட்பிரதேசங்களை சனச்செறிவு மிகுந்த விவசாயப் பிரதேசங்களாக மாற்றுவதே இத்திட்டத்தின் கொள்கையும் நோக்கமுமாகும். இதன் முக்கிய குறைபாடு தொழில்நுட்பம் சார்ந்தது அல்ல. மாறாக அது இலங்கையின் இன முரண்பாடு தீவிரமடைய உதவியதாகும். இந்த திட்டத்தில் உள்ளார்ந்துள்ள அரசியல் சிக்கல்கள் மற்றும் இன வேறுபாடுகள் போன்றவை ஆதார பூர்வமாக நிரூபிக்கப்பட்டுள்ளன. ஆயினும் அது இன முரண்பாட்டை தீவிரமாக்கி கொடிய உள்நாட்டு போருக்கு வித்திட்டமை பற்றி பெரிதாக யாரும் குறிப்பிடப்படவில்லை.

வரலாற்று விளக்கங்களின் படி மகாவெலித் திட்டம் ஒரு ஆயிரம் வருடங்கள் பின்னோக்கி செல்கிறது. அப்போதைய சிங்கள ராஜதானிகள் வரண்ட வலயத்தில் சிறப்பான நீர்ப்பாசன தொழில்நுட்பத்தின் மூலம் குடியேற்றத்திட்டங்களை நிறுவி இருந்தன. ஏன் இந்த குடியேற்றத் திட்டங்கள் வரலாற்றிலிருந்து மறைந்தன? இதற்கு தென் இந்தியாவிலிருந்து வந்த தமிழ் அக்கிரமிப்பாளர்கள் தான் காரணமென்கின்றனர் சிங்கள தேசிய வாதிகள். ஆனால் இந்தப் பகுதியில் மலேரியா தீவிரமாகப் பரவி இருந்தமையே பொதுவான ஏற்றுக்கொள்ளத்தக்க விளக்கமாகும்.

இந்த நாட்டில் தமிழர்களின் சனத் தொகை 19 சதவீகிதமாகும். ஆயினும் வடக்கு கிழக்கு பிரதேசங்களை அண்டிய பகுதிகளில் பெருமளவிலான சிங்கள குடியேற்றங்களை நிறுவி அவர்களின் விகிதாசாரத்தை மாற்றியமைத்தது. இதற்கு சாதகமாக தேர்தல் தொகுதி-களை மீள் நிர்ணயமும் அமைந்தது. இதன் மூலம் சிங்களவர்களுக்கு அவர்களின் சனத்தொகை விகிதாசாரத்துக்கு மேலாக பாராளுமன்ற பிரதிநிதிகள் கிட்டினர். இவ்வாறு மகா வெலி நீர்ப்பாசனத் திட்டம் 1970களில் நிலை கொண்டிருந்த இன சமநிலை-யையும் அமைதியையும் சீர்குலைத்தது.

### இனக் குழும வளர்ச்சி

வெளிநாட்டு உதவி நிறுவனங்களின் பங்களிப்பு இன முரண்பாடு தீவிர மடைந்தமைக்கு காரணமென்பது மறைமுகமாக சுட்டிக்காட்டப்பட்டு வந்துள்ள ஒன்று. “இலங்கைத் தமிழர்கள் கிழக்கிலங்கையில் சிங்கள குடியேற்றத்தை முற்று முழுதாக எதிர்த்து வந்திருக்கிறார்கள். இதனால் சர்வதேச கொடை நிறுவனங்களின் உதவியைப் பெற்ற மகாவெலித் திட்டமும் சர்ச்சைக்குரியதாக இருந்தது. ஏனென்றால் இக் குடியேற்றத்திட்டம் சிங்கள குடியேற்றவாசிகளை பெரிதும் ஈர்த்திருந்தது” என்று ஹெரோவிற்ஸ் குறிப்பிடுகிறார். பீபிள்ஸ், மனோகரன், தம்பையா போன்றவர்களும் இத்திட்டத்தின் எதிர் மறை விளைவுகளை எடுத்துக் கூறியுள்ளனர். இந்த மகாவெலி திட்டம் வரண்ட வலயத்தின் தமிழ் மக்கள் செறிந்து வாழும் வட கிழக்கு பகுதிகளில் சிங்களவரை குடியேற்ற வேண்டும் என்ற சிங்களவரின் மனோபாவத்தை பிரதிபலிக்கிறது என்றும் சாந்தி பி.குமார் கூறுகிறார். இருந்த போதிலும் இன முரண்பாடுகள் தீவிரமடைய வெளிநாட்டு உதவிகள் தூண்டுகோலாக இருந்தமைபற்றி குறிப்பிடத்தக்க ஆய்வுகள் ஏதும் வெளிவரவில்லை. உலக வங்கியின் தலைவர் ரோபேர்ட் மக்னமாரா போன்றவர்கள் இது பற்றி கருத்து சொல்ல தயக்கம் காட்டியபோதிலும் லெவி இந்த திட்டத்தில் வெளிநாட்டு உதவியின் பாதக விளைவுகள் பற்றி குறிப்பிட்டுள்ளார். மேலும் இத் திட்டம் பொருளாதார வளர்ச்சிக்குரிய சாத்தியங்களை குறைவாகவும் சரியான முறையில் தயாரிக்கப்படாமலும் இருந்தது. இவைகளை விடவும் இனச் சார்பு கொண்டதாக இருக்கிறதெனவும் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது. “நீருக்கு நிறமில்லை நிறம் கொடுத்தால் நீர் கெட்டுவிடும்” போன்ற பாசாங்கு வார்த்தைகளை கூறி சகல தடைகளையும் மேவி தான் விரும்பியதை இலங்கை அரசு சாதித்துக்கொண்டது. இந்த நீர்ப்பாசனத்திட்டத்தில் தமிழர்கள் வாய்க்காலின் கடைக்கோடியிலும் சிங்களவர்கள் வாய்க்காலில் முன்னும் குடியேற்றப்பட்டார்கள். இதனால் நீர்ப்பாசனத்திற்கு சிங்கள விவசாயி களின் தயவில் நிற்க வேண்டிய நிலை தமிழ் விவசாயிகளுக்கு எழுந்தது. தமிழர்களுக்கு அதிகாரம் இல்லாததால் பிரச்சனை வெளிவரவில்லை. ஆனால் வேண்டுமென்றும் அரச துறையிலிருந்து ஒதுக்கப்பட்டார்கள். கல்வி வழிவந்த மத்திய தர வர்க்க தொழில்களிலிருந்தும் ஓரம் கட்டப்பட்டார்கள். இது முன்னைய காலங்களில் அவர்கள் பெற்றிருந்த நிலமைக்கு முற்றிலும் மாறானது.

மகாவெலி திட்டத்தின் வெளிப்படையான செயல்பாடு விவசாயத்துக்கு நீர்ப்பாசனம் வழங்குவதாகவும் மின் சக்தியை பிறப்பிப்பதாகவும் இருந்தாலும் அதன் உள்ளார்ந்த நோக்கம் தமிழர்களை அரசியல் பொருளாதார செயல்பாடுகளிலிருந்து ஒதுக்குவதை நோக்கமாக கொண்டிருந்தது. இதன் உள்ளார்ந்த நோக்கம் பற்றி காகிதத்தில் எழுதப்படவில்லை. எனினும் திட்டத்திற்கு பொறுப்பானவர்கள் மனதில் ஆழப் பதிந்திருந்தது. இலங்கை அரசாங்கம் இந்த அரசியல் நோக்கத்தையிட்டு மிகத் தெளிவாக இருந்தது. இந்த நோக்கத்தை

**திட்டத்துக்கான பணத்தை பெறுவதற்காக உலக வங்கி மற்றும் கொடை நிறுவனங்களை இலங்கை சூழ்ச்சித் திறமுடன் மடக்கியுள்ளது. எவ்வாரு இலங்கை அரசும் தனது இனத்திரட்சி கோட்பாட்டை செயல்படுத்துவதற்காக வெளிநாட்டு உதவியை பயன்படுத்திக் கொண்டது என்பதும் இது உள்நாட்டுப் போருக்கு உந்து சக்தி கொடுத்தது என்பதும் தெளிவாகும்**

இந் நிலமை தமிழ் கொரில்லாக்கள் தோற்றமெடுக்க வழி சமைத்தது.

எந்த உதவித் திட்டமும் அதனு டைய சமூக, அரசியல் அம்சங்களை கணக்கில் கொள்ளாமல் வழங்கப்பட்டால் பாதகமான பின் விளைவுகளைத் தரும், சனத்தொலையில் 72 வீதம் பெரும்பான்மையினரை கொண்ட நாட்டில் அப்பெரும்பான்மையினரின் இரு பெரும் அரசியல் கட்சிகளும் ‘நான் முந்தி, நீ முந்தி என்று தங்களது இன மேலாண்மையை மேலோங்க செய்ய போட்டி போடும் ஒரு நாட்டில்’ இவ்வாறான உதவியின் விளைவுகள் என்னவென்பது வெளிப்படையானது. இதன் விளைவாக 19 சதவீதத்தினரான தமிழர்கள் நிறுவன ரீதியாகவும் அடைய அது கடுமையாக முனைந்தது. நன் கொடையாளர்களின் பங்களிப்பு இந்த விடயத்தில் சந்தேகத்திற்கு இடமற்றது. எனினும் அவர்கள் தங்கள் உதவி ‘இனத் திரட்சியாக்கம்’ [ethnic swarming] என்னும் செயற்பாட்டிற்கு துணை போயிருக்கிறதென்பதை எப்போது உணர்ந்து கொண்டார்கள் என்பதை உறுதியாக சொல்ல முடியாது. ‘இனத் திரட்சியாக்கம்’ என்னும் செயல்பாடு யூகோசிலேவியாவின் நடைமுறையை குறிப்பிடும் பதப் பிரயோகமாகும். பின் காலனிய அரசியலில் ஆதிக்கம் இலங்கையின் இனப்பிரச்சினை எங்கும் அறியப்பட்ட ஒன்று. ஆயினும் மகாவெலி திட்டத்தில் மறைந்திருக்கும் இலங்கை அரசின் இனக் கொள்கையை மிகவும் தாமதித்துத்தான் நன்கொடையாளர்கள்

புரிந்து கொண்டார்கள். சிங்கள இனத்தின் ஒற்றைத் தனி இனமாக தான் மாத்திரமே கோலோச்ச வேண்டும் என்ற வேண-வாவை அவர்கள் புரிந்து கொள்ள தவறி விட்டனர். ஆனால் தமிழர்களுக்கு இது தெரியும். இலங்கையில் வரலாறு பற்றி மேலோட்டமான அறிவுதாயினும் உள்ள எவரும் இதை அறிவர். இந்த நாட்டின் சகல பிரச்சனைகளுக்கும் மையமாக இருப்பது இனச் சிக்கல்தான் என்பது புரியும்.

நன்கொடையாளர்களுக்கு சொல்லப்பட்டது என்னவென்றால் பல திட்டங்களை நடைமுறைப்படுத்தி அனுபவம் பெற்ற பொது உத்தியோகத்தர்கள், இராஜ தந்திரிக மற்றும் உதவி பணியாளர்கள் எங்கள் கையில் உள்ளார்கள். அவர்கள் சாதகமான இன நடைமுறையைக் கையாண்டு பழக்கப்பட்டவர்கள். அதனால் பாதகமான விளைவுகள் நடைபெறாது.

செய்துள்ளனர். லேவி தனது பிரத்தியேக ஆய்வுக் கட்டுரையில் இலங்கை அரசாங்கம் இந்த திட்டத்துக்கான பணத்தை பெறுவதற்காக உலக வங்கி மற்றும் கொடை நிறுவனங்களை எவ்வாறு சூழ்ச்சித் திறமுடன் மடக்கியது என்பதை விபரித்துள்ளார். இந்த விபரங்களையெல்லாம் ஒன்று சேர்த்து பார்க்கிறபோது எவ்வாரு இலங்கை அரசு தனது இனத்திரட்சி கோட்பாட்டை செயல்படுத்துவதற்காக வெளிநாட்டு உதவியை பயன்படுத்திக் கொண்டது என்பதும் இது உள்நாட்டுப் போருக்கு உந்து சக்தி கொடுத்தது என்பதும் தெளிவாகும்.

இலங்கை அரசாங்கத்தினதும் மேற்கு கொடையாளிகளினதும் ஈடுபாடுகள் ஒன்றிணைந்தமையால்தான் இந்த திட்டம் உதவியை பெற்றுக் கொள்ள முடிந்தது. இக் காலத்தில் 1977 யுஎன்பி அரசாங்கம்

**அரசாங்க குடியேற்றத் திட்டங்கள் மிகவும் குறைந்த பொருளாதார வளர்ச்சியையே காட்டினாலும் இனவாத அரசியல் அதை நியாயமாக்கியது. அது சிங்கள அரசியல்வாதிகளுக்கு அதிகாரம் வழங்கும் தளமாக இருந்த வேளையில் கொடையாளிகள் தங்கள் பங்களிப்புக்காக திறந்த பொருளாதாரத்தை கோரி நின்றனர்.**

நன்கொடைச் சமூகத்தின் உறுப்பினர்கள் அந்த நேரத்தில் திட்டத்தின் உள்ளார்ந்த குறைபாடுகளையும் மட்டுப்படுத்தப்பட்ட மூலதன மீளலையும் மாத்திரமே கருத்தில் கொண்டார்கள். உலக அளவில் சிறிதளவு செல்வாக்கையும் செல்வத்தையும் கொண்டிருந்த போதிலும் இலங்கை அரசு இந்த தடைகள் எல்லாவற்றையும் ஒருவாறு மேவி வெளிநாட்டு நிதியை சுவீகரித்துக் கொண்டது.

எவ்வாறு இலங்கை அரசு தனது இனத்திரட்சியாகல் கொள்கையை மறைத்து வெளிநாட்டு உதவிகளை சுவிகரித்துக் கொண்டது என்பது கல்விசார் ஆய்வுகளில் குறிப்பிடப்படவில்லை. இருந்த போதிலும் பீபிள்ஸ், மனோகரன் போன்றோர் இந்த விடயத்தை பதிவு

பதவிக்கு வந்தது. உலக வங்கியினதும் மேற்கு கொடையாளிகளினதும் ஆலோசனையின் பிரகாரம் அமைப்பியல் மாற்றங்களை மேற்கொண்டு சுயாதீன பொருளாதாரக் கொள்ளையை கொணர்வது இந்த அரசாங்கத்தின் கொள்கையெனப் பிரகடனப் படுத்தப்பட்டது. முன்னைய ஸ்ரீ லங்கா அரசாங்கத்தின் மூடுண்ட பொருளாதாரக் கொள்கையும் அதனோடு இணைந்த ஜனநாயக நிறுவனங்களும் சிறிய ரக திட்டங்களும் உலக வங்கியின் அமைப்பியல் மாற்றத்திற்கு தோதாக அமைந்திருந்தன. அத்தோடு மூன்றாம் உலக நாடுகளும் சோவியத் ஆதரவு அரசாங்கங்களும் இந்த சுயாதீனக் கொள்கையில் இருந்து தூர விலகி இருந்த காலையில் இலட்சிய உதாரண-மாக எடுத்துக் காட்ட கூடியதாக

இலங்கை அவர்களுக்குத் தோன்றியது.

இலங்கை அரசாங்கமோ வெளிநாட்டு கொடையாளிகளோ அரச துறையையும் அதனால் மானியம் பெறும் சமூக சேவை-களையும் உற்பத்தியற்ற மூலதனப் பயன்பாட்டையும் குறைக்க முடியவில்லை. அரசாங்கத்திற்கு மகாவெலி திட்டங்கள் போன்ற அரச மானியத்தாலும் பொது மூலத்தாலும் திருப்திப்படுத்த வேண்டிய வாடிக்கையாளர்கள் வேறு இருந்தனர். அரசாங்கம் உறுதியான அடித்தளத்தை கொண்டிருந்ததால் வெளிநாட்டு அழுத்தத்துக்கு பணிந்து பூரணமாக சுயாதீனப் பொருளாதாரத்தை நிலை நிறுத்தவில்லை. இரண்டு பொருளா-தாரக் கொள்கைகளும் ஒன்றிலிருந்து ஒன்று மாறுபட்டன. அரசாங்கமோதனது வாடிக்கையாளர்களின் தேவையை நிறைவேற்றிக் கொண்டு மேற்கு கொடையாளிகளின் விருப்பத்தை செயல்படுத்த முனைவதாக வெறும் வாய்ப்பந்தல் போட்டுக் கொண்டிருந்தது. கொஞ்சம் கூட பொது நடை முறைகள் இல்லாமல் மந்திரிகள் அவரவர் பாட்டில் இயங்கும் ஒரு நாட்டில் அடக்கச் செலவு அதிகரித்தமையால் பேரின அடிப்படையிலான திறந்த பொருளாதாரக் கொள்கை பற்றி யாரும் அக்கறைப்படவில்லை. ஆயினும் 1978 - 1982 காலப்பகுதியில் மூன்று மடங்காக அதிகரிக்கப்பட்ட வெளிநாட்டு நிதியம் மகாவெலி திட்டத்திற்கு கிடைத்தது.

உட்பிரதேசங்களில் நீர்ப்பாசனத்தை ஏற்படுத்த வேண்டுமென்ற எண்ணம் சிங்கள தேசிய வாதிகள் மத்தியில் காலனிய காலத்தில் உருவானதாகும். ஆனால் அது வீறுடன் நடைமுறைப்படுத்தப் பட்டது சுதந்திரத்திற்கு பின்னராகும். மகா வெலி திட்டத்தால் வேலைவாய்ப்புக்கள் அதிகரிக்கப்படுவதால் இன நெருக்கடி குறையும் என்று கூறப்பட்டது. மகா வெலி திட்டத்திற்கு முன்னரே குடியேற்றத் திட்டங்கள் சிங்கள பெரும்பான்மையையும் தமிழ் சிறுபான்மையையும் பிரித்து விட்டது.

தமிழ் பகுதிகளில் இருந்த இன விகிதாசாரத்தை இந்த சிங்கள குடியேற்றங்கள் பாரிய அளவில் மாற்றி விட்டது. குறைந்தது வட கிழக்கு மாகாணங்களில் 30 வருட காலத்துள் 165670 சிங்கள மக்கள் குடியேற்றப்பட்டார்கள். 1953ல் 46500

இருந்த சிங்கள மக்களின் சனத் தொகை சட்டென 1981ல் 243000 அதிகரித்தது. இந்த அதிகரிப்பு 425 சதவீதமாகும். அதே நேரத்தில் தமிழ் முஸ்லிம் மக்களின் அதிகரிப்பு முறையே 145,136 வீதமாக இருந்தது. இவ்வாறு அபரிமிதமான சிங்கள மக்களின் சனத்தொகையை அதிகரிப்பதே இந்த குடியேற்றத்திட்டங்களின் நோக்கமாகும்.

இந்த குடியேற்றத் திட்டம் நாட்டின் தேசிய இன விகிதாசாரத்தை பிரதிபலிக்கவேண்டுமேயல்லாது குடி யேற்றத் திட்டம் நடக்கும் மாவட்டத்தையல்ல என்பது அரசின் கருத்தாக இருந்தது. இதனால் தவிர்க்க முடியாத வகையில் இனத்திரட்சியாதல் செயற்பாட்டுக்கு வட கிழக்கில் பெரும்பான்மையினராக வாழ்ந்த தமிழர்கள் உட்பட்டார்கள். உதாரணமாக ஒரு குடியேற்றத்திட்டத்தில் குடியேற்றப்பட்ட 225 குடும்பங்களில் இரண்டு குடும்பங்கள் மாத்திரமே கத்தோலிக்கர்கள். மீதிக் குடும்பங்கள் அத்தனையும் பௌத்தர்கள். இது அரசாங்கத்தின் கொள்கைதானும் சரியாக நடைமுறைப்படுத்தப்படவில்லை என்பது எடுத்துக் காட்டுகிறது. தேர்தல் தொகுதிகளையும் தமது விருப்பத்திற்கேற்ப பிரித்து அமைத்துக் கொண்ட சிங்கள அரசியல் வாதிகளின் செயல்பாட்டையும் இதனோடு இணைத்துப் பார்த்தல் வேண்டும். இதனால் தமிழர்கள் முன்பு பெற்றிருந்த பாராளுமன்ற பிரதிநிதித்துவம் மேலும் குறைந்தது.

அரசாங்க குடியேற்றத் திட்டங்கள் மிகவும் குறைந்த பொருளாதார வளர்ச்சியையே காட்டினாலும் இனவாத அரசியல் அதை நியாயமாக்கியது. அது சிங்கள அரசியல்வாதிகளுக்கு அதிகாரம் வழங்கும் தளமாக இருந்த வேளையில் கொடையாளிகள் தங்கள் பங்களிப்புக்காக திறந்த பொருளாதாரத்தை கோரி நின்றனர். இலங்கை அரசு கொடையாளிகளின் நிபந்தனைக்கு பூரணமாக ஒத்துக் கொண்டமையும் அவர்கள் பதிலாக சிறிய பங்கு இலாபம் கேட்டதும் வெற்றிகரமாக நிதியைப் பெற்றுக் கொள்ள உதவியது. மறுபக்கமாக படித்த மத்தியதரவர்க்கத்தை அதிகம் கொண்ட தமிழ் சிறுபான்மையினர் திட்டத்திற்கு உதவி வழங்கும் வெளிநாட்டு முகவர்களின் மீது அழுத்தம் கொடுக்க இயலாமல் மனங் கலங்கினர்.

இத்திட்டம் பற்றி பெரிய அவ நம்பிக்கைகள் நிலவிய போதிலும் பல மேற்கு கொடையாளர்கள் திட்டம் எப்படியாவது ஒப்பேற வேண்டுமென்று விரும்பினர். யுஎன்பி ஆட்சிக்கு வந்தவுடன் ஒரு பிரதிந்திகள் குழு வாசிங்டனுக்கு அனுப்பப்பட்டது. இதன் நோக்கம் துரித மகாவெலி அபிவிருத்தித் திட்டத்துக்கு உலக வங்கியின் உதவியை கோருவதா-கும். உலக வங்கியின் தலைவர் ரொபெர்ட் மக்னமாரா உதவி வழங்க இணங்கினார். ஆயினும் திட்டம் அளவுக்கதிகாக மிகைப்படுத்தப்பட்டிருப்பது பற்றியும் அதன் கவனக் குறைவாம அமுலாக்கம் பற்றியும் எச்சரித்தார். இதனால் திட்டம் மீள் பார்வைக்கு உட்பட்டது. ஆயினும் மீள்பார்வை நடந்து கொண்டிருக்கும் போதில் திட்டமிட்டபடி திட்டத்தின் பகுதிகள் அமுலாக்கப்பட்டன.

**லேவியின் கருத்துப்படி:**

“திட்டத்தை துரிதப்படுத்துவதை ஊக்குவிப்பவர்களுக்கும் மெதுவாக ஆனால் கவனமாக திட்டத்தை முன்னெடுக்க வேண்டும் என்பவர்களுக்கும் இடையே முரண்பாடு ஏற்பட்டது. ஆயி-னும் பெருவாரி இலங்கையர்கள் திட்டம் துரிதப்படுவதையே விரும்பினர். சில கொடை முகவர்கள் துரித மகாவெலி திட்டத்தில் இருந்த ஆபத்துகளை சுட்டிக் காட்டிய போதிலும் அவர்கள் சொற்களை எவரும் கருத்தில் கொள்ளவில்லை.”

இந்த திட்டத்தை 12 பில்லியன் ரூபாவில் பூர்த்தி செய்யலாம் என அரசாங்கம் நம்பியிருந்தது. ஆனால் ஒன்றறை வருடத்தில் இச் செலவீனம் 24 பில்லியனாக அதிகரித்தது. இதனால் வரவு செலவு திட்டத்தில் பாரிய துண்டு விழுந்தது. மற்றத் திட்டங்கள் 32 வீதம் வெட்டப்பட்டன. மூன்று திட்டங்கள் - அதில் மகாவெலி பெரியது. 8 வீதம் வெட்டப்பட்டது. ஜேர்மனி, கனடா, பிரிட்டன் ஆகியவை இத்திட்டம் பற்றி சாத்தியக்கூறு ஆய்வை மேற்கொண்டன. இதன் பேறாக ஜேர்மனி 230 மி டொலரும் கனடா 35 மி டொலரும் ஸ்வீடன் 179 மி டொலரும் வழங்கின. யு.என்,பி அரசாங்கம் பெற்றுக் கொண்ட வெளிநாட்டு உதவி மொத்தம் 4 பில்லியம் டொலராகும்., தனி நபர் வருமான வகையில் பார்த்தால் மற்றைய வளர்முக நாடுகளிலும் பார்க்க இலங்கை பெற்றுக் கொண்டது கூடிய தொகை யாகும். இதனால் மகாவெலித் திட்டத்துக்கு பெருமளவும் நிதியை ஒதுக்க முடிந்தது. 1982-1984 காலப் பகுதியில் மற்ற விவசாய திட்டங்களின் வருமான மீள் வீதம் மிகவும் குறைந்த அளவில் 11 சதவீதமாக இருந்தது. ஆனால் இது பொது மூலதனத்தில் 49 சதவீதத்தை விழுங்கியிருந்தது. எனினும் மகா வெலித் திட்டத்தின் பாரிய அளவையும் வெளிப்படைத் தன்மையையும் மேற்கு கொடையாளிகள் அனுகூலமாக கருதினர். அவர்கள் பல சிறிய திட்டங்களை விட சில பெரிய திட்டங்கள் நிருவாகத்துக்கு இலகுவானதெனவும் எண்ணினர்.

1977ல் 6.6 வீதமாக இருந்த பொது மூலதனம் யு.என்.பி பதவிக்கு வந்த ஒரு வருடத்துக்குள் 12 சதவீதமாகி மீண்டும் அது 1980ல் 18.4 வீதமாகியது. இதனால் மொத்த தேசிய உற்பத்தியில் திறந்த பொருளாதாரத்துக்கான பங்கு குறைந்தது, ஆயினும் ஏன் கொடை நிறுவனங்கள் விலக்கிக் கொள்ளாமல் இருந்தன என்பது மர்மமாக உள்ளது.

**சிங்கள மக்களின் சனத் தொகை சட்டென 1981ல் 243000 அதிகரித்தது. இந்த அதிகரிப்பு 425 சதவீதமாகும். அதே நேரத்தில் தமிழ் முஸ்லிம் மக்களின் அதிகரிப்பு முறையே 145,136 வீதமாக இருந்தது. இவ்வாறு அபரிமிதமான சிங்கள மக்களின் சனத்தொகையை அதிகரிப்பதே இந்த குடியேற்றத்திட்டங்களின் நோக்கமாகும்.**

இதற்கான காரணமாக நாம் கூறக் கூடியது ஒரு போதும் திறந்த பொருளா-தாரக் கொள்கை அதன் உண்மை அர்த்தத்தில் கடைப்பிடிக்கப்படவில்லை என்பதாகும். திறந்த பொருளாதாரத்தை அமுல்படுத்துவதாக இலங்கை அரசாங்கம் கூறும் வாய்ச் சாலங்களை கேட்டு இன்புறுவதை விட நிதியையும் சாதனங்களையும் கொடுத்து எப்படியாவது திட்டத்தை ஒப்பேறச் செய்வது மேல் என்று மேற்கு கொடையாளிகள் கருதியிருக்கலாம். இலங்கை அரசு வெளிநாட்டு மூலதனத்தின் வருகையை பெரிதும் வரவேற்றது. இந்த மூலதனம் இல்லாமல் அரசின் பொது மூலதன வளத்தை மாத்திரம் கொண்டு இத் திட்டத்தை நிறைவேற்ற முடியாது என்பதை இலங்கை அரசாங்கம் உணர்ந்திருந்தது.

வெளிநாட்டு கொடை நிறுவனங்கள் கொடுக்கவோதானே முன்னின்று அதனை செய்யவோ இயலாத நிலையில் இருந்தது. அதனால் திட்ட செயல்பாடுகளில் அதனால் தலையிட முடியவில்லை. இதனால் திட்டம் செயல்படுத்தப்பட்ட போது அரசாங்கத்தின் சுய விருப்பமே வெளிப்பட்டது என்று லேவி குறிப்பிடுகிறார்.

"தனது வாக்காளப் பெரு மக்களுக்கு திட்டத்தால் வரும் பொருளாதார நன்மைகளை வழங்குவதும் மற்றவர்களை இதனைக் காட்டி தன்பக்கம் இழுத்துக் கொள்வதுமே யு.என்.பி அரசாங்கத்தின் நோக்கம். இந்த நோக்கம் சிங்களவர்கள் பெரும்பான்மையாக வாழும் பிரதேசங்களில் நன்கு வெளிப்பட்டது. திட்டத்தின் முதல் கட்டம் தமிழர்கள் பெரும்பான்மையாக வாழும் வடக்கு மாகாணத்தின் பகுதி-களை வெட்டி எடுத்து அதில் சிங்கள மக்களை குடியேற்றுவதாக இருந்தது."

**இந்த திட்டத்தில் அரசியல் மேதமைப் பண்பு குறைந்து காணப்பட்டது. மாறாக கட்சி அரசியல், பக்கச் சார்பு, அரசியல் லாபம் தேடுதல் போன்றவைகள் தாண்டவமாடின. அவைகள் பொருளாதார விருத்தியையும் இன உறவையும் பாதித்தன.**

இந்த திட்டத்தின் நிச்சயமற்ற பொருளாதார வெளிப்பாடுகளையும் இன பேதத்தையும் ஏன் பொருட்படுத்தாமல் இருந்தன என்பது தெளிவாகவில்லை. பல அபிவிருத்தி முகவர்களின் நினைவுக் குறிப்புகளை ஆராய்ந்தும் ஒரு முடிவுக்கு வர முடியாமல் உள்ளது. ஆயினும் ஒரு ஊகம் மாத்திரம் வெளிப்படுகிறது. தென் ஆபிரிக்காவிலும் தென் கிழக்கு ஆசியா விலும் சோவியத்தின் முன்னேற்றத்துக்கு பிறகு இலங்கையில் தனக்கு சாதகமான நிலமை ஒன்றுந் இலவுவதை அவதானித்த மேற்குலகு அதனை வாய்ப்பாக கொண்டு மூன்றாம் உலகின் மீது செல்வாக்கு செலுத்த விரும்பியது. இதனால் கண்டிப்பான தொனியில் தனது மாதிரியை பின்பற்றுமாறு இலங்கைக்கு அழுத்தம்

இந்த இடத்தில் கொடை முகவர்கள் திட்டத்தின் நியாயமற்ற தன்மையையும் நன்மைகள் சரிசமமாக பகிர்ந்தளிக்க ப்படவேண்டியதின் அவசியத்தையும் எடுத்துக் காட்டினர். ஆனால் உதவி-யோ ஏற்கனவே வழங்கப்பட்டுவிட்டது. திட்டமும் செயல்படுத்தப்பட்டுக் கொண்டு இருக்கின்றது. அதனைக் செயல்படுத்துவதோ இலங்கை அரசாங்கம். அது தான் விரும்பியதை நிறைவேற்றியது. ஆய்வுகளை கட்டுப்படுத்தி தனக்கு சாதகமான பார்வையை ஏற்படுத்தவும் அது முனைந்தது.

1981ம் ஆண்டின் சுற்று நிருபத்தின்படி எல்லா ஆய்வுகளினதும் கல்வித் துறை பயிற்சிகளினதும் முன் மொழிவுகள் மகாவெலி அதிகார சபையின் செயலாளர் நாயகத்துக்கு அங்கீகாரத்துக்காக அனுப்பப்படல் வேண்டும். இது இலங்கை அரசாங்கத்தின் குடியேற்றத்திட்ட பிரச்சார இயந்திரம் விஞ்ஞான ரீதியாக ஆய்வு செய்பவர்களால் பாதிப்படையக் கூடும் என்ற பயம் நில-வியது என்பதை எடுத்துக் காட்டுகிறது.

"மகாவெலி திட்டப் பிரதேசங்களில் மலேரியாவின் பரவல் " என்ற பிரச்சினையற்ற ஆய்வை தனது கலாநிதிப் பட்டத்துக்காக மேற் கொண்ட ரூவானி அனு' ஜயவர்த்தன கூறுகிறார். "மகாவெலி அதிகார சபை எனது ஆய்வை வரவேற்றது. எனக்கு வேண்டிய உதவிகளனைத்தும் வழங்கியது. ஆயினும் நான் ஒரு விதமாக எச்சரிக்கப்பட்டேன். அவதானிக்கபப்ட்டேன். நான் ஒரு சமூக விஞ்ஞானியாதலால் எனது ஆய்வு பிரசுரமாவதற்கு முன்னர் அதிகார சபையினால் வாசிக்கபப்டல் வேண்டும் என்று அறிவுறுத்தப்பட்டேன். இந்த திட்ட பற்றிய தகவல்கள் வெளியாவதையிட்டு அமைச்சு மிகவும் கூருணர்வுடன் இருந்தது. முழுவதும் வெளிநாட்டு உதவியில் தங்கி நின்ற திட்டமாகையால் பாதகமான தகவல்கள் வெளியானால் உதவி தடைப்பட்டு விடும் என்று அமைச்சு பயப்படுகிறதோ என்று நான் சந்தேகித்தேன்." இலங்கையின் இன முரண்பாடு பற்றி பரவலாக அறியக்கூடியதாக உள்ள போதிலும் மகாவெலி திட்டத்தின் தன்மைகள் பற்றிய தரவு-கள் குறைவாக உள்ளன.

இத்திட்டத்தின் வெற்றி பெருமளவு வெளிநாட்டு உதவியிலும் தொடர்ச்சியாக கையாளப்பட்டு வந்த தகவல் தணிக்கைகளிலும் வெறுமனே தரவுகளை இட்டு கட்டுவதிலும் தங்கி இருந்தது. உள்நாட்டு வெளிநாட்டு ஆதரவை பெற்றுக் கொள்வதில் அரசின் பிரச்சாரம் வெற்றியடைந்தது. எனினும் தமிழ்-சிங்களவர் உறவில் மேலும் விரிசல் ஏற்பட்டது. தமிழர்கள் குடியேற்றத்தில் புறக்கணிக்கப்பட்டது மாத்திரமல்லாது அவர்கள் வாழ்கின்ற பகுதிகளில் சீரான போக்குவரத்து வசதிகளும் ஏற்படுத்தவில்லை. தமிழ் பகுதிகளில் இருக்கும் இன விகிதாசாரம் மாற்றப்படமாட்டாது என்று

ஜனாதிபதி ஜெயவர்த்தன சொன்னார். ஆனால் மகாவெலி அபிவிருத்தி திட்டத்துகுரிய அவரின் மந்திரி அதனை உறுதியாக கையாண்டார் என்று கூறமுடியாது. இந்த விடயத்தில் ஜனாதிபதி கண்ணை மூடிக்கொண்டார் என்றுதான் கூற வேண்டும். ஒருவர் இனத்திரட்சியாதல் உணர்வுக்கு வயப்பட்ட பாங்கில் அவரின் தனிப்பட்ட நடத்தை அமைந்திருக்கும் என்று ஜனாதிபதிக்கு மிகவும் வேண்டியவராக இருந்த ஏ.ஜே.வில்சனின் கூற்று இங்கே கருதத் தக்கது. இந்த திட்டத்தில் அரசியல் மேதமைப் பண்பு குறைந்து காணப்பட்டது. மாறாக கட்சி அரசியல், பக்கச் சார்பு, அரசியல் லாபம் தேடுதல் போன்றவைகள் தாண்டவமாடின. அவைகள் பொருளாதார விருத்தியையும் இன உறவையும் பாதித்தன. ஒரு வேளை இது மற்ற வகையாக எதிர்பார்க்க முடியாததாக இருந்தது. வெளிநாட்டு முகவர்கள் இத் திட்டத்தில் தலையிடுவதற்கு அனுமதி கோரினர். ஆயினும் அவர்களின் சொந்த நலன் காரணமாக இன சார்பு நடவடிக்கைகள் பற்றி கண்டு கொள்ளாதவர்களாகவே இருந்தனர். இலங்கைக்கான ஒரு நோர்வேஜியன் உதவிப் பணிப்பாளரின் 1987 ஆண்டின் நினைவுக் குறிப்பின்படி:

"இலங்கை அரசாங்கமும் உலக வங்கியும் சர்வதேச நாணய நிதியமும் சர்வதேச வர்த்தக சமூகத்தினரும், பல கொடை முகவர்களும் மிஅக்வும் நெருக்கமாக ஒருவரை ஒருவர் பரஸ்பரம் பலப்படுத்த வேண்டிய கட்டாயமான வலைப் பின்னலுக்குள் அகப்பட்டார்கள். இந்த வலைப் பின்னல் திறந்த பொருளாதாரம், வெளிநாட்டு மூலதனத்துக்கு திறந்திருத்தல் மேற்கு சார்பு கோட்பாடுகள் போன்றவற்றை வேண்டி நின்றது. இதற்கு சாதகமான பிம்பம் ஒன்றை இலங்கை உருவாக்கி அதன் மூலம் மேற்கை ஏய்த்து பெருமளவு உதவியைப் பெற்றுக் கொண்டது. இலங்கை திறந்த பொருளாதாரத்தை ஏற்றுக் கொண்டதால் பெற்றுக் கொண்ட நன்மைகளை மற்ற வளர்முக நாடுகளுக்கும் எடுத்துக் காட்டவேண்டும் என்ற பேரவலால் உந்தப்பட்டு உலக வங்கி போன்ற மேற்கின் கொடையாளிகள் இலங்கைக்கு உதவ முன் வந்தனர். இந்த வகையில் இலங்கையும் அதனுடைய கொடையாளிகளும் ஒருவரை ஒருவர் சார்ந்திருந்தனர். இதனால் இலங்கை அரசு தங்கள் விருப்பத்துக்கு மாறாக செயற்பட்டாலும் இணங்கிப் பேக வேண்டிய நிலைக்கு மேற்கு நாடுகள் தள்ளபட்டன."

மூன்றாம் உலக நாடுகள் உள் விவகாரங்களின் இந்த வெளிநாட்டு முகவர்கள் தலையிடுகிறார்கள் என்று குற்றம் சாட்டப்பட்ட போதிலும் பரஸ்பர உறவு - அது சமநிலையில்லாமல் இருந்தாலும் - பேணப்பட்டு வந்தது. உள் நாட்டில் இருக்கின்ற உதவி நிறுவன ஊழியர்கள் அரசாங்கத்தின் உள்நாட்டு கூட்டுத்தாபனங்களை சார்ந்திருந்தனர். அவர்கள் திட்டத்தை முன்னேற்றுவதிலும் விருவுபடுத்துவதிலும் ஈடுபாடு காட்டினார்கள். ஆயினும் திட்டம் பிழையான வழியில் சென்றால் அல்லது மோசடிகளால் நலிந்தால் அல்லது இனர் சார்பெடுத்தால் தங்களுக்கு வரி செலுத்துபவர்களின் பொருட்டாகவும் பாதிக்கப்பட்ட உள்ளூர் இனக் கொண்ட நேர் காணல்களின்படி பலவீனமான இன விகிதாசாரத்தை கொண்ட மட்டக்களப்பு மாவட்டத்தின் மீது இக் குடியேற்றத் திட்டங்கள் ஏற்படுத்தப் போகும் பாரிய தாக்கங்கள் பற்றி அவர்கள் கவலை கொண்டதாக தெரியவில்லை . பங்கு கொள்ளல் பேதம் காட்டாமை போன்ற மனித உரிமைகள் பற்றிய அக்கறை அவர்களிம் இருந்ததற்கான ஆதாரங்கள் எதுவுமில்லை. இது பற்றிய தமிழ் அரசியல் வாதிகளின் கருத்துக்களையும் அவர்கள் கேட்கவில்லை. இரண்டு அரசாங்கத்துக்கிடையே நிகழும் நிகழ்ச்சிக் குறிப்பில் இனச் சமத்துவம் பேணப்பட வேண்டும் என்ற குறிப்பெதுவும் இல்லை. CIDA எந்த வித நிபந்தனையுமின்றி அரசாங்கத்தின் குடியேற்றவாத வாய்ப்பாட்டை ஏற்றுக் கொண்டதாக தெரிகிறது.

**CIDA எந்த வித நிபந்தனையுமின்றி அரசாங்கத்தின் குடியேற்றவாத வாய்ப்பாட்டை ஏற்றுக் கொண்டதாக தெரிகிறது.தமிழ் அரசியல் வாதிகளின் கருத்துக்களையும் அவர்கள் கேட்கவில்லை. இரண்டு அரசாங்கத்துக்கிடையே நிகழும் நிகழ்ச்சிக் குறிப்பில் இனச் சமத்துவம் பேணப்பட வேண்டும் என்ற குறிப்பெதுவும் இல்லை.**

குழுவினர் பொருட்டாகவும் தலையிட்டு அதை சரியான வழிக்கு நெறிப்படுத்த வேண்டிய கடமை அவர்களுக்குண்டு.

மகாவெலி இனச்சார்பு கொண்டதாக மாறியது மிகத் தெளிவான போதிலும் ஏன் அவர்கள் வாளாவிருந்தனர்? ஏன் அது மேலும் தொடர அனுமதித்தனர்? இலங்கைக்கு கனடா வழங்கிய உதவி பற்றிய ஆய்வில் டேவிட்சில்ஸிஸ் இனப்பிரச்சினை, மனித உரிமைப் பிரச்சினை பற்றி கனடா அரசாங்கத்தின் பாராமுகம் பற்றி விளக்குகிறார். CIDA (Canadian International Development Agency) உடனும் வெளி விவகாரங்களுக்கான உத்தியோகத்தர்களுடனும் இது சம்பந்தமாக மேற் இது பற்றி அக்கறை குறைவாக இருந்தமைக்கான காரணங்களில் ஒன்று உதவி பெறும் திட்டத்தின் நடைமுறை இயல்பு, சமூகம் என்பவற்றுடன் உள்ளூர், வெளியூர் கொடை நிறுவனங்களின் உத்தியோகத்தர்கள் ஒன்றிப் போனமையாகும். இலங்கையின் நீர்ப்பாசனத் திட்டங்களை சென்று பார்வையிட்டத்தைப் பற்றிய அப்ஹெகின் புத்தகத்தில் உள்ளூர் உதவி நிறுவனங்கள் பற்றிய உள்ளார்ந்த பார்வை காணப்படுகிறது. அதிகாரப் போட்டிக்கிடையிலும் நன் கொடை முகவர்களின் அலுவலக அரசியலுக்குள்ளும் மாறி மாறி திட்டம் தடுமாறியது. இதனால் திட்டத்தின் மொத்த எதிர்கால பேறுகள் பற்றியும் அவை தேசிய அரசியலில் ஆற்றப்

போகும் பங்களிப்புகள் பற்றியும் அவர் சந்தேகப்பட்டார். உதாரணமாக சிங்களவர்கள் தலை வாய்க்காலிலும் தமிழர்கள் கடை வாய்க்காலிலும் குடியேற்றப்பட்டனர். இதனால் நீருக்கு சிங்களவர்களை சார்ந்திருக்க வேண்டிய நிலமை தமிழர்களுக்கு ஏற்பட்டது. இது வெறும் மேலோட்டமான விடயமாக எடுத்துக் கொள்ளப்பட்டதே அல்லாமல் எவ்வாறு இந்த சமநிலை அற்ற தன்மையை களையலாம் என்ற விளக்கம் காணப்படவில்லை. உள்ளூர் மட்டத்தில் காணப்பட்ட இவ் வகையான மனோபாவங்கள் தான் தேசிய மட்டத்தில் இனமோதலுக்கு வழிகாட்டின. பேரினப் பொருளாதார மட்டத்தில் பெரும் தவறாகக் காணப்பட்ட இந்த விடயம் சிற்றின பொருளாதார மட்டத்தில் நியாயமாக்கப்படுகிறது. இந்த விடயம் எழுத்துக்களில் பிரதான பேசு பொருளாக காணப்படுகிறது. திட்டப் பகுதிகளில் வாழும் இருவருக்கும் (சிங்களவர், தமிழர்) இடையிலான தொடர்புகளும் எதிர்வினைகளும் ஆராயப்படவில்லை. புரிந்து கொள்ளவும் படவில்லை. திட்டங்களின் உள்ளீட்டு மதிப்பை தீர்மானிப்பது சிக்கலாகியுள்ளது. வளர்த்தவர்கள் என்று தம்பட்டம் அடித்துக் கொள்ளும் உதவிப் பணியாளர்கள் ஏன் திட்டம் பகுதிகளில் இன முரண்பாடு உக்கிரமடைந்தது என்ற கேள்வி முன் திணறுகிறார்கள். முன் வாய்க்காலில் முடியேரிய சிங்களவர்களை நீர்ப்பாசனத்துக்காக தமிழர்கள் சார்ந்து நிற்க செய்ததே இந்த நிலைமைக்கு ஒரு காரணமாகும். தமிழர்கள் சமதையாக நீரை ஏன் பெறமுடியாமல் உள்ளது என்ற கேள்வியை ருளுயுஐனு உதவிக்கான ஆலோசகர்கள் எழும்பவில்லை. அல்லது இந்த ஓரவஞ்சனைக்கு பொருத்தமான மாற்றீடு ஒன்றையும் தேடவில்லை. பெரிய அளவில் திட்டத்தின் அபிவிருத்தி நோக்கம் தோல்வியடைந்து விட்டது என்பதையும் சிறிய அளவில் (உள்ளூர் அளவில்) பக்கச் சார்பு நோக்கி அது செயல்படுகின்றது என்பதும் தெளிவாகி விட்டது. அவர்கள் தங்கள் அபிவிருத்தியை அடைந்து விட்டதாக நினைத்தாலும் அவர்கள் செய்தது முரண்பாட்டை தீவிரமாக்கியதுதான். சர்வதேச உதவிக்கான ஆலோசகர்களிடத்து அவர்களின் செயல்பாட்டால் சிறுபான்மையினரின் உரிமைகள் பாதிக்கப்படுதலையிட்டு ஏன் குறைந்தளவு புரிதலே காணப்பட்டது என்று கல்விமான்களும் பல்கலைக்கழகத்தினரும் கேள்விகளை எழுப்புகிறார்கள். இதற்கான மாற்று வழி என்ன என்பது அவர்களுக்கு தெரியும். அது இப்போது செயல்பட்டுக் கொண்டிருக்கிறது. அதைப்பற்றி எழுதி அவர்கள் அறியாமையைச் சுட்டிக் காட்டாதிருப்பது நல்லது.

இந்த செயல்பாட்டின்மைக்காக மற்றுமொரு காரணம் ஒன்று வர்த்தக நலன் சம்பந்தப்பட்டதாகும். அதை கனடாவின் வகையில் விளக்குவதாயின்:

"கனடாவின் உண்மையான எதிர்ப்புணர்வு உதவியை அரசியல் நெம்புகோலாக பாவிப்பதற்கு தடையாக இருந்தது. அது இங்கே வேலை செய்வதற்காக ஒப்பந்தம் செய்த கனடாவின் கம்பனிகளின் நலன்களைப் பாதுகாக்க கூடுதலாக அக்கறைப்பட்டது. எந்தவித நிபந்தனைகளுமின்றி CIDA உத்தியோகத்தர்கள் மூன்று பெரிய பொறியியல் நிறுவனங்களின் வர்த்தக நலன்களைப் பற்றி பேசினார்கள். மேலும் மதுரு ஓயா அணைக்கட்டும் திட்டத்தில் அவர்கள் 100 மில்லியன் டொலரை செலவழித்து விட்டார்கள். இதனால் அடங்கிப் போவதை தவிர வேறு மார்க்கம் கனடாவுக்கு இருக்கவில்லை. இதைத் தவிர 60 மில்லியன் டொலரை கனடா செலவிட்டுக் கொண்டிருந்தது. திட்டம் தடைபட்டால் வழக்கு தொடுக்க வேண்டிய நிலமைகளும் ஏற்படலாம் என்று கம்பனிகள் பயந்தன இதனால் திட்டத்தை கூடிய அளவில் ஒப்பேற்றி தங்களின் வர்த்தக நலன்களை பாதுகாத்துக் கொள்வதையே CIDA கருத்தில் கொண்டது. ஒரு இராஜதந்திரி CIDAயின் நிலைப்பாட்டைப் பற்றி குறிப்பிடுகிறார். இந்த கம்பனிகள் தங்களின் வர்த்தக நலன்கள் தடங்கல் இல்லாமல் கிட்ட வேண்டும் என்று விரும்பின. அதனால் அவைகள் மனித உரிமைகள் மீறப்படுவதைப் பற்றி பெரிதாக அக்கறை கொள்ளவில்லை."

**இலங்கையில் ஐக்கியம் உதவியால் சீர்குலைகிறது. கனடாவில் அது உதவியால் வளர்க்கப்படுகிறது. இலங்கைக்கு கனடா வழங்கும் உதவி அதன் (கனடா) அரசியலை மாற்றும் அளவுக்கு பெரிதல்ல. எனினும் அது (2 பில்லியன் டொலர்) - இலங்கையின் தேசிய ஐக்கியத்துக்கு வேட்டு வைப்பதாக உள்ளது.**

இந்தே வில்ஸ் சுட்டிக் காட்டுவது கனடாவின் அரசாங்க வட்டாரத்தில் நன்கு தெரிந்த விடயமாகும் பிரெஞ்சு கனடியர்கள் சனத்தொகையில் 20 வீதமாவர். ஆனால் அவர்கள் CIDAயின் உத்தியோகத்தர்களில் 56 வீதமாவர். CIDAயின் வர்த்தக நடவடிக்கைக்கு பொறுப்பாக பிரெஞ்சு கனடிய மந்திரி ஒருவரே உள்ளார். கியூபெக்கின் வர்த்தக நடவடிக்கைகளுக்கு இவரே மிகவும் உறுதுணையாக உள்ளார். சீர்திருத்த கட்சி பாராளுமன்ற உறுப்பினரான லீமொரிசனின் கருத்துப்படி 1995ல் CIDA செய்த 71 வீதமான 20 பெரிய ஒப்பந்தங்கள் கியுபெக்கை தளமாகக் கொண்ட கம்பெனிகளுக்கு உரியவை. கனடாவில் கூடிய அளவு மானியம் பெறுபவை யாவல், மக்கில் என்னும் இரு பல்கலைக்கழங்கங்களாகும். தனது தமிழ் சிறுபான்மையினரை ஓரம் கட்டும் இலங்கை போலல்லாது கனடா கியுபெக் பிரிவினைவாத எண்ணம் பிரெஞ்சு கனடியர் மத்தியில் தலைதூக்காமல் செய்ய இவ்வாறு தாராளமாக நடந்து கொள்கிறது. இந்த தந்திரம் நீண்ட காலம் பலிக்கும் என்று கூற முடியாது. ஏற்கனவே ஆங்கிலேயர் - பிரெஞ்சுகாரர் மத்தியில் சலசலப்புகள் நிகழத் தொடங்கி விட்டன. இலங்கை தடியை பயன்படுத்துகிறது. கனடா இனிப்பைக் கொடுக்கிறது

அவ்வளவுதான். இதிலுள்ள முரண்நகை என்னவென்றால் இலங்கையில் ஐக்கியம் உதவியால் சீர்குலைகிறது. கனடாவில் அது உதவியால் வளர்க்கப்படுகிறது. இலங்கைக்கு கனடா வழங்கும் உதவி அதன் (கனடா) அரசியலை மாற்றும் அளவுக்கு பெரிதல்ல. எனினும் அது (2 பில்லியன் டொலர்) - இலங்கையின் தேசிய ஐக்கியத்துக்கு வேட்டு வைப்பதாக உள்ளது. கனடாவின் இராஜதந்திரியாக செயற்பட்டவரும் தற்போது CIDAயின் தலைவராக உள்ளவருமான மார்சல் மாசெல் இலங்கைக்கான உதவி மனித உரிமையை பேணுவதை சார்ந்திருக்க் வேண்டும் என்கிறார். அக் கூற்றை அமெரிக்கர்கள் கடுமையாக எதிர்த்தனர். ஐரோப்பியர்கள் ஈடுபாடு காட்டவில்லை. இவ்வாறெல்லாம் நிபந்தனைகள் இட்டால் தங்களின் வர்த்தக நலன்களும் இராஜதந்திர உறவுகளும் பாதிக்கப்படும் என்பது எல்லாக் கொடையாளி களின் அபிப்பிராயமாக இருந்தது.

உள்நாட்டு கலவரம் தீவிரமாக உருவெடுத்ததன் பின்னர் நோர்வெஜியன் அபிவிருத்தி அமைச்சகத்தின் கூட்டுத்தாபனம் ஒன்று - இது கொடை நிறுவனங்களில் ஒன்று - சமூக விஞ்ஞானிகள் குழுவொன்றை திட்டத்தை மீளாய்வு செய்யுமாறு பணித்தது. திட்டத்தை ஆராய்ந்த பின்னர் குழுவினர் கூறினர்.

"உதவி பெறும் அரசாங்கத்துக்கு எவ்வழியிலும் உதவுவதுதான் உதவியின் நோக்கமாக இருந்தது. அவ்வுதவிகளை அரசாங்கம் தனக்கு விரும்பியவாறெல்லாம் மாற்றிக்கொண்டது. சில வேளை-களில் முன்னர் தீர்மானித்ததற்கு முற்றிலும் வேறான வழிகளில் எல்லாம் உதவியை பயன்படுத்திக் கொண்டது."

இந்த வகையில் உடனடியாக பெறுமதியாக்க முடியாத நிதியத்துக் கெல்லாம் ஆயுதம் வாங்கப்பட்டது. வர்த்தக நடவடிக்கைகளிலும் அதனைப் பயன்படுத்தினர். ஜனநா யக நடவடிக்கைகளிலிருந்து அடக்கி ஒடுக்குதல் வரை உதவித் தொகை பல வழிகளிலும் பயன்பட்டது. அதவியை கையாளுவதில் முன்னேற்றங்கள் காணப்படாவிட்டால் அவைகளை நிறுத்தும்படி நோர்வே பணித்தது. பெருமளாவு நிதியம் இலங்கை அரசாங்கத்திற்கு கிடைத்திருப்பதை கருத்தில் கொண்டு ஸ்கண்டினேவியன் நாடுகள் தமது உதவியை குறைத்துவிட்டன. தமிழர் தொகையை குடியேற்றத் திட்டத்தில் கூட்டும்வரை நிதி உதவி செய்வதை கனடா நிறுத்தி வைத்தது. அது தமிழர்கள் ஒதுக்கப்படுவதை உணர்ந்திருந்தது என்பதைக் காட்டுகிறது. கனடா ஆரம்பத்தில் இன விகிதாசாரத்திற்கேற்ப குடியேற்றத் திட்டத்தை செயல்படுத்துவதை நோக்கமாகக் கொண்டிருந்தது. ஆனால் அரசாங்கத்தோடு நிகழ்ந்த பேச்சுவார்த்தையில் இந்தக் கருத்து எடுபடவில்லை. இலங்கையில் உள்ள கனடாவின் சிரேஷ்ட பணியாளர் ஒருவரின் கூற்றுப்படி:

"உள்ளூர் நிலமைகளை கருத்திற் கொள்ளாது தனக்கு சாதகமான முறையில் தேர்தல் தொகுதிகளை மாற்றியமைப்பதை அரசு ஒரு தேசிய வாய்ப்பாடாக கொண்டு செயல்பட்டது. இந்த வாய்ப்பாடு எங்களை இக்கட்டான நிலைக்கு தள்ளியது நாங்கள் உதவி செய்யும் நாட்டின் உள் விவகாரங்களில் தலையிட முடியாது. அதிலும் மீள் குடியேற்றம் போன்ற உணர்வு பூர்வமான விடயங்களில் இருந்து விலகி இருக்க வேண்டும். ஆயினும் எங்கள் பணம் உட்பூசல் தோன்றுவதற்கு உடந்தையாக இருப்பதையிட்டு நாங்கள் சந்தோசப்படவில்லை."

கனடாவின் வெளி விவகாரங்களுக்கு பொறுப்பான ஒரு உத்தியோகத்தர் ஏன் இந்த பழிபாவத்தில் 125 மில்லியன் டெ-ாலரை போட்டோம் என்று தெளிவற்ற முறையில் கூறினார். 1990ல் உலக வங்கி மகாவெலி திட்டத்தில் இருந்து விலகிக் கொண்டது. திட்டம் சரியான வழியில் செல்லவில்லை. அது பெரும் மன வேதனையை கொடுக்கிறது என்று உலக வங்கி கூறியது. இவை எல்லாம் இன ஆதிக்க கூறுகள் திட்டத்தில் உள்ளார்ந்து கிடந்தன என்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர் என்பதைக் காட்டுகின்றன. எனினும் இந்த அம்சங்கள் உள்நாட்டுய் யுத்தத்தின் தோற்றுவாய்க்கு பங்களிப்பு செய்தவை அல்ல. அவை-கள் பிற்பாடு நிகழ்ந்தவை. உள்நாட்டு யுத்தமோ 1983 ஆண்டில் வெடித்து விட்டது. காலம் கடந்து கொடை நிறுவனங்கள் திட்டத்தில் இருந்து விலகிக் கொண்டாலும் அவைகள் பெருமளவு நிதியை இதில் வீணடித்தன. இனப்பகை தீவிரமாக வழிகோலின.

மகாவெலித் திட்டம் பற்றிய அரசாங்கத்தின் கொள்கைகளில் தாங்கள் எந்த வித செல்வாக்கும் செலுத்த முடியாது என்பதை உதவிக் குழுக்கள் உணர்ந்து கொண்டன. அது மாத்திரம் அல்லாது திட்டம் தாங்கள் சந்தேகித்த விடயங்களை சார்ந்துதான் செயல்படுகின்றதென்பதும் அவைகளுக்கு தெளிவாயிற்று. இந்த மாதிரியான பெரும் திட்டம் நியாயமானதாகவும் நம்பிக்கையை கட்டியெழுப்புவதாகவும் அமைய வேண்டும். ஆனால் மகாவெலி திட்டம் அப்படி அமையவில்லை. மற்ற திட்டங்களை விட அதில் சூழல் நலன்கள் குறைவாக இருந்தன. இவைகளில் இருந்து நல்ல நோக்குடம் ஒழுங்குபடுத்தப்பட்ட திட்டங்கள் இலங்கையில் சாத்தியமற்றன என்பது தெளிவாகிறது.

**1990ல் உலக வங்கி மகாவெலி திட்டத்தில் இருந்து விலகிக் கொண்டது. திட்டம் சரியான வழியில் செல்லவில்லை. அது பெரும் மன வேதனையை கொடுக்கிறது என்று உலக வங்கி கூறியது. இவை எல்லாம் இன ஆதிக்க கூறுகள் திட்டத்தில் உள்ளார்ந்து கிடந்தன என்பதை அவர்கள் உணர்ந்திருந்தனர் என்பதைக் காட்டுகின்றன.**

உலக வங்கியின் வெளியீடுகளில் சுய விமர்சனம் இடம் பெறுவதுண்டு. உதவி பெறும் நாடுகளில் சாதகமான கொள்கைகள் உருவாவதற்கு செல்வாக்கு செலுத்தாமையிட்டும் பொருளாதார வளர்ச்சியேற்படாமையையிட்டும் ஒரு விமர்சகர் கருத்து வெளியிட்டுள்ளார். இன மற்றும் மனித உரிமை அம்சங்கள் தொடர்பாக உதவி நிறுவனங்கள் குறைந்தளவு அக்கறை காட்டியுள்ளன என்று இலங்கையின் அபிவிருத்தி எழுத்துக்களில் குறிப்பிடப்படுகிறது. இன ஒதுக்கலைக் கொண்டிருக்கும் சிங்கள குடியேற்றத் திட்டங்களின் குறைந்த பொருளாதார வளர்ச்சி பற்றியும் இவை பற்றி நன்கொடை நிறுவனங்கள் போதிய கவனம் கொள்ளாமை பற்றியும் அரிதாகவே அவ்வெழுத்துகளில் பேசப் படுகின்றன. இன முரண்பாடுகளை தீவிரப்படுத்தியதில் வெளிநாட்டு உதவிகள் வகிக்கும் பங்கு பற்றிய பாடங்கள் மூன்றாம் உலகிற்கு முக்கியமானவையாகும். இப்பாடங்கள் இன மற்றும் அரசியல் நிலைமைகள் தொடர்பாக ஒரு புதிய மதிப்பீட்டு முறையையும் கண்காணிப்பையும் கோரி நின்றன. சூழல் பாதுப்பு மதிப்பீட்டு அறிக்கை இப்போது அவசியமாக கோரப்படுகிறதாயினும் இன சமூக அரசியல் மதிப்பீடுகள் கருத்தில் கொள்ளப்படுவதில்லை. இவைகளும் சூழல் தாக்கம் போல் திட்டங்கள் பாதிப்புறக் காரணங்களாகும். சூழல் தாக்கங்கள் மதிப்பீடு செய்வதற்கு இலகுவானவை. ஆனால் சமூக தாக்கங்கள் அவ்வாறில்லை. மகா வெலி திட்டம் உள்நாட்டு யுத்தத்தை ஊக்கியது. ஆனால் அத் திட்டம் தொடர வெளிநாட்டு உதவிகள் உதவின. இந்த தகவல்களை கருத்தில் கொண்டு கொடையாளிகள் சுதந்திரமான ஆய்வுகளை ஊக்குவிக்க வேண்டும். திட்டம் நடைமுறைப்படுத்தபடும் போதும் கண்காணிக்க வேண்டும். புன்ராய்வுக்கு அனுமதிக்க வேண்டும். இவைகள் எதிலும் ஏதும் தளர்வுகள் ஏற்பட்டால் அரசியல்வாதிகள் வளங்களை தங்களது சொந்த சமூகத்துக்கு திருப்பி விடுவார்கள். அதனால் பாதிக்கப்படுவது குறைவான அனுகூலம் பெற்ற இனக்குழுவினர்தான். இங்கே இலங்கை அரசாங்கத்துடன் கொடை நிறுவனங்கள் - அவைகள் அரசியலில் அக்கறை கொண்டிருந்தபோதிலும் - தாராளமாக நடந்துள்ளன என்பது வெளிப்படையானது. இருந்த போதிலும் இனப்பாகுபாடற்ற நடுநிலை அபிவிருத்தி அமுலாக்கலைத் தூண்டிவிட வேண்டியது கொடை நிறுவனங்களின் கடமையாகும்.

நான் NGO திட்டங்களை ஆய்வு செய்வதன் அவசியம் பற்றி சுட்டிக் காட்டியபோது இலங்கையில் உள்ள தென் ஆசியாவிற்கான நிறைவேற்றுப் பணிப்பாளர் அது காலம் கடந்த முயற்சி என்கிறார். இது சமூக விஞ்ஞான ஆய்வை மறுப்பதாகும். ஆய்வை மறுதலிப்பவர்கள் எதையோ மறைக்க முயல்கிறார்கள். அவர்களின் பொது மக்களுக்கான எழுத்துக்களின் மூலம் இது தெளிவாகிறது. இலங்கையில் உள்ள கனடாவின் உதவிப் பணிப்பாளர் ஒருவரின் கருத்துப்படி மகாவெலித் திட்டம் பே ன்ற கேடிகளிலும் பார்க்க சிவில் சமூகம், நல்லாட்சி போன்ர அம்சங்களுக்காக வேலை செய்யும் பேழுகளுக்கு நிதி வழங்குவது நல்லது. ஆனால் அவ்வாறான அரசாங்க உதவி குடியேற்றத் திட்டம் ஊடாக 300,000 மேற்பட்ட மக்களை குடியேற்றியதால் நிலத்துக்கு மேலதிகமாக சுமையை ஏற்றியாகி விட்டது. மேலதிக பயன்பாட்டால்ந் இலம் தன் நிலை குன்றும். தென் ஆசியப் பிராந்தியத்தில் இது போன்ற நிகழ்வுகளால் ஏர்பட்ட நிலைமைகளை குறைக்க போராடிக் கொண்டிருக்கிறார்கள் என்பது இங்கே கருதத் தக்கது,. சிங்களவர்கள் இந்த குடியேற்றத் திட்டத்தின் மூலம் தங்களது பாரம்பரிய தாயகத்துக்கு மீண்டும் குடியேறினார்கள் என்பதை விட கனடாவின் நிதி உதவியால் இன ஒதுக்கலுக்கு துணை நிற்கிறார்கள் என்பது பொருத்தமானது. முன்னைய அரசாங்கம் விட்ட சூழல் பாதிப்புகளை சீர் செய்ய உதவ வேண்டும் என்று கூறி கனடா தனது சேவையை மகா வெலித் திட்டத்தில் சிறுமைப் படுத்திக் கொண்டது. மகாவெலி திட்டம் எதிர் பார்த்த இலக்கை அடையவில்லை. ஆயினும் அதன் சாக்கில் இலங்கை அரசு தனது அரசியல் அபிலாஷைகளை நிறைவேற்றிக் கொண்டது. இப்பாடங்கள் இன மற்றும் அரசியல் தொடர்பாக ஒரு புதிய மதிப்பீட்டு முறையையும் கண்காணிப்பையும் மேற்கொள்ளுமாறு உதவி வழங்கும் சமூகத்தை கோருகின்றன. சூழல் மதிப்பீட்டு அறிக்கை உதவி பெறுவதற்கு கட்டாயமாகும். ஆனால் இன அரசியல் மதிப்பீடுகள் கவனத்தில் கொள்ளப்படுவதாக தெரியவில்லை. சூழல் பாதிப்புற திட்டத்தில் உள்ளார்ந்துள்ள இன அரசியல் பேதங்களும் காரணம் என்பதை கருத்தில் கொள்வது அவசியம்.

•

*ரோஸ் மல்லிக் கனடாவைத் தளமாகக் கொண்டு செயற்படும் ஒரு சுதந்திரமான அபிவிருத்தி ஆலோசகர் ஆவார். இவர் கனடாவின் சுதேசி சபையின் ஆராய்ச்சி இயக்குநராகவும், சர்வதேச சமாதானம் மற்றும் பாதுகாப்புக்கான கனடிய நிறுவனத்தில் ஒரு ஆராய்ச்சி உறுப்பினராகவும் உள்ளார். கனடா அரசாங்கத்தின் வெளிநாட்டு அலுவல்கள் சர்வதேச வர்த்தகம் என்பவற்றுக்கான திணைக்களத்திலும் சர்வதேச அபிவிருத்தி நிறுவனத்திலும் ஆலோ சகராகவும் பணியாற்றுகிறார். பல்வேரு ஆராய்ச்சிக் கட்டுரைகளை இதழ்களுக்கு எழுதியுள்ளா டொக்டர் மல்லிக் ஒரு கம்யூனிச அரசாங்கத்தின் அபிவிருத்திக் கொள்கை (1977), இரு மேற்கு வங்காளம் (1983), இந்திய கம்யூனிசம் எதிர்ப்பு, இணைவு, நிறுவனமயமாதல் (1994) ஆகிய நூல்களையும் வெளியிட்டுள்ளார்.*

இக்கட்டுரை Development Ethnicity and Human Right in South Asia என்ற ரோஸ் மல்லிக் எழுதிய நூலில் இருந்து எடுக்கப்பட்டது.



# ஆயர்பாடி மாளிகை

- பா. அ. ஜயகரன் -

பெரியதம்பனை பிராதான தெருவின் பாடசாலையிலிருந்து சங்கக்கடைச் சந்தி வரையிலான 500 மீற்றர் தூரம் வாழையாலும் தென்னோலை தோரணங்களாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தன. பாடசாலை உடையுடன் மாணவர்கள் வாழைக்கு முண்டுகொடுப்பதைப் போல நிறுத்தி வைக்கப்பட்டிருந்தார்கள். காலைப் பாடசாலை இல்லை என்ற உட்சாகம் அவர்களை துருத்திக்கொண்டிருந்தது. ஊரின் பெரியவர்கள் எல்லோரும் செழுமையாக வந்து நின்றார்கள். பொன்னம்மா அக்கா வழமைபோல் தனது அதே கூரைச் சேலையை உடுத்திக்கொண்டு போட்டோக்காரன் கவனிக்கும்படியாக அங்குமிங்கும் நடந்து திரிந்தார். ஊரின் வரலாற்று ஆவணங்களை திரும்பிப் பார்த்தால் பொன்னம்மா அக்காவும் அந்தச்சேலையும் எல்லாப் படங்களிலும் உண்டு. யாரின் பக்கத்தில் நின்றால் போட்டோ பிடிபடும் எனும் இரகசியங்களை அவர் தெரிந்திருந்தார். சரவெடியை மரத்தில் கொழுத்திவிட்டு அதற்கான சந்தர்ப்பத்தை பார்த்தவாறு பையன் நின்றிருந்தான். அவனின் கையிலிருந்த விறகுத்தணல் நூற்றுவிடாமல் அதையாட்டியவாறு நின்றான். அந்த சாகசத் தருணத்தை கண்டுகொள்வதற்காய் ஒரு சிறுவர் கூட்டம் கூடி நின்றது. சந்தியில் வைக்கப்பட்டிருந்த மேசையில் நிறைகுடம் விளக்கு தயார் நிலையில் இருந்தது. அதைக் கொழுத்துவதற்கான ஆயத்தத்தோடு அகராதியார் நின்று கொண்டிருந்தார். ஆராத்தித் தட்டுடன் பெரிய டீச்சரும், தமிழ் டீச்சரும் நின்றுகொண்டிருந்தார்கள். எல்லோரும் ஆர்வமிகுதியில் தெருவைப் பார்த்தவாறு நின்றிருந்தார்கள்.

தூரத்தில் ஹாரன் சத்தம் கேட்டது " வந்திட்டுப் போல " எல்லோரும் தமக்கு விதிக்கப்பட்ட கடமைகளுக்கு தயாரானார்கள். மெல்ல மெல்ல வாகனத்தின் இரைச்சல் அதிகரித்து இ.போ.ச பஸ்சின் சிவப்பு தெரியத் தொடங்கியது. பள்ளிக்கூடத்தை அண்மித்ததும் இராகக் ஹாரனைப் அமுக்கியபடி பஸ் சந்தியை வந்தடைந்தது. பையன் வெடியைப் பற்றவைத்தான். இடையறாத சத்தத்துடன் சரம் தீர்ந்து முடிந்தது. பஸ்சுக்கு முன்னால் ஒட்டுனரையும், நடத்துனரையும் நிறுத்தி ஆரார்த்தி எடுத்தார்கள். அவர்களுக்கும் பஸ்சுக்கும் பொட்டு வைத்துவிட்டு பஸ்சுக்குள் இருக்கும் சாமிப்படங்களுக்கு பொட்டு வைத்து பூமாலை அணிவித்தார்கள்.

வாத்தியார் முதலாவது டிக்கற்றை வாங்கி பஸ்சுக்குள் ஏறினார். எல்லோரும் ஒன்றன்பின் ஒன்றாக பின் கதவால் ஏறி முன் கதவால் இறங்கிக்கொண்டிருந்தார்கள். ஊர்ப்பெரியவர்கள் பஸ்சின் முன்னால் கூடிநின்று போட்டோ எடுத்துக்கொண்டார்கள். பொன்னம்மாக்கா வாத்தியாரின் அருகே தலையைக் காட்டியவாறு நுழைந்து கொண்டிருந்தார். ஊர்ச் சிறுவர்களை சுமந்துகொண்டு பஸ் ஊரைச் சுற்றியது. இபோசவுடன-ான நீண்டநாள் போராட்டத்தின் பின்னர் தம்பனைக்கு பஸ் வந்து சேர்ந்தது. அல்லாவிடத்து பிராமணாளங்குளத்திலிருந்து மூன்று மைல்கள் நடந்து தம்பனைக்கு வரவேண்டும். பஸ்சின் நேரஅட்டவணையால் நித்திரைக்கு வாற பஸ் என ஊராரால் அழைக்கப்பட்டது. இரவு நித்திரைக்கு வந்துவிட்டு விடிய ஏழு மணிக்கு வவுனியாவுக்கு கிளம்பிவிடும். காலை எட்டு மணிக்கு சென்று மூன்று மணிக்கு திரும்பிவரும் மகேசு அண்ணரின் வேன் இன்னமும் சேவையிலிருந்தது. ஊரும் பஸ்சும் ஒட்டி உறவாடியிருந்த காலத்தில்தான் அவ்வழியால் போன இயக்கப்பொடியள் கண்ணில் அதுபட்டது. எரிக்காமல் ஒரு பஸ் இன்னமும் ஓடித்திரிவது அவர்களுக்கு அது உறுத்தலாக இருந்திருக்கவேண்டும். ஒரு நாள் இரவு பிராமாணளங்குளத்திற்கும் தம்பனைக்கும் இடையில் காட்டுப்பகுதியில் பஸ் மறிக்கப்பட்டது. இலங்கை இராணுவம் இன்னுமொரு படுகொலைக்கு தயாராகிவிட்டதோ என்று ஐயம்கொண்ட நேரம்

" நாங்கள் இயக்கப்பொடியள் எல்லோரும் இறங்குங்கோ "

என உத்தரவு ஒன்று பிறப்பிக்கப்பட்டது எல்லோரும் தமது பொருட்களை எடுத்துக்கொண்டு இறங்கி நின்றார்கள்.

"ஏன் நிற்கிறியள் நடவுங்கோ"

என மீண்டும் ஒரு உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. பஸ்சின் முன்விளக்கு தம்பனை நோக்கிய தெருவை காட்டியவாறு நின்றது. அதன் வெளிச்சத்தில் அனைவரும் சிறிது தூரம் நடந்து இருந்தனர். பணம் பிடுங்கப்பட்ட நடத்துனரும், ஓட்டுனரும் பின்தொடர்ந்தார்கள். சிறிது நேரத்தில் பஸ் எரியத் தொடங்கியது. ஊரின் வயிறெல்லாம் சேர்ந்து எரிந்துகொண்டிருந்தது. முப்பது வருடம் போராடிப்பெற்ற அந்த பஸ் வண்டி எரிந்தது. ஊராரின் நடை கனத்தது. அதன் புகை இருளை கருக்கியது. ஊராரின் மனங்கள் இருண்டன.

" அறுவாங்கள்.. பாடையில போவாங்கள்..
தாயோழி பிள்ளையள்.. "

என தமது மனம் ஆறும் வரை அந்த இயக்கத்தை ஊரார் போற்றிக்கொண்டிருந்தார்கள்.

அந்த பஸ் வண்டி எங்கள் ஊருக்கு படுக்கைக்கு வந்து எரியுண்டு போனபோது,

"இறங்கிறீறோ அல்லது உன்னையும் சேர்த்து எரிக்கிறதோ.."

என இயக்கத்தார் கேட்ட பின்னர் கடசியாக இறங்கி எங்கள் ஊருக்கு வந்தவர்தான் ஓவசியர் பத்மநாதன்.

அரச அதிகாரிகளுக்கு ஒதுக்கப்பட்ட பங்களா வீடுகளில் ஆசிரியர் பங்களா, நீர்ப்பாசன பங்களா, மருந்தக பங்களா தவிர்ந்த ஏனைய மூன்று பங்களாக்களில் எங்கள் ஊர் மாடுகளும் வெளவால்களும் குடியிருந்தன. நீர்ப்பாசன இலாக்கா ஊழியர்களுடன் இவரும் தஞ்சம் புகுந்து ஏற்கனவே இருந்த நால்வரோடு இவர் ஐவர் ஆனார்.

ஓவசியர் காலைக்கடனை முடித்துவிட்டு நேரே மகேசு கடைக்கு சென்று தன்னை அறிமுகப்படுத்திவிட்டு தன்னிடமிருந்த இருநூறு ரூபாய்களை அவரிடம் நீட்டி

" இது அச்சாரம்" என்றார்.

மகேசுக்கு திருவுளச் சீட்டு அடித்ததுபோல் இருந்தது. கடனுக்கு சமான் வாங்கி, வாங்கிய கடனைத் தராமல் தெருவையும் ஊரையும் மாற்றும் கடன்காரர் மத்தியில் முற்பணத்தோடு ஒரு கடன்காரன் வந்ததில் அவருக்கு மகிழ்ச்சி. அவரை மனமார வாழ்த்தி, வந்தவரை வரவேற்கும்பொருட்டு தான் வீட்டிலிருந்து கொண்டுவந்த தேனீரை மூக்குபேணியில் ஊற்றி நாலு வறுத்த விசுக்கோத்தையும் அவரிடம் நீட்டினார். மகேசு கடை வாங்கில் ஏறியமர்ந்து மெதுவாக சாப்பிட்டுக்கொண்டிருந்தார் ஓவசியர். மெல்லிய உருவம், பொதுநிறம், நாலுமுழம் வேட்டி, ஒரு பழுப்பு அரைக்கைச் சட்டை. அது வெள்ளைச் சட்டையாய்த்தான் இருந்திருக்கவேண்டும். அது காலப்போக்கில் ஊர் உலகத்தின் மண்ணின் நிறத்தைப் பெற்றிருக்கவேண்டும். மகேசு ஓவசியரைப் பார்த்தார். அவர் யாரையும் அவதானிப்பதாய் தெரியவில்லை. அவர் சாப்பிடும் உணவிலும் ஆர்வமாயிருப்பதாய் தெரியவில்லை. அந்தரத்தில் நிற்கும் ஏதோவொன்றைப் பார்க்கும் தோரணையில் இருந்தார். ஆயினும் அவர் கையும் வாயும் ஒத்திசைவின்றி அசைந்து கொண்டிருந்தன. அந்தக் கடை-யைச் சுற்றி நடப்பது எவற்றிலும் அக்கறைப்பட்டவராகத் தெரியவில்லை. மகேசு கேட்ட பல கேள்விகளுக்கு எதுவித விடையும் அவரிடமிருந்து கிடைக்கவில்லை. அந்தக் கேள்விகள் எதுவும் அவருக்கு கேட்கவில்லை. அவர் எழுந்து கடைக்குள் வந்து மூக்குப்பேணியை மகேசுவிடம் கொடுத்துவிட்டு

" என்ட பங்களாவைத் துப்பரவாக்கவேணும்.... இப்ப ஒரு சுத்து தாரும்.." என்றார்.

மகேசு சுருட்டு ஒன்றை எடுத்துக்கொடுத்துவிட்டு கணக்கு புத்தகத்தில் ஓவசியருக்கு ஒரு பக்கத்தைத் தொடங்கினார். சாமித் தட்டிலிருந்த சந்தனத்தால் 'உ சிவமயம்' எனத் தொடங்கி இருநூறு வரவு, ஒரு சுருட்டு என ஓவிசியரின் கணக்கைத் தொடங்கினார். ஓவசியர் மீண்டும் வாங்கில் அமர்ந்து சுற்றை பற்றவைத்துவிட்டு மீண்டும் அந்தரத்தில் விட்டதை விட்ட இடத்தில் இருந்து பார்த்துக்கொண்டிருந்தார். கையிலிருந்த சுருட்டு வாய்க்குள் இடையிடையே வந்துபோய்க் கொண்டிருந்தது.

கடனுக்கு வருபவர்களை வழமை போல் மகேசு திட்டிக்கொண்டிருந்தார். அன்று ஓவசியர் உதாரணபுருசராக மாறியிருந்தார்.

" பார் அந்தாளை அட்சாரமாய் காசைத் தந்து சாமான் வாங்குது"

ஓவசியர் எதையுமே உள்வாங்கிக் கொள்பவராய் தெரியவில்லை. மகேசுவிடம் அதிகம் திட்டு வாங்குபவர் சாமித்தம்பிதான். பெற்றோல்மக்ஸ் கொழுத்தவரும் ஸ்பிரிட்டை வாங்கி அப்பிடியே அருந்துபவர் அவர்தான். அவரைத் திட்டியவாறு ஸ்பிரிட்டைத் தூக்கிக்கொடுத்தார். அவர் இடையில் செருகியிருந்த எழுமிச்சை காயை இரண்டாக நறுக்கி பிளிந்து போத்தலுக்குள் விட்டுவிட்டு அண்ணார்ந்து ஒரு மிறடில் குடித்துவிட்டு மீதமிருந்த சாற்றை பிளிந்து வாய்க்குள் விட்டார். பின்னர் ஒரு பீடிக்காய் மகேசுவிடம் இரந்து வாங்கி ஓவிசியர் அருகில் அமர்ந்து பற்ற வைத்தார். யாராவது நாட்கூலிக்கு அவரை அழைக்கும் வரைக்கும் அதில் இருப்பது அவரது வழமை.

" ஓவசியர் பங்களா துப்பராக்க ஆள் வேணுமெண்டியள் இவனைப் பிடியுங்கோ.."

ஓவசியர் எதையும் காதில் வாங்கியதாய் தெரியவில்லை. அந்தரத்தில் இருப்பதைப் பார்த்தவாறு குந்தியிருந்தார். சுருட்டு நூற்று இருந்தது.

"டேய் அந்தாளைக் கேள் பங்களா துப்பரவாக்கவேணுமாம்.."

சாமி அவரைப் பார்த்தான்.. அவர் அந்தரத்தில் இருப்பதைப் பார்த்தவாறு இருந்தார்.

"ஐயா" என்றவாறு அவரைத் சாமி தட்டினார்

ஓவசியர் அந்தரத்தில் இருப்பதைப் பக்குவமாகவிட்டுவிட்டு மெதுவாக சாமி பக்கம் திரும்பினார். சுருட்டை திரும்பவும் பற்ற வைத்துவிட்டு மகேசுவைப் பார்த்தார்

" பங்களாவை துப்பரவாக்க சாமி நல்ல ஆள் பிடியுங்கோ இவனை "

சுருட்டை வாய்க்குள் கொண்டு போய் ஓங்கி இரண்டு இழுவை இழுத்தார். அதில் புகை வரவில்லை.

"எங்க பங்களா இருக்கு தெரியுமோ..?"

என்று சாமியைக் கேட்டார்

சாமி மகேசுவைக் கேட்டார்

" டிஸ்பென்சரி பங்களாவுக்குப் பக்கத்திலில அதுதான்"

இருவரும் பங்களா நோக்கிப் புறப்பட்டார்கள். பங்களா முழுவதும் மாட்டுச் சாணமாய் இருந்தது. பசளைக்காய் சாணம் சேர்ப்பவர்கள் இந்தப் பக்கத்தை எட்டிப்பார்க்கவில்லை. மாடு இடிச்சது பாதி சொறிஞ்சது பாதி என குறுஞ் சுவர்கள் இடிந்திருந்தன. வெளவால் பெரிய அளவில் குடிகொண்டதாய் தெரியவில்லை. முகட்டின் ஓடுகள் சில, குரங்குகளால் அங்காங்கே



உடைக்கப்பட்டிருந்தன. சாணத்தின் வாசனை தூக்களாகவே இருந்தது. "கோசலம் கோமயம்" புனிதமானது.. அதை விட இந்த வீட்டைத் தூய்மைப்படுத்த வேறேதும் தேவையில்லை... என்ற தோரணையில் வீட்டில் ஒரு குந்தைப் பிடித்து அதில் ஏறி அமர்ந்து சுருட்டைப் புகைத்தவாறு இருந்தார் ஓவசியர்.

இந்த வீட்டுக்குள் இவர் எப்படி குடிபுகப்போகிறார் என்று சாமி சிந்திக்கத்தொடங்கினார். அந்த வீட்டை அறுக்கையாய் வைத்திருப்பதற்காய் தடிகளைத் தேடி ஜன்னல் நிலை, கதவு நிலைக்கு முண்டு கொடுத்தார். பங்களா முகப்புக்கு கதவு இருந்தது. பின்னால் குசினிக் கதவு உடைந்திருந்தது. அதை இழுத்துக் களட்டி சரித்துப்போட்டு பாதி மறைத்து விட்டார். மாடுகள் உள்ளே வருவதை கொஞ்சம் தடுக்கலாம். பங்களாவுக்குள் போய் படுக்கையறையை மீண்டும் பெருக்கினார். ஓவசியர் எதையும் பாராமல் அந்தரத்தில் நிற்கும் ஒன்றை பார்த்தபடியே இருந்தார்.

"ஐயா நீங்கள் அறைக்குள் இப்ப படுக்கலாம்" என்றார் சாமி

தான் செய்த வேலைகளை ஒவ்வொன்றாக சொல்லியபடியே நின்றார் சாமி. செய்த வேலைக்கான ஊதியத்தை நோக்கியே அவரது அடுக்கு இருந்தது. அவர் கூறிய விடயங்கள் எதிலுமே ஓவசியர் நாட்டம் காட்டவில்லை. அந்தரத்தில் நிற்கும் அதைப் பார்த்தபடியே இருந்தார். சாமிக்கு செய்த

வேலைக்கான சம்பளம் வருமா என்ற அச்சம் மேலோங்கியது. சாமி ஓவசியரைத் தட்டினார். அவர் அந்தரத்தில் அதை விட்டுவிட்டு மெல்ல அவரைத் திரும்பிப் பார்த்தார். "ஐயா எல்லாத்தையும் துப்பரவாக்கிவிட்டன், நீங்கள் இரவுக்கு படுக்கலாம்" என்றார் சாமி

ஓவசியர் மகேசு கடையை நோக்கி நடந்தார். சாமிக்கு ஊதியம் பற்றிய கவலை அதிகரித்தது. "இதுவொன்றும் சிரமதானம் இல்லை" என்று முணுமுணுத்தவாறு சாமி பின் தொடர்ந்தார்.

"ஐயா நல்ல வடிவாய் துப்பரவாக்கியிருக்கு நீங்கள் இரவுக்கு அங்க படுக்கலாம்" என்று மீண்டும் சொன்னார்.

ஓவசியர் மகேசு கடை வாங்கிலில் ஏறி அமர்ந்து சுருட்டை மீண்டும் பற்ற வைத்துவிட்டு மீண்டும் அந்தரத்தில் நிற்கும் அதைப் பார்க்கத் தொடங்கினார்.

"மகேசு காசு என்ன மாதிரி" என்று சாமி அரிந்துகொண்டிருந்தார்.

"டேய் நீ ஸ்பிரிட் வாங்கிக் குடிச்ச காசே 200ற்கு மேல நிற்குது. அந்தாளிட்ட காசை வாங்கி கழிச்சு விடுறன் நீ போ.."

சாமி ஓவசியருக்கு பக்கத்திலிருந்து தனது பீடியை மூட்டிக்கொண்டு வானத்தை அண்ணார்ந்து பார்த்தார். சூரியன் மறைய இன்னமும் நாலு மணி நேரமாவது செல்லும். சாமி மகேசுவிடம் தனது அரிப்பைத் தொடரத் தொடங்கியிருந்தான். இப்போது தொடங்கினால்தான் இரவுக்கு முன்பு ஸ்பிரிட் வாங்கிக் குடிக்க முடியும்.

" நாயே ஒரேயடியாய் பொலிடோலை குடிச்சு சாவன்.... பார் அந்தாளை காசைக் கொடுத்து
சாமான் வாங்குது..."

மகேசு அண்ணரின் உதாரண புருசர் அந்தரத்தில் தொங்கி நிற்கும் ஒன்றை பார்த்தவாறு இருந்தவர் மெல்லென அதைவிட்டுவிட்டு கடைக்குள் சென்று பணிசும் வாழைப்பழத்தையும் வாங்கி சாப்பிட்டுவிட்டு நீர்ப்பாசன பங்களா நோக்கி நடந்தார். தனது உடமைகளைத் தூக்கிக்கொண்டு போய் தனது பங்களாவுக்குள் வைத்துவிட்டு மீண்டும் மகேசு கடை வாங்கிலில் ஏறியமர்ந்தார். ஓவசியர் காலையில் பணிசும் பழமும் மாலையில் பழமும் பணிசும் என்ற உணவுப் பழக்கத்தைக் கொண்டிருந்தார். அவர் மாடுகளுடன் ஒரு ஒப்பந்தத்தை மேற்கொண்டிருந்தார். அந்த பங்களாவின் குசினி தற்போது மாடுகள் வசமிருந்தது. அவருக்கு குசினியின் தேவை இல்லாதபடியால் மாடுகள் பங்களாவுக்குள் தங்குவது அவருக்கு சிரமாகப்படவில்லை.

இரவு கிட்டியது. மகேசு ஒரு புது அரிக்கன் லாம்புக்கு திரியிட்டு, எண்ணைவிட்டு ஓவசியரிடம் கொடுத்தார். அதை வாங்கி வாங்கிலில் வைத்துவிட்டு ஓவசியர் கடைக்குள் வந்து, ஒரு பழமும் பணிசும் வாங்கிச் சாப்பிட்டார். பின்பு விளக்கை எடுத்துக்கொண்டு பங்களாவுக்கு வந்தார். வழமையாக அங்கு தங்கிய மாடுகளுக்கு இவரது வரவு சங்கடத்தை ஏற்படுத்தியிருந்தது. அவர் அவற்றை விரட்ட முனையாமல் அவற்றைக் கடந்து பங்களாவுக்குள் ஏறினார். குசினியைக் கைப்பற்றிய மாடுகள் இன்னமும் அங்கேயேயிருந்தன. சாமி சரித்துவைத்த கதவு மாடுகள் உள்ளே வருவதை தடுத்திருந்தது. கொசுவர்த்தி ஒன்றைக் கொழுத்தி வைத்துவிட்டு பாயை விரித்து சுரோடு சாய்ந்திருந்தார். பின்னர் சுருட்டை மூட்டி புகைத்த வண்ணம் அந்தரத்தில் இருப்பதைப் பார்க்கத்தொடங்கினார்.

காலையில் மகேசு வேனில் வந்திறங்கி கடையைத்திறந்தார். கடையைச்சுற்றிக் பெருக்கி தண்ணீர் தெளித்தார். கடையைத் தட்டி துப்பரவாக்கி மஞ்சள் தண்ணீர் தெளித்துவிட்டு சாமிப்படத்துக்கு பூ வைத்து விளக்கேற்றினார். பின்னர் சாமித்தட்டு, கல்லாப்பெட்டி, கணக்கு புத்தகம் எல்லாவற்றையும் தொட்டு கும்பிட்டுவிட்டு நிமிர்ந்தார். ஓவசியர் நின்றார்.

" ஒரு சுருட்டுத் தாரும் "

நாள் வியாபாரம் அவரில் தொடங்குவது குறித்த சங்கடத்தில் வேறு வழியின்றி சுருட்டை நீட்டினார்.

"ஒரு கட்டாய் வாங்கி வையுங்கோ அடிக்டி கடைக்கு வரத்தேவையில்லை" என்றார் மகேசு

வாங்கிலில் ஏறியமர்ந்து புகைத்த வண்ணம் நேற்றுவிட்ட இடத்திலிருந்து அந்தரத்தில் நிற்குமொன்றை பார்த்தவாறு இருந்தார் ஓவசியர். வவுனியாவுக்கு போவதற்கு வந்திருந்த ஊராரின் சரசரப்பு அவருக்கு ஒரு பொருட்டாகப்படவில்லை. ஊராருக்கு இவர்தான் புது ஓவசியர் என அறிமுகமாகியவாறு அவர் குந்தியிருந்தார்.

" நல்ல ஆட்களைத்தான் இஞ்ச அனுப்புறாங்கள்" என்று அகராதியார் புறுபுறுத்துக் கொண்டு நின்றார்.

திடீரென ஒருநாள் மகேசுவின் வாங்கு காலியாகியிருந்தது. மகேசுவின் ஓவசியர்பற்றிய விசாரணையின் பின்னர் சம்பளம் வாங்க வவுனியாவுக்கு போய்விட்டதாகவும் சிலவேளை அப்படியே யாழ்ப்பாணம் போய் வருவார் என்றும் அவருடன் சேர்ந்து சம்பளம் வாங்கப்போன பிரகிதி சாட்சியமளித்தார். ஓவசியரின் 120 ரூபாய் காசு இன்னமும் மகேசுவின் இருப்பில் கிடந்தது.

மகேசுவின் வேன் வவுனியாவிலிருந்து வந்து கடைக்கு முன்னால் தரித்தது. முன் இருக்கையில் ஓவசியரும் ஒரு பெண்ணும் குழைந்தையும் இருந்தார்கள். ஓவசியர் பெண்ணையும் குழைந்தையையும் இறக்கிவிட்டார். அந்தப் பெண்ணின் கையில் ஒரு ரங்குப்பெட்டியிருந்தது. பின்னால் சென்று ஒரு பக்கீசுப்பெட்டியொன்றையும் இறக்கிவைத்தார் ஓவசியர். அந்தப்பெண் நடனமாதை ஒத்த வசீகரிக்கும் கண்களை கொண்டிருந்தார். கண்ணைச் சுற்றி மையிடப்பட்டிருந்து. சடை வைத்து நீண்ட பின்னலோடு அவர் முடியிருந்தது. முடியின் அடியில் மும்மணிக் குஞ்சம் தூங்கியது. அவர் நடக்கும் போது கூந்தல் ஊஞ்சலாடியபடியிருந்தது. முகம் முழுக்க பவுடர் அப்பி

வெளிறிப்போய் இருந்தார். வெட்கையில் உதித்த வியர்வை அவரின் பவுடர் முகத்தில் தடங்களை ஏற்படுத்தியிருந்தன. அவரது சேலையும் சட்டையும் எந்தவித அடையாளப் பொருந்தங்களையும் கொண்டிருக்கவில்லை. ஆயினும் அவர் அதை நேர்த்தியாக அணிந்திருந்தார். குழைந்தையின் கண்களும் மையிட்டு அழகுபடுத்தப்பட்டிருந்தது. காற்சட்டையும் பெனியனும் அணிவித்திருந்தார். உடல் முழுவதும் பவுடரால் பூசி மெழுகப்பட்டிருந்தது. அதன் நெற்றியில் வைஷ்ணவக்குறி வைக்கப்பட்டிருந்தது. நீண்டு வளர்ந்திருந்த முடியை உச்சியில் கோர்த்து குடும்பியாய் கட்டப்பட்டிருந்தது. அந்தக் குழைந்தை துடியாட்டமாயிருந்தது. அவர் அந்தக் குழைந்தையை கண்ணன் என்று அழைத்தார். அதன் பின்னர்தான் அது ஆண் குழைந்தை என்ற முடிவுக்கு ஊரார் வந்திருந்தனர்.

இது யார் என்ற கேள்வி எல்லோர் மனதிலும் தோன்றியிருந்தது. எதுவுமே சம்பந்தமில்லாத நடையுடையுடன் ஒரு குழைந்தையும் தாயும். அவர்கள் இருவருரையும் அனைவரும் பார்த்தவாறு நின்றார்கள். குழைந்தையையும், பெட்டியையும் வாங்கில் வைத்துவிட்டு அந்த பெண் மகேசு கடைக்குள் வந்து

" Can I have a Orange soda " என்றார்

மகேசுக்கு ஒரேஞ் சோடா என்பது தெளிவாய் விளங்கியது. சோடாவை உடைக்க வெளிக்கிட்ட போது..

" I need cool" என்றார் அந்தப் பெண்

கூல் என்பது அவருக்கு விளங்கியது.

" இஞ்ச இதுதான் கூல்.... குடியுங்கோ அன்ரி"

என்று சோடாவைக் கொடுத்தார் மகேசு. வாங்கில் இருந்த குழைந்தைக்கு சோடாவைப் பருக்கி தானும் குடித்தார். ஓவசியர் வெற்றுப் போத்தலுடன் கடைக்குள் வந்து

" அது என்ட மனிசியும் பிள்ளையும்... இரண்டு பணிசும் வாழைப்பழமும் தாரும்"

வாங்கில் இருந்தவாறு கண்ணனும், அன்டியும் பணிசையும் பழத்தையும் உண்டு முடித்தார்கள். ஓவசியர் ரங்குப்பெட்டியையும், பக்கீசுப்பெட்டியையும் தூக்கிக்கொண்டு பங்களாவுக்கு வந்தார். கண்ணனை இடுப்பில் காவியவாறு அன்ரியும் பின் தொடர்ந்தார். பங்களாவுக்கு வெளியில் நின்றார். பின்னர் சுற்றியிருந்த மரங்கள் ஒவ்வொன்றாய் சுற்றி வந்தார். வானத்தைப் பார்த்தார் வானம் சோலையால் மறைந்திருந்தது. இலைகளின் இடையிடையே வந்த ஒளி அவர் கண்களை குற்றியது. வீட்டைச் சுற்றி வந்தார். அங்கு நின்றிருந்த மாடுகளைத் தடவினார். மாரி மழையில் எழுந்த செடிகள் பச்சைப்பசேலென இருந்தன. அவற்றைத் தடவினார். அவரைப் பின் தொடர்ந்து கண்ணனும் திரிந்தான். அங்கு நின்ற மாடுகளைத் தடவினான் உற்சாகத்தில் ஓடித் திரிந்தான். கண்ணா... கண்ணா என அன்ரி கூவினார். அவன் படுத்திருந்த கன்றொன்றின் மேல் சாய்ந்திருந்தான். அன்ரி ஏதொவொரு அதிசயப் பரவசத்தில் வீட்டையும் மரங்களையும் சுற்றி வந்தார். காட்டுச்செடியில் பூத்த பூக்களையெடுத்து தனது தலை-யை அலங்கரித்துக் கொண்டார். அவருக்கு ஆயர்பாடிக்கு வந்திருப்பதான உணர்வு ஏற்பட்டிருந்தது. பங்களாவை மீண்டும் வெளியில் நின்று பார்த்தார். அதற்கு ஆயர்பாடி மாளிகையெனப் பெயரிட்டார். "வாடா கண்ணா... வா.." என குழைந்தையை அழைத்துக்கொண்டு மாளிகைக்குள் நுழைந்து தனது ரங்குப்பெட்டியைத் திறந்தார். அதற்குள்ளிருந்த கண்ணாடியை எடுத்து முன்னாள் ஓவசியர் விட்டுச்சென்ற ஆணியில் கொழுவினார். அதற்கு கீழ் பவுடர், கண்மை, ரிபன் போன்றவற்றை எடுத்து வைத்தார். பக்கீசுப்பெட்டிக்குள்ளிருந்த பாத்திரங்களை எடுத்து வைத்தார். குசினியை எட்டிப் பார்த்தார். அங்கு இன்னமும் இரை மீட்டிக்கொண்டிருந்த பசுவை வெளியே போகும்படி உத்தரவிட்டார். " யாரங்கே இவளை வெளியே அகற்றுங்கள் " என்ற உத்தரவின் பின்னர் அந்தப் பசுவும் அதன் கன்றும் அங்கிருந்து வெளியேறின. குசினிக்குள் தனது பாத்திரங்களை எடுத்து அடுக்கினார்.

" Mr. Pathmanathan I want to buy some Goods "

ஓவசியர் வீட்டுக் குந்திலிருந்து புகைத்துக்கொண்டிருந்தார். அவரின் கண்கள் இப்போது முற்றத்தில் விளையாடிக்கொண்டிருந்த கண்ணன் மீதில் இருந்தது. அவன் ஒரு சிறு தடியால் மாடுகளை அடித்துக்கொண்டிருந்தான். அவைகளும் அவனது அலுப்புத்தாங்காமல் நின்ற இடத்தில் நின்று சுழண்டுகொண்டிருந்தன.

ஆயர்பாடியின் அழகு அன்ரியை கொள்ளை கொண்டிருந்தது.. பச்சைப்பசேலென வானிறைந்த சோலை.... சோலை நிறைந்த மாடுகள்... அன்ரி கண்ணனை அழைத்தார். அவனின் மேனியிலிருந்த மண்ணையும், பவுடரையும், கண் ஓரம் வழிந்திருந்த கண்மையையும் அழுத்தித் துடைத்தார். மீண்டும் கண்ணுக்கு மையிட்டார். உடல் முழுவதும் பவுடரைப் பூசினார். அவனின் தலை மயிரைச் சீவி உச்சியில் சிறு கொண்டையைப் போட்டார். மீண்டும் தன்னையும் அலங்கரித்தார். கண்ணனை இடுப்பில் சுமந்தபடி மகேசு கடை நோக்கிப் போனார்.

அகராதியார் மகேசுவுடன் கதையளந்து கொண்டிருந்தார். அன்ரியின் வரவு இருவரின் கதையையும் நிறுத்தியது. கண்ணன் இனிப்புப் போத்தலை எட்டிப்பிடிக்கத் தாவிக்கொண்டிருந்தான். மகேசு இரண்டு தோடம்பழ இனிப்புகளை அவனிடம் நீட்டினார். அவன் அதை படாரென பறித்து வாங்கி வாயில் இட்டான். அதை அன்ரி பார்த்து கண்ணனை விழிந்தார்.

"கண்ணா நான் எவ்வளவு தரம் சொன்னேன்.. தெரியாத ஆட்களிடம் எதையும் வாங்கி சாப்பிடக்கூடாது எண்டு..."

" Mr மகேசு எனக்கு கொஞ்ச சமான்கள் வேணும் "

ஓவசியரின் காசு அவரிடம் நின்றபடியால் அன்ரியின் கட்டளைக்காக காத்திருந்தார்.

" ஒரு பவுடர் டின், ஒரு கண்மை டப்பி, நாலு றிபன், ஒரு

கிலோ சீனி, அரிசி, உப்பு, 200கிராம் மஞ்சள், உள்ளி, கடுகு, சீரகம், மிளகு, ஒரு கிலோ கத்தரி, வெண்டிக்காய், பாவற்காய், பூசணி, 1 போத்தல் மண்ணெண்ணெய், தேங்காய் எண்ணை, ஒரு நுளம்புத்திரி பக்கட்" என தனது தேவைகளை சொல்லி முடித்தார். மகேசு எல்லாவற்றையும் எடுத்து மேசையில் வைத்தார். அன்ரி பவுடர் புட்டியைத் திறந்து மணந்து பார்த்தார். " What is this? எனக்கு புட்டிக்குரா இல்லாட்டி லான்ஸ்தான் வேணும்" என்றார்.

பவுடருக்கும் இயற்கையாய் மணம் உண்டு என்ற விடயம் பலருக்கு அப்போதுதான் தெரியவந்தது. ஆங்கிலம் தெரிந்த மிடுக்கில் திரிந்த அகராதியாருக்கு அன்ரியுடன் கதை கொடுத்து தனது மகிமையை வெளிப்படுத்தவேண்டும் என்ற ஆவலாய் சந்தர்ப்பத்தை பார்த்தவாறு இருந்தார்.

" Hi How are you? Where are you from.?."

என்று அகராதியார் அன்ரியிடம் தனது கேள்வியைப் இறக்கினார். அன்ரி திரும்பி அகராதியாரைப் பார்த்தார்.

" Who are you? that is non of your business" என்றார்.

அகராதியார் தனது முகத்தில் விழுந்ததை வெளியில் காட்டாமல் பலமாகச் சிரித்தார். அதைப் புரிந்தகொள்ள அருகில் ஒருவரும் இல்லை என்பதின் ஆனந்தமே அந்தச் சிரிப்பு. போய் மெதுவாய் வாங்கில் அமர்ந்து அன்ரியைப் பார்த்த வண்ணம் 'தன்னைவிட ஒரு அலுப்பான மனிசி ' என்று எண்ணியவாறு குந்தியிருந்தார் அகராதியார். ஓவசியரின் கணக்கு 200 ரூபாய் கடனில் வந்து நின்றது. உதாரண புருசராய் இருந்த ஓவசியர் இன்னுமொரு கடன்காரனாய் உருவாகியிருந்தார். அரச உத்தியோகத்தர் என்பதால் கடன் வசூலிப்பது இலகு என்பதால் திடமாக இருந்தார் மகேசு.

வாங்கிய சாமான்களை கூடையில் போட்டு காவிக்கொண்டு மற்றய கையில் கண்ணனை இழுத்தவாறு போய்க்கொண்டிருந்தார். கண்ணன் கையிலிருந்த மலிபன் விசுக்கோத்தின் திளைப்பில் சென்றுகொண்டிருந்தான். ஊராருக்கு அன்ரி இன்னுமொரு புதிராய் இருந்தார். அவரைப் பார்க்கும்போதெல்லாம் மெல்லிய சிரிப்புடன் கலந்த பரிதாபம் அவர் மீது ஊராருக்கு இருந்தது.

ஆயர்பாடி மாளிகை தினமும் ஆடல் பாடல்களால் நிறைந்திருந்தது. கருமை நிறக் கண்ணா பாடல் மீண்டும் மீண்டும் ஒலித்துக்கொண்டிருந்தது. அன்ரியின் ஆடல், பாடல்களை ஊரார் ஒளித்திருந்து பார்த்து களித்து கவலை கொண்டார்கள். தினமும் கண்ணனுக்காக பாடல்களைப் பாடினார், ஆடினார். அவள் பாடல்களால் காளை மாடுகள் வீறாப்புக்கொண்டு பசுக்களோடு புணர்ந்தன. பசுக்கள் சூழ் தரித்து கன்றுகளை ஈன்றன. ஆயர்பாடி மாளிகை கன்றுகளால் நிறைந்திருந்தது. ஆயர்பாடியை சூழ்ந்திருந்த மரங்கள் ஒரு சுற்றுப் பருத்து விருச்சங்கள் ஆகின. அன்ரி கண்ணனுக்கு பாடங்களைக் கற்பித்தார். ஆங்கிலம், சிங்களம், தமிழ் என மும்மொழிகளிலும் பாடங்கள் நடாத்தப்பட்டன. அன்ரியின் கையில் பிரம்பொன்றிருந்து. படிக்க முரண்பட்ட மரங்கள் அடிவாங்கின. ஏனைய மரங்கள் படித்துத் தேறின. ஆயர்பாடியின் பள்ளிக்கூடத்தை ஊர்ச் சிறார்கள் ஒழித்திருந்து பார்த்து இரசித்தார்கள்.

காலையில் சுருட்டுக்காக கடையடிக்கு வந்தார் ஓவசியர்.

" கடன் இருநூறு ரூபாய்யைத் தாண்டியிட்டுது.. அன்ரி வந்து நிறையச் சாமான்கள் வேண்டியிட்டா.."
என்றார் மகேசு.

" அவ கேட்கிறதைக் குடுக்காதையும் ஒரு நாளைக்குத் தேவையானதைக் குடும்.."

என்றவாறு தன்னிமிருந்து நூறு ரூபாய்களை மகேசுவிடம் நீட்டினார். கிலோ அளவெல்லாம் கிராம்மாகவும், போத்தல் அளவெல்லாம் மில்லியாகவும் மாறியிருந்தது. இதனால் அன்ரியிற்கும் மகேசுவுக்கும் விரிசல்கள் அதிகரித்தன.

" என்ட husband காசு தாரார் நீர் இப்படி செய்யேலாது.." என்று இடித்துரைத்தார் அன்ரி.

" அவர் தாற காசிலும் பார்க்க நிறைச் சாமான்கள் வாங்கிறியள் " என்றார் மகேசு

" I need a detail billing " என்றார்

திகதியைப் போட்டு கூட்டிக் கணக்குப்போடும் மகேசுக்கு detail billing அம்பு மனதில் தைய்த்தாலும் அதை சுதாரித்துக்கொண்டு

" அதெல்லாம் நான் ஓவசியரிட்ட குடுக்கிறன் நீங்கள் போங்கோ"

என்று அன்ரியை அனுப்பி வைத்தார்.

" நான் ஒன்றும் பிச்சையெடுக்க வரவில்லை " என ஆங்கிலத்தில் திட்டியவாறு ஆயர்பாடிக்கு திரும்பிய அன்ரி கணவரைப் பேசிக்கொண்டிருந்தார். ஆயர்பாடி மும்மொழிகளாலும் அல்லோகல்லோலப்பட்டது. ஓவசியர் குந்தில் குந்தியிருந்து கண்ணனைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

" You can't control me " என பெரிதாகச் சொல்லி தனது வாதத்தை நிறுத்திக்கொண்டார் அன்ரி. அவரது இடுப்பில் கண்ணன் குந்தியிருந்தான்.

மகேசு கடை வாசலில் ஓவசியர் குந்தியிருந்தார். வழமை போல் அந்தரத்தில் ஏதோவொன்றை பார்த்தவாறு இருந்தார். அவரையிட்டு எல்லோர் மனதிலும் ஒரு கவலையிருந்தது. அவருக்கு உதவி செய்ய ஒரு கூட்டம் கூடியது. அவர்களின் நீண்ட நேர வாத பிரதிவாதங்களுக்கு பின்பு, அன்ரியின் சித்தப்பிரமையைப் போக்க திடீர் அதிர்ச்சியைக் கொடுக்கலாம் என்று தீர்மானித்தது. 'அவவை கெடுப்பது போல நடிச்சமென்றால்' ஒரு அதிர்ச்சிக்கான வாய்ப்பு இருப்பதாக கூட்டத் தலைவன் சொன்னான். இவ்விடயத்தில் முன் அனுபவங்கள் இல்லாததால் திரைப்பட வில்லன் ஒருவனை கற்பனை பண்ணி என்ன பேசுவது என்பதையும் தயார்ப்படுத்தினர்.

இரவு பத்து மணியைத் தாண்டியிருந்தது. அருகிலிருந்த வாசிகசாலையில் தாக்குதலுக்கான நேரம்வரும் வரை சீட்டாடிக்கொண்டிருந்தது மூன்று பேர்கொண்ட அந்தப் படை. ‘ திடீரென வீட்டுக்குள் சென்று அன்ரியைப் பிடித்து கட்டிப்போட்டு உன்னைக் கெடுக்கப்போகிறோம்’ என்று வெருட்டுவது என்பதே திட்டம். இந்த திட்டம் குறித்து ஓவசியரிடம் ஆலோசிக்கப்பட்டது. அவர் அதை மௌனமாகக் கேட்டுக்கொண்டிருந்தார். மௌனம் சம்மதத்துக்கு அடையாளம் என தலைவன் சொன்னான். படை மெதுவாக மாடுகளைத் தாண்டி ஆயர்பாடி மாளிகைக்குள் புகுந்தது. அதிலொருவன் அன்ரியின் கையைப் பிடித்தான். அதேவேளை குசினிப் பக்கம் உள்நுழைய முற்பட்ட தலைவன் விறகு தடுக்கி குப்புற வீழ்ந்தான். ‘ஐயோ’ என்று அவன் ஒழுப்பிய ஓலத்தால் திட்டம் பாளாய்ப்போனது. அன்ரி கையைப் பிடித்தவனை ஓங்கி அறைந்தார். மும்மொழிகளிலும் திட்டினார். நிசப்தமாக இருந்த தம்பனைக் கிராமம் அன்ரியின் ஓலத்தால் மீண்டும் விழித்தது. அருகிலிருந்த வீட்டு விளக்குகள் மீளவும் எரிய ஆரம்பித்தன. அன்ரி மிகவும் தெளிவாய் உள்ளாரென முள்ளும், மரமும் வேலியும் கீற படை ஓடி ஒளித்துக்கொண்டது.

காலை மகேசு கடையடி நீதிக்காய் கூடியிருந்தது. ஓவசியர் வழமைபோல் வாங்கில் குந்தியவாறு சுருட்டை பற்றிய வண்ணம் அந்தரத்தில் நிற்கும் ஒன்றை பார்த்தவாறு இருந்தார். எனக்கு நீதி கிடைத்தாகவேண்டும் என்று அன்ரி கண்ணனுடன் குந்தியிருந்தார். ஊரில் காலையில் வம்பளக்கவரும் பெரிசுகள், அன்ரியின் செய்தி கேள்விப்பட்டு விடுப்பு பார்க்க வந்தவர்கள் என பலரும் கூடியிருந்தனர். அகராதியார் ஆடியாடி வந்து சேர்ந்தார். அகராதியாரைக் கண்டதும் அன்ரி ஆங்கிலத்தில் விளாசத் தொடங்கினார். அகராதியாரும் அடிக்கடி அவரை ஆமோதித்துப் பேசினார். ஊரார் இருவரினதும் வாயை மாறிமாறிப் பார்த்தவண்ணமிருந்தனர். புரியாத பாசையின் ஓசை நயத்தை அனைவரும் எரிச்சலுடன் பார்த்துக்கொண்டு நின்றார்கள். அன்ரி என்ன கதைகிறார் என்ற கடுப்புத் தாங்கேலாமல்..

“ அகராதியார் அன்ரி என்ன சொல்லுறா..”

என்று ஊரார் கேட்டார்கள்

“ மனிசி விசயமான மனிசிதான் ”

அவர் முடிச்சு அவிட்டு தன்னுடைய திரி இரண்டைச் சேர்த்து சொல்லுவதற்கு காலம் எடுக்கும். பொறுமையில்லாமல் ஊரே அவரின் வாயைப் பார்த்தவாறு நின்றது. அதற்குள் படையும் தலைவனும் கூட்டத்தோடு கலந்தார்கள். ‘நல்லதுக்குப் போய் தங்களுக்கு வீண்பழி வந்துவிடுமோ’ என்ற அச்சத்தில் படை நின்றது. தலைவன் தனது பதட்டத்தை தவிர்க்க கடையில் தொங்கிய வாழைக்குலையிலிருந்து பழத்தை பிடுங்கி உண்டுகொண்டிருந்தான். அகரா தியார் தனது மொழிபெயர்ப்பை விட்டுக்கொண்டிருந்தார்.

“ யாரோ இரவு அன்ரி வீட்டுக்குப் போய் கையைப் பிடிச்சு இழுந்தாங்களாம். பெண்களுக்கு பாதுகாப்பு இல்லாத சமூகம் சுதந்திரமான சமூகம் இல்லையாம். தன்ட மாளிகை கண்டவனும் வந்துபோற வேசி வீடு இல்லையாம். பெண்களின்ட பாதுகாப்பை இந்த சமூகம் உறுதிப்படுத்தவேண்டுமாம். பெண்களுக்குப் பாதுகாப்பில்லாத சமூகம் ஒரு காட்டுமிராண்டி சமூகமாம்.” என்று அன்ரியின் பேருரையிலிருந்து ஒரு சிறு துரும்பை அகராதியார் மொழிபெயர்த்தார். படைத்தலைவன் நீண்ட நேரமாய் யோசித்தான். அன்ரியை தேற்றுவதற்கான ஒரு ஆங்கில வாசகத்தை தேடினான். கடைசியில் கண்டுபிடித்து நினைவுக்குக் கொண்டு வந்து பாடமாக்கியதை ஒப்புவிப்பவன் போல்

“Don’t Worry ante”

என நான்கு தடவைகள் சொன்னான்.

“ நாங்கள் இருக்கிறம் உங்களுக்கு ஒன்றும் நடக்காது “

என்ற உத்தரவாதத்தை தலைவன் வழங்கினான். ஊரார் தங்களது அலுவல்களைப் பார்க்கத் தொடங்கினார்கள். அகராதியார் வெற்றிலையை வாங்கிப் போட்டார்.

“ யார் உந்த நாய்வேலையைப் பார்த்தது..” என்றவாறு நகன்றார்.

மகேசு தலைவனைப் பார்த்து கொல்லென சிரித்தார்

“ அண்ணை சும்மா கடுப்பை ஏத்தாதியுங்கோ...நீங்கள்தான் ஐடியா குடுத்தது.. இப்ப சிரிக்கிறியள்...”

என்று சினந்தவாறு தலைவன் அகன்றான். ஓவசியர் வாங்கில் குந்தியபடியேயிருந்தார். இதுவரை நடந்த விசாரணை குறித்து அவர் ஏதும் அக்கறைப்பட்டவராக தெரியவில்லை. எந்தவொரு அதிர்வுமில்லாமல் இருந்தார்.

அன்ரியின் சமையல் குறித்த கேள்வி எல்லோர் மனதிலும் இருந்தது. அந்தப் பரிதாபத்தில் ஆயர்பாடி மாளிகையைச் சுற்றியிருந்த ஊராரின் உணவு கண்ணனுக்கு அவ்வப்போ கிடைத்தது. அவனும் அதை களவாக வாங்கி உண்டான். அந்தக் குழைந்தை பற்றிய அக்கறை அனைவரையும் உறுத்திக்கொண்டிருந்தது.

மகேசு கொடுத்த ஆதரவில், பெரியதாயிடம் கண்ணனை ஒப்படைப்பதற்கு ஓவசியர் சம்மதப்பட்டார். அவர்கள் யாழ்ப்பாணத்தில் இருந்தார்கள். ஒரு இரவு ஓவசியர் கண்ணனைத் தூக்கிக்கொண்டு வந்தார். தயார் நிலையிலிருந்த மகேசுவின் வேனில் ஏற்றி பூவரசங்குளம் வந்தார்கள். அங்கிருந்த ஓவசியரின் பங்களாவில் தங்கிவிட்டு காலை யாழ்ப்பாணம் புறப்பட்டார்கள். கண்ணன் காற்சட்டையும் மேற்சட்டையும் அணிந்திருந்தான். கறுப்பு பொட்டு இட்டு தலைமுடி சரித்து இழுத்திருந்தது. அவன் பஸ்சின் கண்ணாடி அருகே நின்று ஓடும் மரங்களை பார்த்து களித்தவாறு இருந்தான்.

ஆயர்பாடியில் அன்ரியின் ஓலம் ஒழும்பியது. சோலைக்குள் நின்ற மரங்கள் பின் ஒவ்வொன்றாக தேடினார்.
‘கண்ணா.. கண்ணா..’ கத்திக்கொண்டு ஓயாமல் வீட்டைச் சுற்றி வந்தார்.

"கண்ணா வந்துவிடு என்ட செல்லம் வந்துவிடு"
வீட்டுக்குள் பலமுறை தேடினார்.

'கண்ணா... கண்ணா..' என தெருவில் நின்று கத்தினார். தெருவால் போன எல்லோரிடமும் கேட்டார். 'கண்ணா கண்ணா" என்று கத்தியவாறு மகேசு கடையடிக்கு வந்தார்

" Mr. மகேசு என்ட கண்ணனைக் காணவில்லை கண்டுபிடியுங்கோ Please " என்று கேட்டார்.

" ஓவசியர் கண்ணனைக் கொண்டு யாழ்ப்பாணம் போயிட்டார்" என்று மகேசு சொன்னார்.

" இல்லை அவர் அப்படிச் செய்ய இயலாது.. என்னிடம் சொல்லாமல் அவர் அப்படிச் செய்யமாட்டார். He is my Child அது என்ட பிள்ளை. Mr மகேசு, ஒரு ஒற்றையும் பேனையும் தாரும் நான் ஒரு கடிதம் தாரன் அதை பொலிஸ் அத்தியேட்சகரிடம் கொடுங்கோ.. "

அன்ரி ஆங்கிலத்தில் கடிதம் ஒன்றை எழுதினார்.

" இந்த நாட்டில் அனைத்து குடிமக்களின் வாழ்வும் பாதுகாப்பும் உத்தரவாதப்படுத்தப்பட்டுள்ளது. அவர்களின் பாதுகாப்பை உறுதிப்படுத்தவேண்டிய கடமை பொலீசு ஆகிய உங்களுக்கு உண்டு. எனது மகன் கண்ணன் காலையிலிருந்து காணாமல் போயுள்ளான். அவன் கடைசியாய் எனது ஆயர்பாடி மாளிகையில் எனது அருகில் தூங்கியிருந்தான். அவனை நானே ஒரு பாடல் பாடி தூங்க வைத்தேன். அவனது பாதுகாப்புக்கும் உயிருக்கும் நீங்களே பொறுப்பு. அவனை நீங்கள் எனக்கு மீட்டுத்தரவேண்டும். "

கடிதத்தை மடித்து மகேசுவிடம் கொடுத்தார்

" இந்த வேனில் உடனடியாய் போய் நீங்கள் பொலிஸ் அத்தியேட்சகரிடம் கொடுங்கள் " என்றார் அன்ரி

மகேசு கடிதத்தை வாங்கி கல்லாவுக்குள் போட்டார். தான் வவுனியாவில், கடைக்கு வாங்கவேண்டிய சாமான்களின் பட்டியல் அடங்கிய துண்டை எடுத்து அன்ரிக்கு முன்னாள் மடித்து பொக்கற்றில் வைத்தார். பின்னர் பொக்கற்றைத் தட்டி

" நான் வவுனியா போனவுடன் முதல்வேலை " என்றார்.

அன்ரியின் கடிதம் கல்லாவுக்குள் இருந்தது. வவுனியா நோக்கி வேன் பயணித்தது. அன்ரி கடை வாங்கில் ஏறியமர்ந்தார். கடையை கவனிக்க மகேசுவின் மனைவி வந்திருந்தார். மகேசுவின் மனைவியோடு தனது சோகங்களைச் சொல்லிப் புலம்பிக்கொண்டிருந்தார். கடைக்கு வருபவர்களிடமும், வழியில் நடந்து போகிறவர்களிடமும் " தனது குழைந்தையை காணவில்லை எனவும், தனது குழைந்தையை பிரிக்கும் உரிமை யாருக்கும் இல்லை" எனக் கூறியபடியிருந்தார். அன்ரியின் சோகம் அனைவரையும் ஒட்டிக்கொண்டது. மகேசுவின் மனைவி அந்தத் தாயின் சோகத்தில் ஒடிந்துபோயிருந்தார். அன்ரி எதையும் குடிக்கவும் உண்ணவும் மறுத்தார்.

"எனது கண்ணனைக் காணாமல் நான் சாப்பிடமாட்டேன் "

என்று எல்லாவற்றையும் மறுத்தார். ஊர்ப் பெண்களின் பல முயற்சிகளும் வெற்றியளிக்கவில்லை. அவரது கண் மை கலைந்துபோயிருந்தது.. தலைமுடியின் நேர்த்தியான பின்னல் குலைந்து போயிருந்தது...

வாங்கிலில் குந்தியபடியேயிருந்தார். வவுனியாவிலிருந்து வேன் வந்து சேர்ந்தது. அன்ரி ஓடிப்போனார்

" கண்ணன் வந்தானா " எனக் கேட்டார்.

" நான் நேரடியாய் குற்றப் புலனாய்வு இன்ஸ்பெக்டரிடம் கதைச்சுக் கடிதத்தை குடுத்தன். அவர் உடனடியாக இலங்கை பூரவும் அறிவிச்சிருக்கிறார். வலுகெதியாய் கண்டு பிடிச்சிடுவாங்களாம் " என்று சொல்லிவிட்டு சாமான்களை இறக்கத் தொடங்கினார் மகேசு.

" ஏன் அப்பா இந்தக் கண்றாவி வேலை பாவம் மனிசி " என்றவாறு மகேசு மனைவி வீடு நோக்கி சென்றார்.

இரவு பத்துமணியாகியது. மகேசு கடையைப் பூட்டி வீட்டுக்கு புறப்பட்டார். அன்ரி அங்கேயே குந்தியிருந்தார். கண்ணா கண்ணா என இடையிடையே அழைத்துக்கொண்டிருந்தார். நாட்கள் இரண்டாகியது. ஓவசியரும் வந்து சேரவில்லை. மகேசுக்கு கவலை மேலோங்கியது. அன்ரிக்கு பொலிஸ் மீதிருந்த நம்பிக்கை தகர்ந்தது. கண்களால் நீர் வழிந்து கொண்டேயிருந்தது. ஊரே சோகத்தை தாங்கியவாறு அவரைக் கடந்து சென்றது. அவர் அந்த வாங்கினில் குந்தியபடியே இருந்தார். ஆயர்பாடி ஒளியிழந்தது. மீண்டும் இருள் பற்றிப்போயிருந்தது.

இரவு பத்துமணியாகியது. மகேசு ஒரு பழத்தையும் பணிசையையும் அன்ரியிடம் நீட்டி சாப்பிடச் சொன்னார்.

"Mr. மகேசு என்ட பிள்ளையை தேடிக் கண்டு பிடிச்சுத் தாங்கோ.."

மகேசு பழத்தையும் பணிசையும் அவர் அருகே வைத்துவிட்டு வீடு நோக்கிப் புறப்பட்டார்.

நான்கு நாட்களுக்கு மேலாகியது ஓவசியர் வந்தபாடில்லை. பணிசும் பழமும், ஒரு செம்பு தண்ணீரும் வாங்கின் அடியில் கிடந்தது. நீர், ஆகாரம் அற்று அந்த வாங்கினில் நீண்டபடி படுத்திருந்தார் அன்ரி. அவர் கண்ணனை அழைத்து க்கொண்டேயிருந்தார்.

அவரது அழைப்பு மெல்ல மெல்ல அவரது உதடுகளுக்குள்ளேயே நின்றது. அவரது கண்கள் மூடாமல் திறந்தபடியே அந்தரத்தில் நிற்கும் ஏதொவொன்றை பார்த்தவாறு இருந்தன.

●

# மறதிக்கெதிரான நினைவின் போராட்டம்

நல்ல சிவம் இல்லாமல் ஒரு வருடம் கழிந்து விட்டது. “நீரில் முழ்கி நினைப்பொழிந்து போனோம்” என்று சொல்லும் வாழ்வல்ல அவர் வாழ்ந்த வாழ்வு என்று நினைப்பூட்டும் விதமாக அவரை நினைவு கொள்கின்றோம்.

அதிகாரங்களுக்கு எதிராக மக்கள் காட்டும் எதிர்ப்புக்களை “மறதிக்கெதிரான நினைவின் போராட்டம்” என “மிலான் குந்தேரா” என்ற பிரெஞ்சு எழுத்தாளர் குறிப்பிடுவார். சிவத்தை நினைவு கூர்வது என்பதும் இன்றைய அதிகாரங்களுக்கெதிராக ஒரு போராட்ட வடிவமே.

----

எழுத்தாளர் மு. தளையசிங்கத்தின் படைப்புகளில் “நல்ல சிவம்” என்ற பாத்திரம் வரும். அது அந்த எழுத்தாளரின் மனச்சாட்சியின் குறியீடாக இருக்கும். சிவம் அண்ணனும் தேடகம் என்ற அமைப்பின் மனச்சாட்சியில் திகழ்ந்தவர். தேடகம் என்ற அமைப்பு சாதனைகள் பல செய்தது என்ற அர்த்தத்தில் இதைச் சொல்ல வரவில்லை - நாம் செயல்பட்ட இந்தக் கடுமையான காலத்தில் வெறுப்பைத் தவிர்த்து நீதியான விமர்சனங்களை வைப்பதற்கும் அது தொடர்பாக சில செயல்பாடுகளைச் செய்வதற்கும் ஒரு வழிகாட்டியாக வாழ்ந்தவர்.

----

அவர் பிறந்த ஊர், குடும்பப் பின்னணி மற்றது 60களில் ஆரம்பித்த முதலாளித்துவத்திற்கு எதிராக நடைபெற்ற போராட்டங்கள், கொடுமையான யாழ்ப்பாணத்து சாதி அடுக்கு முறை இவரை கொமினிஸ்ட் சிவம் என அழைக்க வைத்தது.

----

தேடகம் ஆரம்பித்த அந்த நாட்களில் இன்று எனக்கிருக்கும் பெரும்பான்மை நண்பர்களை சந்தித்த 280 வெலசி வீதி இலக்கம் 2407 இளங்கோவின் அறையில் இவரைச் சந்திக்கின்றேன். அந்த அறையை இன்றும் மறக்க முடியாது. எப்போ யாரால் அழைத்து வரப்பட்டார் என்று ஞாபகம் இல்லை. தேடகம் கட்டிடம் கிடைக்கும் முன்னர் இவருடன் தொடர்பு வந்து விட்டது என்பது தான் ஞாபகம். இவரை சந்தித்த முதல் கட்டத்திலே இவருடன் சண்டையிட்டேன் சீனாவில் சினமென் சதுக்கத்தில் மாணவர்கள் இறந்த அந்தக் கிழமை. முன்பு நான் எதிர்கொண்ட தோழர்கள் போல் இவர் இல்லை என்பதை உணர்ந்தேன். மக்கள் மத்தியில் வேலை செய்த அனுபவம் அதைவிட தமிழில் நிறைய வாசித்த அறிவும் வித்தியாசமானவராக இவரைக் காட்டியது.

“நிரபாரதிகளின் காலம் நாடகம்” மேடையேற்றுவதில் நாங்கள் நிறையச் சிக்கல்களை எதிர் கொண்டோம். ஒரு கட்டத்தில் சரியாக மனம் தளர்ந்து போனேன். தோளில் கைபோட்டு செல்லண்ணன் நாங்கள் இருக்கின்றோம் ஒன்றுக்கும் பயப்படாதேயுங்கோ - சிவம் அண்ணின் அந்தத் தோழமை அவர் மரணம் வரை தொடர்ந்தது.



அந்நிய நாட்டில் வாழ்க்கை தந்த புது நெருக்கடிகளை சமாளித்து குடும்பம், குழந்தைகள் பிக்கல்கள், பிடுங்கல்கள் இவற்றையெல்லாம் விட மாற்ற முடியா நோய் - மனம் சோராமல் எங்களுடன் கூட நடந்து வந்தவர் - இவரைப் போல் வேறு யாராக இருந்தாலும் - பொது வாழ்வில் இருந்து எப்போ ஒதுங்கியிருப்பார்கள். இங்கொன்றைக் குறிப்பிட வேண்டும். இவர் மனைவி இவருக்குக் கொடுத்த பக்கத் துணை நின்ற வாழ்க்கை.

----

ஒரு கொடுமையான காலத்தில் நாங்கள் வாழ நிர்ப்பந் திக்கப்பட்டுள்ளோம். யேசு நாலு அப்பத்தை நாலாயிரம் பேருக்கு பங்கிட்டால், நாலாயிரம் அப்பத்தை நாலுபேர் பங்கிடுகின்ற காலமிது. பூலோக மயமாதல் என்ற பெயரால் பூமியை பங்கிடுகின்றார்கள். பொலிவியா காட்டில் மக்களை நேசித்தவனை துண்டு போட்டனர். தலைவர்களின் சிலைகளை வீதியில் கட்டி இழுத்து அவமானப் படுத்துகின்றனர். தோல்விகளால் மனம் வெடித்த காலம்.

கல்லானது பெண்ணாகியது கண்டு<br>இவ்வண்ணம் நடந்த வண்ணம்<br>இவ்வுலகுக்கெல்லாம் உய்வண்ணம் அன்றா<br>துயக் எண்ணம் உண்டோ?

என்று “கம்பன்” துள்ளி மகிழ்வதற்கு துள்ளுவதற்கு எந்தக்காரணங்களும் எங்களுக்கு இல்லை. நம்பிக்கைகள் எல்லாம் பொடி பொடியாகின்றது. எத்தனை பிரச்சினையால் சிவம் சூழப்பட்டாலும் தனிப்பட்டவிதமாக வளர்ந்து வரும் குழந்தைகளின் எதிர்காலம் தீராத நோய்களால் தாக்கப்பட்டாலும் சோராமல் வாழ்ந்தார்.

இறுதிவருடங்களில் இவர் எங்களுடன் உரையாடி எடுத்த அரசியல் முடிவுகள் - இவரை உண்மையான கொம்மினிஸ்ட் சிவம்” என நிருபித்தது. இவர் வாழ்ந்த வாழ்வாலும் செய்கைகளாலும் சிவம் அண்ணன் ஒரு நல்லவன் என சொல்ல வைத்தது. சிவம் அண்ணன் விட்டுச் சென்ற செய்தியை எங்கள் ஊர்க் கவிஞன் மஹாகவி கவிதையில் சொல்லி முடிக்கிறேன்.

உண்மை கொடிதோ இந்த<br>உலகின் அதனுடன் போரிட்டு வாழப்பிறந்தோம்<br>கலங்கி வீழ்வதோ அழுவதோ இல்லை<br>பார் எட்டுத்திக்காய் உலகம் விரிந்து கிடக்கிறது

**- செல்வம் -**

# தோழர் சிவத்தை நினைவு கூறுவோம்



தோழர் மார்க் அவர்கள் சில வருடங்களுக்கு முன்னர் லண்டன் வந்தபோது என்னை சந்தித்து தோழர் சிவம் அவர்கள் கனடாவில் இருப்பதையும் அவர் தொடர்ந்தும் புரட்சிகரப் பணிகளை முன்னெடுத்து வருவதையும் தெரிவித்தபோது நான் உண்மையிலே மிகவும் மகிழ்வு கொண்டேன். அத்துடன் தோழர் சிவம் அவர்களின் தொடர்பை தான் ஏற்படுத்திக் கொடுப்பதாயும் நாங்கள் அனைவரும் சேர்ந்து ஒருமித்து செயற்படவேண்டும் என்று தோழர் மார்க் அவர்கள் என்னிடம் கேட்டுக்கொண்டபோது நான் மிகவும் உற்சாகத்துடன் சம்மதம் தெரிவித்தேன். அதன்படி தோழர் சிவம் அவர்களின் தொலைபேசி அழைப்பை ஆவலுடன் நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். தொலைபேசி அழைப்பு வந்தது. ஆனால் பேசியது தோழர் சிவம் அல்ல. மாறாக தோழர் மார்க் அவர்களின் மகன் அன்ரனி அவர்கள். அவர் தோழர் சிவம் மரணம் அடைந்து விட்டார் என்ற செய்தியை தெரிவித்தபோது நான் மிகவும் ஏமாற்றமும் வேதனையும் அடைந்தேன். தோழர் சிவம் அவர்களுடன் சேர்ந்து புரட்சிகரப் பணிகளை மேற்கொள்ள எண்ணியிருந்த வேளையில் அவருக்காக அஞ்சலிக் குறிப்புபொன்றை எழுதவேண்டிய துரதிருஸ்ட நிலை வரும் என நான் எதிர்பார்க்கவேயில்லை.

தோழர் சண்முகதாசன் அவர்கள் இலங்கையில் கம்யூனிஸ்ட் இயக்கத்தின் முன்னோடித் தலைவர்களில் ஒருவர். இலங்கையில் புரட்சிகர இயக்கத்திற்கு அவர் செய்த பங்களிப்புகள் குறித்து அவர் வாழ்ந்த காலத்தில் பல விமர்சனங்கள் முன்வைக்கப்பட்டபோதிலும் மாவோயிச இயக்கத்தை முன்னெடுத்து தலைமை தாங்கி வழி நடத்தியதில் அவர் ஆற்றிய முதன்மையான பங்களிப்புக் குறித்து எந்த விதமான மறு கருத்துக்கும் இடமிருக்கமுடியாது. அவர் எந்தவித விட்டுக் கொடுப்புகளுக்கும் இடங்கொடாமல் இறுதிவரை கொள்கையில் உறுதியுடன் செயற்பட்டவர். அவருடைய தலைமையில் செயற்பட்ட கம்யூனிஸ்ட்கட்சியில் சேர்ந்து புதிய ஜனநாயகப் புரட்சிக்காக அயராது உழைத்த பல தோழர்களில் தோழர் சிவமும் ஒருவர். இங்கு நாம் தோழர் சிவம் பற்றி உரையாடும் போது தோழர்கள் சிவராசா :ரத்தினம் ஆகியோரை மறக்க முடியாது தவிர்க்கவும் முடியாது. மூவரும் கரவெட்டியை பிறப்பிடமாக கொண்டதோடு தோழர் சண்முகதாசன் வழிகாட்டலில் புதிய ஜனநாயகப் புரட்சிக்காக உழைத்தவர்கள். "மும்மூர்த்திகள்" என்று அழைக்கக்கூடிய அளவிற்கு எப்போதும் ஒன்றாகவே இருந்து ஒன்றாகவே செயற்பட்டார்கள். தோழர் சண்முகதாசன் தலைமையில் கம்யூனிஸ்ட்கட்சியானது சாதிப் போராட்டத்தை முன்னெடுத்தபோது தோழர்கள் சிவம், ரத்தினம், சிவராசா ஆகியோர் கட்சியின் வழிகாட்டலில் ஆற்றிய பங்கு மறக்க முடியாததாகும். குறிப்பாக கண்பொல்லை கிராமத்தில் நடந்த சாதிப்போராட்டத்தின்போது இந்த தோழர்கள் பல வழிகளில் ஆற்றிய பங்கை இப்போதும் அந்த மக்கள் நன்றியுடன் நினைவு கூருவதை நாம் காணலாம்.

1983ம் ஆண்டுக்குப் பின்னர் விடுதலை இயக்கங்கள் வேகமாக வளர்ச்சி கண்டபோது அவ் இயக்கங்களில் இணைந்து கொண்ட பல போராளிகள் மார்க்சிய அறிவை பெறவும் மார்க்சிய பாதையை தேர்ந்தெடுக்கவும் தோழர்கள் சிவம், ரத்தினம், சிவராசா ஆகியோர் காரணமாக இருந்திருக்கின்றனர். குறிப்பாக ரெலோவில் போராளிகள் தாஸ் மற்றும் பலரின் நல்ல மாற்றங்களுக்கு இவர்களே பின்னனியில் இருந்துள்ளனர். இதனால் ஆத்திரம் கொண்ட "பொபி" பிரிவினர் இவர்களுக்கு மரண தண்டனை வழங்கப்படும் என எச்சரித்திருந்தனர். அதன் பின்னர் நெல்லியடியில் புலிகளுக்கு பொறுப்பாக இருந்த சுக்ளா என்பவரால் புலிகளை விமர்சித்தார்கள் என்று குற்றம்சாட்டி தோழர்கள் ரத்தினம் சிவராசா ஆகியோர் கைது செய்யப்பட்டு அடைத்து வைத்து சித்திரவதை செய்யப்பட்டனர். அவர்களை படுகொலை செய்ய திட்டமிட்ட வேளை அவர்கள் அங்கிருந்து தப்பிச் சென்றனர். இவ்வாறு பல சித்திரவதைகள் மற்றும் கொலை அச்சுறுத்தல்களுக்கு மத்தியிலும் இத் தோழர்கள் தங்கள் புரட்சிகரப் பணிகளில் இருந்து ஒதுங்கவில்லை. மாறாக கிடைக்கும் சந்தர்ப்பங்களை எல்லாம் பயன்படுத்தி தங்களால் இயன்ற பணிகளை மேற்கொண்டு வந்தார்கள். சில இயக்கங்களால் இவர்களுக்கு அச்சுறுத்தல்கள் இருந்த வேளையிலும் இயக்க தலைமைகளுடன் முரண்பட்டு பாதுகாப்பு தேடிவந்த பல போராளிகளுக்கு அடைக்கலம் கொடுத்து அவர்களைக் காப்பாற்றியதை இன்றும் அந்த போராளிகள் மறக்காமல் நன்றியுடன் நினைவு கூருவதை நாம் காணமுடியும்.

தமிழ் மக்கள் பாதுகாப்பு பேரவை இயக்கத்தைச் சேர்ந்த நானும் மற்ற தோழர்களும் மாக்சிய அறிவைப் பெறுவதற்கு தோழர்கள் சண்முகதாசன், டானியல், சின்னத்தம்பி, இக்பால் ஆகியோரை அழைத்து வந்து அரசியல் வகுப்பெடுக்க வைத்த தோழர்கள் சிவம், ரத்தினம், சிவராசா ஆகியோரின் பங்கு குறிப்பிடத்தக்கதாகும். குறிப்பாக தமிழீழம் சிறந்த தீர்வு அல்லாதது மட்டுமன்றி சாத்தியமற்ற தீர்வு என்றும் இந்திய அரசு நண்பன் அல்ல அது எதிரி என்பதையும் தோழர் சண் அன்று மிகவும் தெளிவாகவும் உறுதியாகவும் எடுத்துரைத்தது இன்று நடைமுறையில் நிருபணமாகியுள்ளது. அதுமட்டுமன்றி தமிழ் மக்கள் பாதுகாப்பு பேரவை இயக்கமும் தோழர் சண் அவர்களின் கம்யுனிஸ்ட் கட்சியின் வடபகுதிப் பிரிவும் சேர்ந்து "கீழைக்காற்று " என்னும் பத்திரிகையை வெளியிட்டன. இதற்குரிய பணிகளில் தோழர்கள்

சிவம் ரத்தினம் சிவராசா ஆகியோரின் பங்களிப்புகள் அளப்பரியன. தோழர் சண்முகதாசன் அவர்கள் எழுதிய "ஒரு கம்யூனிச போராளியின் அரசியல் நினைவுகள்" என்னும் அவருடைய சுயசரித நூலின் தமிழ்பதிப்பை நானும் இந்திய நக்சலைட் தோழர்களும் சேர்ந்து அச்சிட்டு வெளியிட்டோம். இதற்கு அப்போது இந்தியாவில் தங்கியிருந்த தோழர் ரத்தினம் அவர்கள் கொடுத்த ஊக்கமும் ஆதரவுமே முக்கிய காரணமாகும். மேலும் தோழர் சண்முகதாசன் அவர்களை சந்தித்து இதற்கான சம்மதத்தையும் மூலப்பிரதியையும் நான் பெற்றுக் கொள்வதற்கு அப்போது கொழும்பில் தங்கியிருந்த தோழர் சிவராசா பெரிதும் உதவினார். இந்த நூலின் ஆங்கில பதிப்பின் முன்னுரையில் தோழர் சண்முகதாசன் அவர்கள்

"1983 யூலைக்குப் பின்னர் மேலை நாடுகளுக்கு அகதிகளாக சென்று சில்லறை வேலைகளைப் பார்க்கும் தமிழ்த் தோழர்களுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். இவ் நூலின் பிரசுரச் செலவில் பெரும் பகுதியை அவர்களே ஏற்றுக்கொண்டார்கள்"

என்று குறிப்பிட்டுள்ளார். இவ்வாறு இந்த தோழர்கள் எங்கு சென்றாலும் எந்த சூழ்நிலையில் இருந்தாலும் தங்களால் இயன்ற பணிகளை செய்து கொண்டிருந்தார்கள் என்பதையே அவர்களது வரலாறு முழுவதும் எமக்கு எடுத்துக் காட்டுகிறது.

தோழர் சிவம் அவர்கள் கனடாவுக்கு புலம்பெயர்ந்த பின்னர் மாற்றுக் கருத்துக்காகவும் தமிழ்மக்களின் சுயநிர்ணய உரிமைக்கான போராட்டத் திற்காகவும் ஒரு ஸ்தாபனத்தின் தேவையை வலியுறுத்தி தேடகத்தை ஆரம்பிப்பதில் முன்னின்று உழைத்து இறக்கும் இறுதித்தறுவாய் வரை அதன் நோக்கத்திற்காக உழைத்தவர் என்றும் அண்மைக்காலமாக நிலவி வந்த அரசியல் மந்த நிலையை உடைத்து மீண்டும் புத்தெழுச்சியுடன் தேடகம் செயற்பட உந்தியவர் என்றும் தேடகம் அமைப்பு தோழர் சிவம் பற்றிய தனது குறிப்பில் தெரிவித்துள்ளது. இது தோழர் சிவம் அவர்கள் கனடாவில் செய்த பணிகளுக்கு சாட்சியாக இருப்பதோடு அவர் இறக்கும் வரை தனது கொள்கைகளில் உறுதியாக இருந்து தன்னால் இயன்ற பணிகளை செய்துள்ளார் என்பதையும் எடுத்தியம்புகிறது. அதேபோல் இந்தியாவில் மரணமடைந்த தோழர் ரத்தினம் அவர்களும் இலங்கையில் மரணமடைந்த தோழர் சிவராசா அவர்களும் இறுதிவரை தமது கொள்கைளில் உறுதியாக இருந்ததையும் தமது நெருக்கடியான வேளைகளிலும் அவர்கள் தங்களால் இயன்ற பணிகளை மேற்கொண்டதையும் நாம் காணமுடியும். மிகவும் நெருக்கடியான இக் காலகட்டத்தில் இத் தோழர்கள் எம் மத்தியில் இல்லாதது மிகவும் வேதனைக்குரிய விடயமாகும். இத் தோழர்கள் இன்று எம் மத்தியில் இல்லாவிடினும் அவர்கள் விட்டுச்சென்ற அனுபவங்களும் படிப்பனைகளும் எம் முன்னால் உள்ளன. அவர்கள் இன ஒடுக்கு முறைக்கு எதிராக தரகு முதலாளியத்திற்கு எதிராக அந்நிய ஏகாதிபத்தியத்திற்கு எதிராக புதிய ஜனநாயகப் புரட்சியை முன்னெடுத்தார்கள். மாக்சிய லெனிச மாவோசியத்தை தத்துவ வழிகாட்டியாக கொண்டிருந்தார்கள். அவர்கள் காட்டிய பாதையில் தொடர்ந்து பயணம் செய்து புதிய ஜனநாயகப் புரட்சியை முன்னெடுப்பதே அவர்களுக்கு நாம் செலுத்தும் உண்மையான அஞ்சலியாக இருக்கும்.

இலங்கை ஒரு சிறிய தீவாக இருந்தாலும் கூட இலங்கை மக்கள் ஒரு வீரம் செறிந்த போராட்ட குணாம்ச வரலாற்றை உடையவர்கள். அவர்கள் அரசர்களுக்கு எதிராக மட்டுமல்ல போர்த்துக்கேயர் ஒல்லாந்தர் ஆங்கிலேயர் ஆகியோரின் ஆக்கிரமிப்புக்கு எதிராகவும் போராடினார்கள். எவர்களையும் நீண்ட காலம் ஆழ இலங்கை மக்கள் அனுமதிக்கவில்லை என்பதை வரலாற்றில் இருந்து நாம் அறிந்து கொள்ள முடியும். ஆனால் தலைமைகளின் துரோகத்தினால் எமது மக்களின் போராட்டம் இன்றுவரை வெற்றி பெறவில்லை. எனினும் மாபெரும் ஆசான் தோழர் கார்ல் மாக்ஸ் அவர்கள் கம்யுனிஸ்ட் அறிக்கையில் சுட்டிக்காட்டியது போல் எம்மால் வெல்லப்படுவதற்கு ஒரு உலகம் காத்திருக்கிறது. இறுதி வெற்றி உறுதி எமக்கு.

எவ்வளவு நல்ல தோழர்களாக இருந்தாலும் அவர்கள் தனிப்பட்ட முறையில் எவ்வளவு சிறந்த பணிகளை செய்தாலும் ஒரு பலமான கட்சியின் அங்கமாக ஆதாரமாக இல்லாவிடின் அவையாவும் பயன் உள்ளவையாக அமையமாட்டா. தோழர்கள் சிவம் ரத்தினம், சிவராசா ஆகியோரின் அனுபவங்களை உற்று நோக்கும் போது இதனை நாம் உணர்ந்து கொள்ள முடிகிறது. எனவே இனியும் இதுபோன்ற நிலை அமையாவண்ணம் ஒரு புரட்சிகர கட்சியை கட்டும் பணியில் அக்கறை உள்ள தோழர்கள் ஈடுபட வேண்டும் . இதுவரை பல்லாயிரக்கணக்கான மக்கள் படுகொலை செய்யப்பட்டுள்ளார்கள். பல பெண்கள் கற்பழிக்கப்பட்டுள்ளனர். பல கோடி ரூபா பெறுமதியாக சொத்துக்கள் அழிக்கப்பட்டுள்ளன. ஆயிரக்கணக்கான மக்கள் அகதி முகாம்களில் அடைக்கப்பட்டுள்ளனர். இவ்வளவற்றையும் செய்த இலங்கை இனவெறி அரசும் அதற்கு துணை புரிகின்ற இந்திய விரிவாதிக்க அரசும் மக்களின் போராட்டத்தை அடக்கிவிட்டதாக எக்காளமிடுகின்றன. கொன்று குவித்த மக்களின் புதைகுழிகளின் மேல் நின்று கொக்கரிக்கின்றன. அவர்களுக்கு தோழர் செரபண்டாஜியின் வரிகளை பதிலாக முன்வைக்க விரும்புகிறேன்.

நாம் புதைக்கப்படுவதில்லை.
விதைக்கப்படுவர்கள் - எனவே
மீண்டும் முளைத்து வருவோம்.
எம்மை துண்டு துண்டாய் வெட்டி
ஆழ்கடலில் வீசி எறிந்தாலும் -நாம்
பொங்கும் கடல் அலைபோல்
மீண்டும் மீண்டும் எழுந்து வருவோம்.
(நன்றி-தோழர்.செரபண்டாஜி)

தோழர் சிவம், ரத்தினம், சிவராசா ஆகியோரை என்றும் நினைவில் கொள்வோம். அவர்களின் பாதையில் தொடர்ந்து செல்ல திட சங்கற்பம் பூணுவோம். இதுவே நாம் அவர்களுக்கு செலுத்தும் உண்மையான அஞ்சலியாக அமையும். தோழர்கள் சிவம் ரத்தினம்சிவராசா புகழ் ஓங்குக.மாக்சிய லெனிச மாவோசிச வழிகாட்டலில் தமிழ் சிங்கள உழைக்கும் மக்களின் ஐக்கியத்தின் மூலம் புதிய ஜனநாயகப் புரட்சியை முன்னெடுப் போம்.

**- பாலன் -**

# நாடு கடந்த தமிழீழ அரசும் புலிகளின் அரசியல் வறுமையும்

தமிழீழ விடுதலைப் போராட்டமும், தமிழீழ விடுதலைப் புலிகளின் போராட்டமும் இன்று இக்கட்டான நிலையை எட்டியுள்ளது. தமிழீழ விடுதலைப் புலிகள் இராணுவ ரீதியாக தோற்கடிக்கப்பட்ட பின்னர் தமிழர்களின் நியாயமான உரிமைக்கான போராட்டம் குறித்தான ஆரோக்கியமான விமர்சனங்கள் எதும் எழாமலும், இலங்கைத் தமிழரின் எதிர்காலம் குறித்து பரந்துபட்ட ஆய்வுகளுக்கும் விமர்சனங்களுக்குமான சுதந்திர தளம் எழாமையும் எதிர்காலம் குறித்த ஒரு புதிய பாதைக்கு தகுந்த அடிப்படையின்மையையும் வெறுமையும் இன்னும் தொடர்கிறது.

இராணுவ ரீதியாக தோற்கடிக்கப்பட்டு அதன் தலைமையும் அழிக்கப்பட்ட பின்னர் விடுதலைப் புலிகள் தமது கடந்த கால அரசியல் மற்றும் இராணுவ வழிமுறைகள் குறித்து எந்தவொரு விமர்சனங்களையும் முன்வைக்காததும், தமது கடந்தகால வரலாற்று தவறுகள் குறித்து மௌனம் சாதித்து வருவதும் ஒரு ஆரோக்கியமான தளத்திற்கு எம்மை இட்டுச் செல்லாது. விடுதலைப் புலிகளை விமர்சிப்பவர்கள் இன்றைய தோல்விக்கு வெறுமனமே புலிகளை மட்டுமே குற்றம்சாட்டி நகரும் போக்கே தொடருகிறது. இதுவும் எம்மை எந்தவொரு நிலைக்கும் கொண்டுவந்து விடப்போவதில்லை. கடந்த 36 ஆண்டு காலமாக போராடிய விடுதலைப்புலிகள் எமது கடந்தகால போராட்டத்தில் கணிசமான பங்களிப்பை செய்தவர்கள் என்ற வகையில் எமது போராட்டத்தின் பின்னடைவுக்கான காரணங்களை ஆராய்வதும், விமர்சனங்களுக்கான சுதந்திரதளத்தை உருவாக்குவதும் அவர்களது வரலாற்றுக் கடமையாகும். குறிப்பாக விடுதலைப் புலிகள் சுயவிமர்சனங்களை முன்வைக்காது பரந்துபட்ட ஐக்கியத்தை வேண்டி நிற்பது என்பது அவர்களில் எந்த மாற்றத்தையும் காட்டவில்லை. விடுதலைப் புலிகள் சுயவிமர்சனத்தை முன்வைப்பது ஒன்றே அவர்கள் மீதான நம்பகத்தன்மையை ஏற்படுத்துவதுடன் பன்முகத் தன்மையுடன்கூடிய ஐக்கியத்தை கட்டியெழுப்ப உதவியாகவிருக்கும்.

விடுதலைப் புலிகளின் தோல்வியை வெறுமனமே புலிகளின் தோல்வியாக மட்டுமே கருதமுடியாது. இத் தோல்வி ஒட்டுமொத்த தமிழர்களின் தோல்வியே. தமிழ் மக்களின் மத்தியில் ஆதிக்கம் செலுத்தி வந்த தமிரசுக்கட்சி-தமிழர் விடுதலைக் கூட்டணி அரசியலின் தொடர்ச்சியாகவே விடுதலைப்புலிகளும் உருவாகினார்கள். விடுதலைப் புலிகள் ஒரு ஆயுதம் தாங்கிய தமிழர் விடுதலைக் கூட்டணியே. ஏதோவொரு வகையில் ஈழத்தமிழர்கள் குறுந்தேசியவாத போக்கை தமது பிரதான அரசியாலாக கொண்டிருந்தனர். மாற்றுக் கருத்தியலாக சோசலிச தத்துவார்த்த அமைப்புகளின் தோல்விகளும் குறுந்தேசியவாத அமைப்புகளுக்கு உந்துசக்தியாகவே அமைந்தன. தமிழ் மக்களின் நியாய உரிமைக்காய் ஒரு பொது வேலைத்திட்டத்தை வகுக்க முடியாமல் போனமைக்கு அனைத்து விடுதலை அமைப்புகளும் பொறுப்பேற்கவேண்டும். விடுதலைப் புலிகளின் இராணுவ ஒடுக்குமுறையால் தம்மை தக்கவைக்க முடியாத அமைப்புகள் இலங்கை அரசிடம் தஞ்சமடைந்து தமது இருப்பை தக்கவைக்க தமிழர்களின் உரிமைப் பிரச்சினையை இரண்டாம் பட்சமாக்கியமை விடுதலைப் புலிகளின் குறும்தேசியவாத போக்குக்கு ஒத்துழைப்பையே செய்தது. குறுந்தேசியவாத போக்கை நிராகரித்து புதிய போக்கை பின்பற்றிய பல அமைப்புகள், குழுக்கள் புலிகளினால் அழிக்கப்பட்டமையும், அவர்களில் ஒருசாரார் விடுதலைப் புலிகளின் ஆதரவாளர்களாகவும், இன்னுமொரு சாரார் புலி விரோதிகளாகவும், இன்னுமொரு சாரார் மௌனிகளாகவும் ஆனார்கள்.

இந்த ஓட்டத்திலிருந்து சற்று விலகி தமிழர்களின் சுயநிர்ணய உரிமைக்காய் போராட்ட அரசியல்-இராணுவ நடவடிக்கை குறித்த சாதக பாதக விமர்சனங்களோடு தமிழ் மக்களுக்காய் தொடர்ந்தும் தேடகம் குரல் கொடுத்து வந்தது. ஆனாலும் இன்றைய தோல்வியில் நாமும் ஒரு பங்காளிகள் என்பதற்கு மறப்பேதுமில்லை. தமிழ் மக்களின் அடிப்படை அரசியல் பிரச்சினையை முன்வைத்து பரந்துபட்ட ஒரு மூன்றாவது அணியொன்றை கட்டியெழுப்ப புலம்பெயர்ந்த மக்களாகிய எமக்கு முடிந்திருக்கும். ஆனால் அதற்கான முன்னெடுப்பை தேடகம் போன்ற அமைப்புகள் எடுக்காதமை இன்றைய தோல்வியில் நாமும் பங்காளிகள் ஆகவேண்டியே உள்ளது.

புலம்பெயர்ந்த நாடுகளில் கணிசமான அளவு ஆதிக்கம் செலுத்தும் விடுதலைப் புலி அரசியலும் அதன் பிரச்சார

சாதனங்களும் தமிழ் மக்களை மீண்டும் ஒரு பிழையான பாதைக்குள் இட்டுச் செல்லும் கைங்கரியங்களிலேயே ஈடுபட்டு வருகின்றன. இன்று விடுதலைப் புலிகள் புதிய “நாடு கடந்த அரசு” குழுவை தெரிவு செய்துள்ள நிலையில் அவர்களது கடந்த கால சாதக-பாதக நிலைகள் குறித்து தமிழ் மக்களுக்கு எடுத்துச் சொல்லவேண்டிய தேவை புதிய “நாடு கடந்த அரசு” குழுவுக்கு உள்ளது. “நாடு கடந்த அரசு” தங்களது கடந்த அரசியல், இராணுவ வேலைத் திட்டங்கள் குறித்த விமர்சனங்களை முற்வைக்கவேண்டும். கடந்தகால பேச்சுவார்ததைகள் குறித்த தகவல்கள் அனைத்தும் பொது மக்களின் பார்வைக்கு தரப்படவேண்டும். விடுதலைப் புலிகள் தங்கள் சம்பந்தமான ஆரோக்கியமான விமர்சனங்களை வெளிப்படையாக கோரவேண்டும். இதற்காக அவர்களின் பிரச்சார ஊடகங்களை பாவிக்க வேண்டும். எந்தவொரு புதிய முன்னெடுப்புகளுக்கு முன்பாகவும் விடுதலைப் புலிகள் அடிப்படையில் பல மாற்றங்களை செய்யவேண்டிய தேவையுள்ளது. அந்த மாற்றங்கள் இல்லாத வரைக்கும் “தேசிய தலைவரின் வழியில்” என்ற அடை மொழி அச்சமான, ஆரோக்கியமற்ற எதிர்காலத்தையே எம் முன் நிறுத்தியுள்ளது. புலிகளின் கடந்த காலம் குறித்த ஆரோக்கியமான ஆய்வுகள் இல்லாத வரையும், அதன் கடந்த கால அராஜக அரசியல் மீது கட்டப்படும் புதிய முன்னெடுப்புகள் அனைத்தும் வலிமை இழந்தவையே.

வெறுமனமே ஒற்றைத் தன்மையுடன் இருக்காமல் கௌரவமான ஏனைய தீர்வுகள் குறித்தும் தமிழ் மக்கள் மத்தியில் விரிவான விவாதங்களை தோற்றுவிப்பதற்கான தேவையாயுள்ளது. ஆரோக்கியமான விட்டுக்கொடுப்புகளும், தேசிய இனங்களுக்கிடையிலான புரிந்துணர்வை வளர்ப்பதற்கான முன்னெடுப்புகளும் அவசியமாகிறது. சிங்கள மக்களுக்கிடையில் எமது போராட்டம் குறித்த நியாயத் தன்மையை கொண்டு செல்வதற்கான வேலைத் திட்டங்களை முன்னெடுக்காமையும், சிங்கள அப்பாவி மக்கள் மீதான தாக்குதல்களும் எம்மை இன்றைய நிலைக்கு தள்ளியமைக்கு முக்கிய காரணங்களில் சில. சிங்கள அப்பாவி மக்கள் மீது நடாத்தப்பட்ட அனைத்து வன்முறைத் தாக்குதல்களுக்கு விடுதலைப் புலிகள் பொறுபேற்றக வேண்டும். தமிழ் முஸ்லிம் மக்களிடையேயான முரண்பாடுகளை பகை முரண்பாடாக்கி முஸ்லிம் மக்கள் மீதான அடக்குமுறையும், பலவந்த வெளியேற்றமும், முஸ்லிம் மக்களின் படுகொலையும் இன்னமும் இரு இனங்களுக்கிடையேயான பகை நிலையை பேணியே வருகிறது. தமிழ்-முஸ்லிம் தேசிய இனங்களுக்கிடையேயான புரிந்துணர்வை வளர்ப்பதற்கு மிக முக்கியமாக விடுதலைப் புலிகள் தமது தவறுக்கு பகிரங்க மன்னிப்பு கோர வேண்டும். இன்று விடுதலைப் புலிகளின் தலைமை அழிக்கப்பட்ட நிலையில், விடுதலைப் புலிகளினால் உருவாக்கப்பட்ட “நாடு கடந்த அரசு” குழு புலிகளின் கடந்த கால தவறுகளுக்கு பொறுப்பு ஏற்கவேண்டும்.

முன்னர் எப்போதும் இல்லாத அளவில் ஈழத் தமிழ் மக்கள் மிக மோசமான அடக்குமுறையை எதிர் நோக்கி வருகிறார்கள். தமிழ் மக்களின் அடிப்படை ஜனநாயக, மனித உரிமைகள் மறுக்கப்பட்டு மிகவும் மோசமான நிலையிலேயே வாழ்ந்து வருகிறார்கள். தமிழ் மக்களின் நியாயமான உரிமைக்காய் போராடவும், குரல் கொடுக்கவும் வேண்டிய தேவை இன்னமும் விலகிவிடவில்லை. முழு இலங்கையின் ஜனநாயகமும் இன்று கேள்விக்குறியாகியுள்ளது. நாடு தழுவிய ஐக்கியத்திற்கூடாக அனைத்து மக்களின் அடிப்படை சுதந்திரத்தை வென்றெடுக்கவேண்டிய சூழ் நிலை இன்றுள்ளது. தேசிய இனங்களுக்கிடையேயான ஐக்கியம், சமத்துவம் என்பது பௌத்த சிங்கள இனவாத போக்கால் மிக மோசமான நிலையில் உள்ளது. இலங்கை அரசியலில் இந்த இனவாத போக்கை நிராகரித்து சமத்துவத்தை வென்றெடுக்கவேண்டிய தேவை இலங்கையில் நிரந்தர சமாதானத்தை வேண்டி நிற்கும் எல்லோருக்கும் உண்டு. இலங்கையில் சிங்களப் பேரினவாத போக்கு மாறாத வரையிலும் ஏனைய தேசிய இனங்கள் தொடர்ச்சியான ஒடுக்குமுறையை எதிர்நோக்கியபடியே இருக்கப் போகிறார்கள். இந்த ஒடுக்குமுறைக்கு எதிரான போராட்டங்களும் தொடர்ந்த வண்ணமே இருக்கப்போகிறது.

தமது அடிப்படை உரிமைக்கான போராட்டம் குறித்து தமிழ் மக்கள் சுதந்திரமாக கருத்து தெரிவிக்கவும் போராடவுமான சூழல் ஒன்று உருவாக்கப்படவேண்டும். எமது போராட்டம் அடிப்படையில் நீதிக்கும், சமத்துவத்துக்கும், சமாதானத்திற்குமான போராட்டம். எனவே இவற்றை அடிப்படையாகக் கொண்டு எமது போராட்டம் அமையவேண்டும். இது குறித்து நாம் கடந்த காலங்களிலும் குரல் கொடுத்து வந்திருக்கின்றோம். கருத்துக்களை கருத்துக்களால் முகம் கொடுக்கும் அரசியல் கலாச்சாரம் உருவாக்கப்படவேண்டும். வன்முறையால் அரசியலை குழிதோண்டிப் புதைக்கும் நிலையை நாம் அடியோடு மறுதலிக்கவேண்டும்.

எமக்கு, அடிப்படை மனித உரிமைகளை நிலை நாட்டும் அரசியல் தேவைப்படுகிறது. யாரோ ஒருவர் வழி நடாத்தும் மந்தைகளாக தமிழ் மக்கள் இனியும் தொடரும் நிலை எமக்கு தேவையில்லை. அனைத்தும் மக்களுக்கும் தங்களது எதிர்காலம் குறித்து பேசவும், எழுதவும், வாதிடவும், போரிடவும் உரிமைவேண்டும். அத்தகைய நிலையில் புதிய தேடல்களும், விவாதங்களும் தொடரட்டும். புதிய சிந்தனையும், பாதையும் இன்று எமக்கு அவசியமாகிறது. அது தமிழரசுக் கட்சி - தமிழர் விடுதலைக் கூட்டணி - தமிழீழ விடுதலைப் புலிகள் என்பனவற்றின் அரசியல் தொடர்ச்சியாக இருக்க முடியாது. மானிடத்தின் மேன்மைக்காய் சிந்திக்கும் மக்களின் சக்தி தலைப்படவேண்டும். அதை உருவாக்கும் வேலையே இன்று எம்முன்னுள்ள தேவை.

தமிழர் வகைதுறைவள நிலையம் (தேடகம்)
ரொரன்டோ, கனடா
thedakam@gmail.com
11.10.2009

Daphne Odjig - Genocide No, 1, 1971

# நான் தண்டனை கோருகிறேன்

-பாப்லோ நெரூடா-

நான் அழுவதற்கு வரவில்லை
அவர்கள் விழுந்த இடத்தில்
இன்னும் உயிரோடு இருப்பவர்களே!
உங்களிடம் பேசத்தான்...
உங்களை நோக்கியும்
என்னை நோக்கியும்
நான் வேண்டுவது இதுதான்...
இறந்து கிடக்கும் நம்மவர்கள் பேராலே
கேட்கிறேன்...
தண்டனை அளியுங்கள்!

நமது தந்தையர் நாட்டு மண்மீது
சிகப்பு இரத்தத்தை
சிதற வைத்தவர்களுக்கு
தண்டனை அளியுங்கள்!

இந்த சவங்களின்மீது சிம்மாசனம் ஏறிய
அந்த துரோகிகளுக்கு
தண்டனை அளியுங்கள்!
மறப்பவர்களுக்கும்
இந்தக் கொடுமைகளை
மன்னிக்கச் சொல்பவர்களுக்கும்
தண்டனை கொடுங்கள்!

நான் எல்லோருடனும்
கைகுலுக்க விரும்பவில்லை
ரத்தக்கறை படிந்த கரங்களைத்
தொடுவதற்கே விரும்பவில்லை
நான் தண்டனை கோருகிறேன்...!

தூர தேசங்களுக்கு அவர்களை
தூதுவராய் அனுப்புவதை
அமைதி வரும்வரை
அவர்களை அறைகளில் அடைப்பதை
நான் அடியோடு விரும்பவில்லை.

இங்கேயே...
இப்பொழுதே...
திறந்த வெளியிலே
நீதி வழங்குங்கள்!
அவர்களுக்குரிய தண்டனையை
என் கண் முன்னே
நிறைவேற்றுங்கள்...!



TAMIL RESOURCE CENTRE
தமிழர் வகைதுறைவள நிலையம்